# காவேரி



நந்தன
கார்த்திகை

-8-



இப்பொழுது சென்னை கிரௌன், வெல்லிங்டன்
இரு தியேட்டர்களிலும், மற்றும் தமிழ்நாடெங்கும்
நடைபெறுகிறது.
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி பிலிம் கம்பெனியின்
ஏழை
உழவன்
டைரக்ஷன் - கே.பி.நாகபூஷணம்
அஞ்சலிதேவி, கண்ணாம்பா, ஸ்ரீராமமூர்த்தி
லிங்கமூர்த்தி, ரேலங்கி, துரைஸ்வாமி நடித்தது

# நீங்கள் இன்று உங்கள் பற்களை
# மக்ளீன் செய்தீர்களா?



"நான் குழந்தை பருவமுதல் உங்கள் பற்பசையைத்தான் உபயோகித்து வருகிறேன். எனது வெண்ணிறப்பற்களைக்கண்டு எத்தனையோ நண்பர்கள் புகழ்ச்சியாகப்பேசுகிறார்கள்"

அவளது பளபளப்பான பற்கள், ஆரோக்கியமான ஈறுகள். சுகந்தம் வீசும் சுவாசம் எல்லாம் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையினுல்தான். ஒரே சமயத்தில் அது பற்களை வெண்மையாக்கி, ஈறுகளைப்பலப்படுத்தி, சுவாசம் நறுமணமுள்ளதாக இருக்கச் செய்கிறது. உங்களுக்கும் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை அதே மாதிரி செய்ய முடியும். இன்றே தினமும் இரு முறை உபயோகிக்கத் துவங்குங்கள்.

இப்போது பெரிய அளவிலும், சிக்கனமான மாபெரும் அளவிலும் கிடைக்கிறது.




**பற்களை அதிக வெண்மை யாக்குகிறது**

வர்த்தக விவரங்களுக்கு :-

ஜே. எல். மாரிஸன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிட்.,
தபால் பெட்டி 6527, பம்பாய் 26. தபால் பெட்டி 387, கல்கத்தா
தபால் பெட்டி 1370, மதராஸ்.

MTY-20 TAM.

# சரித்திர இந்தியா

## புண்யஸ்தலமான காசி

புனிதமான கங்கா நதியும் காசி விச்வநாதரின் திருக்கோயிலும், புராதன கலாச்சாரத்துடன் ஒன்றுபட்டு, பனாரஸ் நகரத்தை இந்துக்களின் மஹோன்னத யாத்ரீக ஸ்தலமாக்கியுள்ளன. கோயில்கள் நிறைந்த இந்நகரத்திற்கு இடையருது யாத்ரீகர்கள் வந்த வண்ணமா யிருக்கின்றனர். இவர்கள் அனைவர்க்கும் மேன்மையான புத்தம் புதிய 'டீ' கிடைக்கச் செய்யவே இங்கு நான்கு டிப்போக்களுக்குக் குறையாமல் ப்ரூக் பாண்ட் விற்பனையாளர்கள் வைத்துள்ளனர்.




# ப்ரூக் பாண்ட் தேயிலை

இந்திய தேயிலைகளுள் சிறந்தது
இந்தியாவில் சிறந்த பாக்கெட்டுகளில் கிடைக்கும்.

காவேரி

# பொருள் அடக்கம்

நந்தன மலர் 12 | கார்த்திகை இதழ்



குறிப்பு:
'காவேரி'யில் வெளியாகும் கட்டுரைகளிலுள்ள பெயர்கள் கற்பனைப் பெயர்கள். அவைகளில் அடங்கிய அபிப்பிராயங்களும் அவற்றை எழுதியவர்களுடையனவே. அவைகளுக்குப் பத்திரிகாசிரியர் பொறுப்பாளியல்ல.

# காவேரி

நந்தன வருஷ மலர் 12 | "சென்றிடுவீர் எட்டுத்திக்கும்—கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்"—பாரதியார் | கார்த்திகை இதழ் 4

# ஆசாரியா கிருபளானி

கே. ஸ்ரீநிவாஸன்



ஆசார்யா கிருபளானி இன்று காங்கிரஸில் இல்லைதான். எனினும் அவர் நாட்டிற்குச் செய்த சேவையை நாம் மறக்கலாகாது. தேச பக்தியில் அவர் எத்தலைவருக்கும் சளைத்தவரில்லை. பிரஜா சோஷலிஸ்ட் கட்சித் தலைவரான ஆசார்யா எத்தகைய மாணிக்கம் என்பதை நாம் நினைப்பூட்டிக்கொள்வது அவசியம். அப்பெரியாரைக் காங்கிரஸ் மீட்டுக்கொள்ள வேண்டுமென்பதில் இக்கட்டுரையைப் படிக்கும் யாரும் அபிப்பிராய பேதம் கொள்ளமாட்டார்கள் என்று நம்புகிறோம்.

இந்திய அரசியல் அரங்கத்தில், காங்கிரஸிலும் சரி, இதர கட்சிகளிலும் சரி, இன்று பல தலைவர்கள் இருக்கிறார்கள் என்றால் அதற்குக் காரணபூதர் மஹாத்மா காந்திதான். பண்டித மோதிலால் நேருவை ராஜபோக வாழ்வு துறந்து கரடு முரடான அரசியல் பாதையைப் பின்பற்ற வைத்த அதே மகாத்மாதான் ஆசார்யா ஜே. பி. கிருபளானியையும் சுதந்திரப் போரில் ஒரு தொண்டராக்கி, பலாத்காரத்தில் முழு நம்பிக்கை உள்ளவரை, அஹிம்சையே பரம தர்மம் என்று நம்ப வைத்தார்.

கிருபளானி அரசியல் துறையில் ஈடுபடாவிட்டால் என்ன ஆகியிருப்பார் என்று கேட்டுப் பார்த்துக்கொண்டேன். இதற்கு விடையை அறிய விரும்பியபொழுது அவருடைய அந்தரங்க காரியதரிசியான ஸ்ரீகிருஷ்ணசாமி சொன்னார்:

ஒன்று கிருபளானி ஹிமாலயத்தில் ஒரு சாதுவாகவோ அல்லது பலாத்காரத்தால் தற்போதைய சர்க்காரைக் கவிழ்க்க முயலும் பயங்கர வாதியாகவோ இருப்பாரென்றார்.

ஸ்ரீகிருபளானி 1888-ஆம் ஆண்டில் ஹைதராபாத் (ஸிந்து) தில் பிறந்தார். பம்பாய் வில்ஸன் காலேஜிலும், கராச்சி ஸிந்து காலேஜிலும், பூனா பர்கூஸன் (Ferguson) காலேஜிலும் படித்து எம். ஏ. பட்டம் பெற்றார். மாணவராயிருக்கும் பொழுதே, பால கங்காதரதிலகர், அரவிந்தர் இவர்களுடைய அரசியல் திட்டங்களால் கவரப்பட்டு, சிற்சில நடவடிக்கைகளில் ஈடுபட்டதால் பம்பாய் வில்ஸன் காலேஜிலிருந்தும், ஸிந்து காலேஜிலிருந்தும் வெளியேற்றப்பட்டார். பிற்பாடு பீஹார் முஸபர்பூர் (Muzzafarpur) கல்லூரியில் சரித்திர ஆசிரியராகச் சேர்ந்தார். 1917ல் மகாத்மா காந்தி சுதந்திரப் போரின் முதல் அங்கமான சம்பாரன் சத்தியாக்ரகத்தை ஆரம்பித்தபொழுது, ஸ்ரீகிருபளானியும், தற்போதைய ஜனாதிபதி

ராஜேந்திர பிரஸாதும், காந்தியடிகளின் தொண்டர்களாகச் சேர்ந்தார்கள். அவுரிப் பயிர் (Indigo) செய்து ஆங்கிலேய முதலாளிகளின் சுரண்டலுக்கு ஆளான கிஸான்களை விடுவிக்க இயக்கப்பட்ட இந்த சத்தியாக்ரஹத்தில் ஸ்ரீ கிருபளானி சர்க்காரால் கைது செய்யப்பட்டு விடுவிக்கப்பட்ட பின்னர், அவுரி ஆராய்ச்சிக் கமிஷன் விசாரணையில் பெரும் பங்கு எடுத்துக்கொண்டார். முதல் சத்தியாக்ரகியாக ஏற்பட்ட அனுபவத்திலிருந்து அவருக்கு பயங்கர நடவடிக்கைகளிலிருந்த நம்பிக்கை அறவே ஒழிந்தது. 1918ல் ராஷ்டிரபதியான பண்டித மதன்மோஹன் மாளவியாவிற்கு அந்தரங்க காரியதரிசியாக இருந்து, 1919ல் காசி இந்து யுனிவர்ஸிட்டியில் வேலை ஒப்புக்கொண்டார். 1920ல் காந்திஜியின் முதல் ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட வேலையை ராஜிநாமா செய்தார். அடுத்த வருஷம் அதே காரணமாகச் சிறையிடப்பட்டார். ஜெயிலிலிருந்து விடுவிக்கப்பட்ட பின்னர் காசியிலேயே காந்திஜியின் தேச நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றக் காந்தி ஆச்ரமத்தை ஸ்தாபித்தார். அவரால் உத்தரப் பிரதேசத்தில் ஆரம்பிக்கப்பட்ட நூல் நூற்கும் அரங்கங்கள் இன்றும் மிகவும் ஊக்கமாக வேலைசெய்வதுடன் மீரத்திலிருக்கும் காந்தி ஆச்ரமம் தேசத்திலேயே பெயர் பெற்றுள்ளது. 1923ல் மகாத்மாவின் கட்டளைக்கிணங்க, குஜரத் வித்யா பீடத்திற்குத் தலைமை ஆசிரியரானார். அதுமுதல் அவருடைய பெயருக்கு முன்னால் ஆசாரியா என்ற பட்டம் வழங்கலாயிற்று. ஐந்து வருஷங்கள் இடைவிடாமல் வித்யா பீடத்திற்கு உழைத்த பின்னர் திரும்பவும் மீரத் ஆச்ரமத்திற்குச் சென்று, கிராமப் புனருத்தாரணத்தில் ஈடுபட்டார். 1930-ல் உப்புச் சத்தியாக்கிரகத்தில் பங்கு எடுத்ததற்காக ஒரு வருஷம் சிறைவாசம் கிட்டிற்று. அதன் பின்னர் பலதடவை சிறைவாசம் அனுபவித்தார்.

1934ல் பீஹார் பூகம்பத்தில் அனாதைகளாக்கப்பட்ட பல்லாயிரக்கணக்கான மக்களைத் திரும்பவும் வாழ்வில் வேரூன்ற வைக்கும் தொண்டிலும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்குப் பொதுக் காரியதரிசியாக 12வருஷங்கள் இடைவிடாமல்அவர் உழைத்தும் யாரும் அறிந்ததே 1945 வருஷம் ராஷ்டிரபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு 1947ல் அவர் பதவியைத் துறந்தார். அரசியல் நிர்ணயசபையில் அங்கத்தினராகவும் பார்லிமெண்டு மெம்பராகவும் இருந்து அவர் செய்த தொண்டை யாரும் மறக்க முடியாது.

உண்மைக் காந்தியத்தில் நம்பிக்கையுள்ளவர் ஒருவர் இருக்கிறாரென்றால் அவர் கிருபளானியே. 1945ல் பிரிட்டிஷ் மந்திரி சபை தூதுகோஷ்டி இந்தியாவிற்கு வந்து இந்தியத் தலைவர்களுடன் அரசியல் சுதந்திரம் சம்பந்தமாகப் பேச்சுவார்த்தைகள் நடத்திய பின்னர், காங்கிரஸ் தலைவர்கள் ஸ்ரீ ஜவஹர்லால் நேரு, சர்தார் படேல் உள்படத் தூதுகோஷ்டியின் தூரகால திட்டத்திற்கு இணங்கி, சம்மதமும் தெரிவித்துவிட்டார்கள். இந்தத் திட்டத்தில் மகாத்மா காந்திக்குச் சிறிதும் நம்பிக்கையும், சம்மதமும் இல்லை. அதேபோல் ஸ்ரீ கிருபளானிக்கும் சம்மதமில்லாததால் அவர் காந்திஜியை அணுகி, தம்முடைய அபிப்பிராயத்தைக் கடைசி நிமிஷம் என்னும் தறுவாயில் தெரிவித்தார். காந்தியடிகள் கிருபளானியை அவர் அபிப்பிராயத்திற்கிணங்க ராஷ்டிரபதி பதவியை ராஜிநாமா செய்து, பிரிட்டிஷ் மந்திரி சபைக் கோஷ்டித் திட்டத்திற்கு எதிராக வேலைசெய்யலாமென்று அனுமதித்ததின்பேரில், பாதி ராத்திரியில் ஸ்ரீ கிருபளானியின் ராஜிநாமா நேரு, படேலுக்குத் தெரிவிக்கப்பட்டது. ஸ்ரீ கிருபளானியின் எதிர்பாராத ராஜிநாமா தேசத்தின் சரித்திரப் போக்கையே மாற்றி, நேரு படேலின் சம்மதமும் வாபஸ் வாங்கப்பட்டது. ஸ்ரீ கிருபளானியும் தம் ராஜிநாமாவைத் திரும்பப் பெற்றுக்கொண்டாரென்பது இது வரை வெளி வராத உண்மை.

ஸ்ரீ கிருபளானிக்குக் காங்கிரஸ் ஸ்தாபனத்தின் நேர்மையிலிருந்த நம்பிக்கை குறைந்ததின் பயனாக நாஸிக் காங்கிரசுக்குப்பிறகு கிஸான் மஜ்தூர் பிரஜா கட்சி உதயமாயிற்று. ஸ்ரீ கிருபளானி பதவிகளில் தமக்குப் பங்கில்லை என்றதாலேயே காங்கிரஸை விட்டு வெளியேறினார் என்று சிலரின் கூற்று. ஸ்ரீகிருபளானிக்கு முதலில் மேற்கு வங்காள கவர்னர் பதவியும், பிறகு பீஹார் கவர்னர் பதவியும் மத்திய சர்க்காரால் பிரேரிக்கப்பட்டு, கிருபளானியால் மறுதளிக்கப்பட்டன என்பது வெகு சிலருக்கே தெரியும். இத்துடன் ஸ்ரீ கிருபளானி திரும்பவும் மாஸ்கோவிற்கு ஸர். எஸ். ராதாகிருஷ்ணனுக்குப் பிறகு இந்திய ராஜ தூதராகப் போக வேண்டுமென்ற மத்திய சர்க்கார் திட்டமும் அவரால் மறுக்கப்பட்டது.

இன்று ஸ்ரீகிருபளானி பிரஜா சோஷலிஸ்ட் கட்சியின் தலைவராயிருந்தபோதிலும் காந்தியத்தில் அவருக்கிருக்கும் நம்பிக்கையும், காந்திஜியே பெரிய பொதுவுடைமை வாதி என்ற அபிப்பிராயமும் அவரிடம் பலமாக இருக்கின்றன.

# டில்லித் தபால்

கே. ஸ்ரீநிவாஸன்

சந்தோஷமும் துக்கமும் மாறி மாறி வாழ்க்கையில் வரும் என்ற வேதாந்தம் சென்னை மாகாணத்தைப் பொறுத்த வரையில் முற்றிலும் உண்மை என்றே தோன்றுகிறது. சென்ற தேர்தல்களுக்குப் பிறகு காங்கிரஸ் மண்ணைக் கவ்வியதும், மற்றத் தான்தோன்றிகள் கம்யூனிஸ்ட்கள் சுயேச்சையாளர்கள் உள்பட, சர்க்கார் அமைக்கலாம் என்று கனவு காண, மக்கள் எப்படி நம் மாகாணத்தின் தலையெழுத்தோ என்று கலங்கியதும் இன்னும் நம் மனதைவிட்டு அகலவில்லை. யார் செய்த புண்ணியமோ அரசியலைவிட்டு ஓய்வு எடுத்துக்கொள்ளத் திட்டமிட்டிருந்த ராஜாஜி அரசியல் மேடையில் மறுபடியும் தோன்றி, கம்யூனிஸ்ட்களின் களிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்து, காங்கிரஸ் சர்க்கார் அமைத்து, அது கவிழாது என்றும் அசெம்பிளியில் நிரூபித்தார். இவ்வளவும் அவர் மாஜி காங்கிரஸ்காரர் என்பதால் சாத்தியமாகவில்லை. மாகாணத் தலைமை ஏற்பவர் ஸ்ரீராஜாஜி என்ற மனிதரின் மாசற்ற குணத்திற்காகவே.

ராஜாஜியின் சாதனைகள் தான் என்ன? வந்ததும் வராததுமாகக் கம்யூனிஸ்ட் கொட்டத்தை அடக்கி அவர்களை எதிர்க்க வேண்டும் என்று அறைகூவி, "கம்யூனிஸ்ட்கள் என் எதிரி" என்றார். பிறகு சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் கவலைகளையும் இன்னல்களையும் ஒருவாறு தீர்த்து, அவர்களின் ஒத்துழைப்பை நிச்சயப்படுத்திக் கொண்டார். அதன் பின்னர் நெசவாளர்களின் துயரங்களை எடுத்துரைத்து, அவர்களின் கஷ்ட நிவர்த்தி எப்படி ஏற்படக்கூடும் என்பதைத் தம் பகிரங்க அபிப்பிராயம் மூலம் எடுத்துக் கூறினார். காங்கிரஸ் தோல்விக்கு அடிப்படைக் காரணமான மிராசுதார்—கிஸான் தகராறுகளைத் தீர்த்து, சமரசம் ஏற்படுத்த, தஞ்சை ஜில்லா அவசரச் சட்டம் பிறப்பித்தார்.

இந்தச் சமயத்தில் தான் ராஜாஜி சர்க்காரிடம் மற்றக் கக்ஷிகளுக்கு மதிப்பு ஏற்பட்டதுடன் தமிழ்நாடு உழைப்பாளர்கள் கக்ஷியிலிருந்து தனிப்பட்டவர்களும் தலைவர்களும் ஆதரவு காட்ட ஆரம்பித்திருக்கிறார்கள். ஐக்கிய முன்னணி, பிரஜா—சோஷலிஸ்ட் கக்ஷி உதயமானவுடனேயே, கலகலக்க ஆரம்பித்தது. இப்பொழுது சுயேச்சையாளர்கள்கூட அதைக் கைவிடத் தீர்மானித்திருக்கிறார்கள்.

தமிழ்நாட்டுக்கு உண்மையிலேயே நல்ல காலம் உதிப்பது சில காங்கிரஸ்காரர்களுக்குப் பொறுக்கவில்லை. இவர்கள் வேறு யாருமில்லை. மன்னன் சத்தியமூர்த்தி போன்ற தீரர்கள் கட்டிய காங்கிரஸ் கோட்டையைச் சென்ற பத்து வருஷங்களில் கல் கல்லாகப் பெயர்த்து, பொதுத் தேர்தலில் தரைமட்டமாக்கின குழுவினரே. லஞ்சம், உறவினர்களுக்குச் சலுகை, நண்பர்களுக்குச் சலுகை முதலியவைகளை வளர்த்து, வகுப்பு ஜாதி பூசல்களுக்கு மறைமுக ஆதரவு கொடுத்து, காங்கிரஸைக் கடைசி யாத்திரைக்குக் கொண்டு வந்தவர்கள்.

இந்த அரசியல் வேதாளம் மறுபடியும் காங்கிரஸ் மரத்தைப் பிடித்துக்கொள்ளத் திட்டமிட்டு வேலை செய்து வருகிறதாக இங்கே தகவல் எட்டியுள்ளது. ராஜாஜி ஸ்ரீ காமராஜை எதிர்த்துத் தலைமைக்கு வரவில்லை. காவேரியில் போகும் காங்கிரஸ்காரர்களைக் கரையேற்றவந்த புண்ணிய சிலர். ஸ்ரீ ராஜாஜி காங்கிரஸ் ஸ்தாபனத்தின் கதவைத் தட்டி, தலைமைப் பிச்சை கேட்கவில்லை. காங்கிரஸைக் குட்டிச்சுவராக்கிய இதே பிரேத பிசாசங்கள் தான் பஜ்லுல்லா ரோடுக்குச் சென்று, ராஜாஜியை அபயக் குரல் கொடுத்து அழைத்தார்கள். இப்பொழுது "ஐயையோ ராஜாஜி வெற்றி கண்டு விட்டாரே; பிறகு நம் கதி எப்படி?" என்ற கிலி இவர்களைப் பிடித்துக்கொண்டு விட்டது. டில்லியில் ராஜாஜியைப்பற்றி ஒரே புகழாகப் பேசிக்கொள்வது இப் பக்தர்களுக்குப் பிடிக்காமலிருப்பது எனக்குத் தெரியும். ஆனால் இக்கோஷ்டியினர் ராஜாஜி சர்க்காரைக் கவிழ்ப்பதற்கும அவர் தலைமையை நீக்குவதற்கும் கையெழுத்து இயக்கம் ஆரம்பித்திருப்பது மக்களுக்கு மட்டற்ற அநீதி என்பதுடன் கம்யூனிஸ்ட் வலுவு காணும் சமயத்தில் பெரிய தேசத் துரோக

மாகும். அநியாயத்தையும் அக்கிரமத்தையும் கண்டிக்காமல் இருந்துவந்ததாலேயே காங்கிரஸ் தமிழ்நாட்டில் இக்கதிக்கு வந்தது. மறுபடியும் அந்த நிலைமை வராமல் பாதுகாக்கவும் சதி நிறைவேறாமல் செய்யவும் காங்கிரஸ்காரர்கள் கூட்டம்போட்டு, ராஜாஜி வேண்டும் என்று அப்பட்டமாகச் சொல்வது மிகவும் அவசியம்.

* * *

இந்தியா சுதந்திரம் எய்தி ஐந்து வருஷங்களாகிவிட்டன. ஆளப்பட்ட பிரிட்டிஷ் சாம்ராஜ்யவாதி தேசத்தைவிட்டு வெளியேறிவிட்டான். போவதை நல்லகாலத்தில் போய்விட்டால் பின் காலத்துக்காவது நல்லது என்ற சித்தாந்தத்தைக் கடைப்பிடித்து மூட்டையைக் கட்டினான் ஆங்கிலேயன்.

விழித்தெழுந்த இந்தியா சுற்றிப்பார்த்துக்கொண்டேயிருந்துவிட்டதை இந்தியாவின் பல பாகங்களிலும் உள்ள போர்ச்சுகல், பிரான்ஸ் போன்ற குட்டி சாம்ராஜ்ய வாதிகள் இந்தியா தன்னைக்கண்டு பயப்படுகிறது என்று எண்ணுவது என்றால் எவ்வளவு முட்டாள்தனம்?

நாளடைவில் இந்தியாவின் உடம்பில் ஒட்டிக்கொண்டிருக்கும் இந்த மூட்டைப் பூச்சிகள் தாமாகப்போய்விடும என்று எதிர்பார்த்தது இந்தியா. பிரஞ்சுக் குடியேற்றமான புதுச்சேரியிலும், மாஹியிலும். போர்ச்சுகலின் குடியேற்ற ஸ்தலமான கோவாவிலும் இந்தியா சுதந்திரம் அடைந்ததும் தாங்களும் இந்தியாவின் பாகங்களாக வேண்டும் என்று கோஷங்கள் மக்களிடமிருந்து எழுந்தன. இந்தச் சிறு பகுதிகள் அந்நிய நாடுகளின் கீழ்தான் இருக்கவேண்டும் என்று, இந்தப் பிராந்தியங்களில் உள்ள ஜனங்களில் நூற்றில் ஒருவர் கூடச் சொல்லவில்லை.

இந்த நிலைமையில்தான் இந்த இடங்களில் முக்கியமாகப் பிரெஞ்சு ஆதிக்கியம் உள்ள இடங்களில் பொதுஜன வாக்கெடுப்பு எடுக்க வேண்டும் என்ற முடிவு ஏற்பட்டது. பொதுஜன வாக்கெடுப்பு ஜனநாயக நாடுகளில் எந்தச் சச்சரவான விஷயத்தையும் முடிவு செய்யக் கையாளும் முறை. ஆனால் புதுச்சேரியில் நடந்ததென்ன?

புதுச்சேரியில் கௌபேர் என்றவர் ஒருவர் இருக்கிறார். இவர் தலைமை தாங்கும் ஸோஷலிஸ்ட் கக்ஷிக்கும் "ஸோஷலிஸத்"திற்கும் ஸ்னானப்ராப்திகூடக் கிடையாது. தடியெடுத்தவன் தண்டல்காரன், கல் எடுத்தவன் கல்லடிமங்கன் என்ற நாகரிகத்தைப் பின்பற்றுபவர்கள். ஆகவே இந்த நாகரிகக் காரர்களுக்குச் சுதந்திர இந்தியாவுடன் கலந்த வாழ்வு எப்படிப் பிடிக்கும்? முதல் முதலில் இந்தியாவுடன் ஐக்கியமாகவேண்டும் என்ற பிரசாரத்தை எதிர்த்த இந்தக் கைக்கூலிகள் சென்ற சில வாரங்களில் புதுச்சேரியில் கண்ணியம் உள்ளவர்களையும் இந்தியாவின் அநுதாபிகளையும் துன்புறுத்த ஆரம்பித்திருக்கிறார்கள். கொடுமைகள்கணக்கில் வரா.

இவையெல்லாம் போதாவென்று புதுச்சேரியில் தலைமுறை தலைமுறையாக இருந்த குடும்பங்களை இந்தியாவிற்குள் ஆயிரக் கணக்கில் விரட்ட ஆரம்பித்திருக்கிறார்கள்; இந்த நவீன முறை ஸோஷலிஸ்ட் கக்ஷியார்கள்.

நண்டு கொழுத்தால் வளையில் இருக்குமா என்ன? ஸ்ரீகௌபேர் நண்டு கொழுத்துவிட்டது என்பதில் சந்தேகம் சிறிதும் இல்லை. ஆகையாலேயே அவர் சகபாடிகள் புதுச்சேரியை ஒட்டியுள்ள இந்தியப் பிரதேசத்திற்குள் பிரவேசித்து ஜனங்களை அடிப்பது, கொள்ளை அடிப்பது போன்ற திருவிளையாடல்களில் இறங்கியிருக்கிறார்கள்.

இந்தப் பிரஞ்சு குடியேற்ற நண்டைப்பற்றி நேருஜியிடம் ஜனங்கள் முறையிட்டார்கள். "நேருஜி சொல்லட்டும், சுற்றியுள்ள கிராமத்தாரே புதுச்சேரியைச் சரிசெய்து விடுவோம்" என்று தமிழ்நாடு உழைப்பாளர்கள் கக்ஷித் தலைவர் சொன்னார்.

பிரஞ்சு சர்க்கார் இந்தக் கூத்திற்கென்ன பதில் சொல்லுகிறது? எங்களுக்கு என்ன தெரியும்? இவை ராஜீயப் பூசல்கள் என்கிறார்கள். இது ஹைதராபாத்தில் ரஜாக்கர்கள் சொன்ன பதிலை ஞாபகப்படுத்துகிறதல்லவா? ஆம்; ரஜாக்கர்கள் என்ன ஆனார்கள், அதே கதிதான் இவர்களுக்கும் ஏற்படப் போகிறது. இரண்டு நாடுகளுக்கு இடையே ஏற்படும் ஒப்பந்தத்தை இரண்டு தேசங்களும் மதிக்க வேண்டும். ஒரு சர்க்கார் மட்டும் தருமபுத்திரர்களாகவும் மற்றொன்று துரியோதனாதிகளாகவும் இருக்க

முடியுமா? இந்திய பலிஷ்டன் இதைப்பற்றி என்ன நினைக்கிருன் என்பதை ஜனங்களுக்கு எடுத்துரைக்கவே இந்திய சர்க்கார் சில காலாடி நடவடிக்கைகளைப் பற்றிய தகவல்களைச் சென்ற வாரம் வெளியிட்டார்கள். ஆனல் சர்க்கார் வெறும் பேப்பர் பிரசாரத்துடன் நிற்பார்கள் என்று எண்ண வேண்டாம். புலி பதுங்குவது பாய்ச்சலுக்கே. கூடிய சீக்கிரம் இந்திய சர்க்கார் நேரடி "போலீஸ் நடவடிக்கைகள்" எடுப்பார்கள் என்று தைரியமாக ஹேஷ்யம் சொல்லுகிறேன்.

* * *

பிரதமர் நேருஜிக்கு டில்லியில் உட்கார்ந்து ராஜ்யபாரம் நடத்துவது பிடிக்கிறதா அல்லது ஜனங்களிடையே சுற்றி அவர்களைப்பற்றித் தெரிந்து கொள்வது பிடிக்கிறதா என்று கேட்டால் சந்தேகமில்லாமல் அவருக்குச் சுதந்திர பக்ஷியாக இந்தியாவின் மூலை முடுக்குகளில் தம்மிஷ்டம்போல் திரிவதுதான் பிடிக்கிறது என்று சொல்ல வேண்டும். "இந்தியாவைக் கண்டு பிடித்தல்" என்ற அற்புத புஸ்தகத்தை எழுதிய இம்மேதை என்ன சொல்கிருர் என்ருல் இந்தியாவைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும் என்ருல் அதன் மூலை முடுக்குகளையும் நன்ருகத் தெரிந்துகொள்ள வேண்டும் என்கிருர்.

நேருஜி சமீபத்தில் அஸ்ஸாம், மணிபூர் முதலிய மலைப் பிரதேசங்களைப் பார்த்துத் திரும்பியதிலிருந்து "ஆஹா? உழைப்பாளிகளா? மணிபுரி வாசிகளைப்போல் எங்கே உண்டு?" என்ற பல்லவியைப் பாட ஆரம்பித்திருக்கிருர். இதற்குக் காரணம் அங்குள்ளவர்களின் எளிய வாழ்க்கையும் கஷ்ட ஜீவனமும். ஒரு படித்த பெண் விறகு சேகரித்து ஜீவன மார்க்கம் தேடியது அவர் மனதை மிகவும் கவர்ந்திருக்கிறது.

வெள்ளைக்காரர்கள் அரசாண்ட காலத்தில் மலைப்பிராந்தியங்களைப் பெரிய அதிகாரிகள் பார்வையிடும்பொழுது அங்குள்ள தலைவர்களுக்குச் சிவப்புச் சால்வை அளிப்பது வழக்கம். இது சிலாகிக்கத்தக்க பழக்கம் அல்ல. மலைவாசிகளை அடக்கி ஒடுக்கி வைக்க ஏற்படுத்தப்பட்டவர்கள் இத்தலைவர்கள். ஆகவே நேருஜி விஜயம் செய்த பொழுதும் இந்தப் பழக்கம் அனுசரிக்கப்பட்டது மிகவும் வருந்தத்தக்கது. இதை மலைவாசிகள் மிகவும் வெறுத்ததாக அங்கிருந்து வரும் பார்லிமெண்ட் மெம்பர்கள் தெரிவிக்கிருர்கள். வருங்காலத்திலாவது இந்தப் பழக்கங்களைக் கைவிடுவார்கள் என்று எதிர்பார்க்கலாம்.

* * * *

நெசவாளர்களின் விஷயமாக, ராஜாஜியின் வற்புறுத்தல் எவ்வளவு தூரம் வேலைசெய்திருக்கிறது என்பதை ஸ்ரீ நேருவின் புது உத்தரவு தெளிவாக்குகிறது. ராயலசீமை நிலைமையை நேரடியாகத் தெரிந்து கொண்ட நேரு மனம் உருகினர். அவர் பேசிய பொதுக்கூட்டங்களில் தனிப்பட்ட சம்பாஷணைகளிலும் ராயலசீமையின்நிலைமை இன்று நேற்று ஏற்பட்டதல்ல என்றும் அது பொருளாதாரச் சவால் என்றும் சொன்னர்.

அவர் சுற்றுப் பிரயாணத்தின் முடிவாக மத்திய சர்க்கார் சார்பில் ஒரு விசேஷ அதிகாரி ராயலசீமையில் கைத்தறித் தொழில் அமைப்பது பற்றி ஆலோசித்து ஒரு ரிபோர்ட் சமர்ப்பிக்க ஏற்படுத்தப்பட்டிருக்கிருர். நூல் சப்ளை கோவாபரேடிவ் சொஸைடிகள் மூலம் கொடுத்து, கேந்திர ஸ்தானங்களில் பல தறிகளின் ஐக்கிய சங்கம் ஏற்படுத்தி, வருடம் பூராவும் ஜனங்களுக்கு வேலை கிடைக்குமாறு செய்வதே இந்தத் திட்டத்தின் நோக்கம்.

சமீபத்தில் சென்னை அசெம்பிளி நிறைவேற்றிய நெசவாளர்கள்பற்றிய தீர்மானத்திற்கு இங்கு ஏராள ஆதரவு இருக்கிறது. சமீபத்தில் மத்திய சர்க்கார் கைத்தறி அபிவிருத்திக்கென்று ஒரு ஓங்கிய அதிகாரக் கமிட்டி ஏற்படுத்தி, இதற்கென்று நான்கு கோடி ரூபாய்கள் ஒதுக்கிவைத்தார்கள் அல்லவா! இதுவே ராஜாஜியின் கக்ஷிக்குப் பெரும் வெற்றி என்று கருதப்படுகிறது. ஆனல் மிகவும் துல்லிய வேஷ்டி, புடவைகள் நெய்வது கைத்தறிகளுக்கே பிரத்தியேகமாக ஒதுக்கிவைக்க வேண்டும் என்ற ராஜாஜியின் யோசனையை மில் முதலாளிகளுக்கு வக்காலத்து வாங்கிப் பேசும் மத்திய சர்க்காரின் வர்த்தக இலாகா கட்டாயம் ஒப்புக்கொள்ளாது என்று அறிகிறேன். இதுவரை மில் குழுவினர் "ஐயோ, இதென்ன அநியாயம், கைத்தறி தான் வேஷ்டி புடவை

கள் சப்ளை செய்வது என்றால் அவைகளின் விலை உயர்ந்துவிடுமே! போதாததற்கு இந்தப் பெரிய பொறுப்பைக் கைத்தறிக்காரர் களால் ஏற்கமுடியாதே" என்று புலம்பிக் கொண்டிருந்தனர்.

இப்பொழுது அவர்களின் வக்கீலான இந்தியன் டெக்ஸ்டைல் ஜர்னல் என்ன சொல்கிறது தெரியுமா? வேஷ்டி புடவைகள் கைத்தறிதான் செய்வது என்று சட்டம் செய்துவிட்டால் என்ன நேரும் தெரியுமா? சர்க்காருக்கு இப்பொழுது "நேர்த்தி" "வெகு நேர்த்தி" புடவை வேஷ்டிகளின்மேல் கிடைத்துவரும் வரிப்பணம் அரோகரா ஆகிவிடும். சுமார் 25 கோடி ரூபாய்களைக் கைவிடுவது என்றால் சும்மாவா? அதுவும் தற்பொழுது சர்க்காருள்ள பணக்கஷ்டத்தில்?

பல லக்ஷக்கணக்கான ஜனங்கள் தங்கள் பரம்பரைத் தொழிலை செய்யச்செய்து, அவர்கள் பட்டினியால் வாடிப் பிச்சை கேட்காமல் செய்வது என்பது ரூபாய் அணா பைசாக்களை மீறிய விஷயம். நேருஜீயைப் பொறுத்த வரை அவர் அபிப்ராயம் இதே. மக்கள் மானமாக வாழவேண்டுவதில் அவருக்கு மிஞ்சியவர் யாரும் இல்லை, ஆனால் வர்த்தக இலாகா புலிகள் தங்கள் புள்ளிவிவர ஜாலங்களால் அவரையும் சரி, அவர் தாத்தாவையும் சரி, திகைக்கவைத்துத் தங்கள் கக்ஷியையே ஊர்ஜிதம் செய்துகொள்வார்கள்.

சுமார் இரண்டு வருஷங்களுக்கு முன்னர் அதிநேர்த்தி துணிகள் விலை சரசரவென்று 25 சத விகிதம் ஏற்றப்பட்டன. இதற்குச் சர்க்கார் ஆதரவு நிரம்பக் கிடைத்ததற்குக் காரணம் வர்த்தக இலாகாவின் செல்வாக்கு மிகுந்த அதிகாரிகளே. இந்த விலை வீக்கத்திற்குப் பகவான் அறிய ஏதும் காரணம் இல்லை என்பது பின்னால் தெரிய வந்தது. ஆனால் வீக்கம் நின்றவரையில் மில் முதலாளிகளுக்குச் சுமார் 25 கோடி ரூபாய் உபரி லாபம் கிடைத்தது. அதில் பத்தில் ஒரு பாகம் சில வர்த்தக இலாகாக் காரர்களுக்கும் கிடைத்தது என்பது பகிரங்கம். இனி என்ன நடக்கிறது என்று கவனிப்போம். ●

---



அட்டைப் படத்தை அலங்கரிப்பது சமீபத்தில் வேலையினின்று ஓய்வெடுத்துக் கொள்ளும் நமது ராணுவ கமாண்டர்-இன்-சீப் மேஜர் ஜனரல் கரியப்பா.




# பெர்குஸனுடன்

இணைக்கப்பட்ட

## ஹோவார்டு

## ரோடாவேடரினால்

இந்தியன் பேட்டெண்ட் நெ. 145449

உழுதல்

பயிரிடுதல்

நிலம்வெட்டிக் கிளைத்தல்

கொழுக்களால் குத்தித்தோண்டுதல்

"ரோடா வேடர்", எளிதில் மாற்றி உபயோகிக்கக்கூடியதும், சிக்கனமானதும், திறன்வாய்ந்ததுமான பலவித உழவுத் தொழில் சாதனங்கள் ரோடா வேடரும் ஒன்று. அது வேலி, புதர்களின் ஓரமாகச் செல்லவேண்டிய எல்லாவித வேலைகளுக்கும் ஓரங்களிலுள்ள சிறு நிலங்களுக்கும் ஏற்ற லட்சிய சாதனம். புதர்களைக்களைந்து, இச்சிறு நிலப்பாகங்களையும், செங்குத்தான திடல்களையும் பயிரிடுவதற்கு ஏற்றவையாகச் செய்கிறது. சுருங்கச்சொல்லில் "ரோடாவேடர்" நீங்கள் பயிரிடும் நிலப்பரப்பை அதிகமாக்குகிறது. இதுவே அதிக விளைச்சலுக்கும், அதிக லாபத்திற்கும் ஆன வழிகாட்டி.

**கமாணி எஞ்சினீயரிங் கார்ப்போரேஷன் லிட்.**
கமாணி சேம்பர்ஸ், பலார்டுஎஸ்டேட், பம்பாய்

F. 88. B (S) T

---

**டீலர்கள் :-** கமாணி இன்ஜினீயரிங் கார்ப்பரேஷன் லிட்., சாகர்மான்ஷன், ஜோன்ஸ் தெரு, பிராட்வே, மதராஸ்-1, ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (தென் இந்தியா) லிட்., கோயம்பத்தூர்.
வெப்ஸ் பார்ம் மெகானிஸேஷன், 30, மகாத்மா காந்தி ரோடு, பெங்களூர் & மைசூர்.

**ஸ்டாக்கிஸ்ட்கள் :-** காமினேனி பார்மிங் கார்ப்பரேஷன், குடிவாடா. S, பாப் பன்ன செட்டி, ஹோஸ்பேட். சுந்தரம் ஸன்ஸ், 67 பிரிட்ஜ் ஸ்டேஷன் ரோடு தல்லாகுளம் P, O. மதுரை: பார்மிங் மெஷினரி & சர்வீஸஸ், பெஸன்ட் ரோட், பக்கிங்ஹாம்பேட் போஸ்ட், விஜயவாடா: கள்ளிக்கோட்டை, உதகமண்டலம், திருவனந்தபுரம் எலக்டிரிக் டைஸல் எக்குப்மெண்ட் கம்பெனி, அல்லபி; A. கோபாலகிருஷ்ணன் கோட்டாரம் கல்பட்டா வெய்காடு.



# பிர்லாமந்திர் என்று வழங்கும்
# லக்ஷ்மீநாராயணன் கோவில்

கே. ஸ்ரீ.

பணத்தைப் பணம் என்று பாராமல் செல வழிக்கச் சம்மதம் உள்ளவர்கள் இக் கலியுகத்தில் மிகவும் அரிது. அதைவிட அரிது அப் பணத்தை நல்ல காரியங்களில் செலவிடச் சிந்தை உள்ளவர் ஆவது. இத னுல் தான் பிர்லாமந்திர் எனப்படும் லக்ஷ்மீ நாராயணன் கோவிலுக்கு மதிப்பு அதிகம். இதைக் கட்டிய பிர்லா குடும்பத்தார் அவ் வளவு செலவையும் தாங்களே அல்லவா ஏற்றுக்கொண்டார்கள்!

பிர்லா என்பது நம் பக்கத்தில் அய்யர், அய்யங்கார் என்பதுபோன்ற சொல். அய் யர் என்பது ஜாதியைக் குறிப்பிடும் பதமாக இருக்கிறது. பிர்லா என்பது பிர்லா குடும் பத்தாரைக் குறிக்கும் சொல். ராஜஸ்தா னில் உள்ள பிலாளி என்னும் கிராமத்தைச் சேர்ந்த மார்வாரிகள் பிர்லாக்களின் மூதா தையர்கள். இப்பொழுதுள்ள பிர்லாக்கள் தலையெடுத்து, இந்தியாவில் பல பாகங்களில் தொழிற்சாலைகள் அமைத்து, முதலாளிகள் என்ற பட்டமும் வாங்கிக்கொண்டுவிட் டார்கள். ஆனல் கோடி கோடியாகச் சம் பாதிக்கும் இவர்கள் லக்ஷ லக்ஷமாகவாவது தருமத்திற்குச் செலவு செய்கிருர்கள்.

இக் குடும்பத்தைச் சேர்ந்த பிரதான நாலு பிர்லாக்களுக்குள் தருமம் தலைகாக் கும் என்று எண்ணியவர் ஸ்ரீ ஜுகல்கிஷோர் பிர்லா. எங்கே தருமம் என்று யார் கையை நீட்டினுலும் இல்லை என்னுதவர். இவ ருக்குத் தோன்றிற்று பல சாம்ராஜ்யங்கள் தோன்றி மறைந்த இந்த இந்திரப் பிரஸ் தத்தில் ஒரு பெரிய அழகிய, சுத்தமான ஹிந்துக் கோவில் ஒன்றும் இல்லையே என்று. உடனே ஒரு கோவில் நிர்மாணிப்பது என்று திட்டம்போட்டார். இந்தத் திட்டத்திற்கு மற்றும் ஒரு மூல காரணம் உண்டு என்று

பிர்லாமந்திரின் அழகிய வெளிப்புறத் தோற்றம். ஸ்தூபங்கள் பூரி ஜகந்நாத் பக்கத்து ஸ்தூபங்களைப் போல் அமைந்திருக்கின்றன.

சொல்லிக் கொள்ளுகிருர்கள். இந்தக்கோவில் உருவாகிக் கொண்டிருந்த சமயம் ஹரிஜன இயக்கம் மிக ஜரூராக நடந்து கொண்டிருந்தது என்ருலும் இப்பொழுது ஹிந்துக்களிடையே உண்டாகியிருக்கும் மன விரிவு அப்பொழுது உண்டாகவில்லை. பிர்லாக்கள் யாவரும் காந்தி பக்தர்கள். ஆகவே காந்தியடிகளின்மனப்பான்மையை ஒத்து, எல்லா ஹிந்துக்களும் தங்குதடையின்றிப் போக ஒரு கோவில் அவசியம் என்றும் தோன்றிற்ரும், இந்த யோசனைக்குக் காந்திஜி தம் ஆசியைக் கொடுத்தாராம், பிறகு கோவிலையும் திறந்துவைத்தாராம்.



பிர்லாமந்திரைச் சேர்ந்த புத்தவிகாரம்.

பிர்லாமந்திர் புது டில்லியின் மேற்கு எல்லையான ரீடிங் ரோடில் அமைந்திருக்கிறது. அமைந்துள்ள இடத்தின் பரப்பே பல ஏக்கர் விஸ்தீரணம் இருக்கும். கோவில் லக்ஷணம் என்ருல் அவ்வளவு லக்ஷணம், சுத்தம் என்ருல் பரம சுத்தம், ஒழுங்கு என்ருல் பாராட்டவேண்டிய ஒழுங்கு.

வெளியிலிருந்து பார்த்தால் கோவில் ஏதோ பர்மாவில் உள்ள புத்தாலயங்கள் போல இருக்கும். அதன் சிற்ப அமைப்பை அவ்வாறு சிருஷ்டித்திருக்கிருர்கள், உயர்ந்த பிரதம ஸ்தூபத்துக்கு இருபுறமும் சற்றுச் சிறிய ஸ்தூபங்களும் அவைகளின்மேல் கலசங்களும் பொருத்தப்பட்டிருக்கின்றன. மேலே செம்மண் கலரில் வர்ணம் வைக்கப் பட்டிருக்கின்றது, இந்த ஸ்தூபங்கள் தான் நம் நாட்டில் உள்ள கோபுரங்களுக்குச் சமானம்.

கோவிலுக்கு வருபவர்கள் வெளியே விட்டுச் சென்ற செருப்பையே நினைத்துக் கோவிலைச் சுற்றிப் பார்க்க வேண்டாம் என்று தனியே செருப்புப் பாதுகாப்பு இலாகா ஒன்று உள்ளது, அதில் விச்ராந்தியாகக் கழற்றி அவைகளைத் தாற்காலிகமாக மறந்து உள்ளே செல்லலாம். போகுமுன் கை கால்களையும் சுத்தம் செய்துகொண்டு செல்லலாம்.

இப்பொழுதுதான் பிர்லா மந்திரின் அரிய சாதனைகளைக் காணலாம். சலவைக் கல்லால் கட்டப்பெற்ற படிக்கட்டிற்கு இரு பக்கங்களிலும் கீதையிலிருந்தும் உபநிஷத்துகளிலிருந்தும் சுலோகங்கள் பொறிக்கப் பட்டிருப்பதுடன், கீதையிலிருந்து சில காட்சிகளைச் சித்திர ரூபமாக வெட்டியிருக்கிருர்கள். நம் பக்கத்தில் கல்லில் ஒவியம் தீட்ட, கல் தச்சர்கள் எவ்வளவு பெயர் பெற்றிருக்கிருர்களோ கிட்டத்தட்ட அதே அளவுக்கு ஜயப்பூரில் உள்ளவர்களுக்கும் ஆக்ராவில் உள்ளவர்களுக்கும் சலவைக் கல்லிலும் சிவப்புக் கல்லிலும் பயிற்சியும் அனுபவமும் அதிகம்.

படிக்கட்டுகளைத் தாண்டி உள்ளே சென்றதும் ஒரு பரந்த வெளி ஒரே சலவைக்கல் மயமான தளங்களால் அமைக்கப்பட்டிருக்கிறது. சலவைக்கல்லே மாசற்ற வெளுப்பு. அதிலும் சுத்தமாகப் பெருக்கி வைத்து, கால் அடிகளோ மற்றச் சுவடுகளோ இல்லாமல் பார்த்துக் கொள்கிருர்கள் என்ருல் பார்த்துக் கொள்ளுங்கள். இந்தப் பக்கத்துக் கோவில்களில் சுத்தம் என்பது மிகவும்



பிர்லாமந்திரில் எல்லாவித சமய வழிபாடுகளுக்கும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். படத்தில் காணப்படுவது பிருந்தாவனத்தில் உள்ள தென்னிந்திய பாவனைக் கோபுரமும் — அழகு வாய்க்காலும்.

குறைவு. ஆதலால் பிர்லாமந்திர் ஒரு திருஷ்டிப் பரிகாரம்.

சாயங்காலம் ஆனதும் ஆண்களும் பெண்களும் ஸ்திரீகளும் கூட்டம் கூட்டமாக வருகிறார்கள். வந்தவர்கள் இந்தப் பரந்த வெளியைப் பார்த்ததும் ஒருவித ஆகர்ஷணம் உண்டாகி, அங்குள்ள சலவைகல் பெஞ்சுகளிலும் கீழேயும் விச்ராந்தியாக உட்கார்ந்து கொள்கிறார்கள். காலையிலும் மத்யானமும் சாயங்காலமும் ஒலிபெருக்கி மூலம் பகவன் நாமாவும் கீர்த்தனங்களும் ஒலிபரப்பப் படுகின்றன. அவைகளைப் பாடுவதற்கென்று இனிமையும் குளுமையும் ஒருங்கே கொண்ட சாரீரம் உள்ள பாடகர்கள் மாதச் சம்பளத்தில் அமர்த்தப்பட்டிருக்கிறார்கள்.

திறந்த கூடத்தை விட்டு உள்ளே செல்வோம். இந்த ஸ்தலம் சலவைக்கல் சுவர்களாலும் செங்கல் அணைப்பினாலும் அடைக்கப்பட்டு ஒட்டப்பட்டிருக்கிறது. எங்கும் சுவர்களில் உபநிஷத், ராமாயணம், பாரதம், பகவத் கீதை முதலியவைகளிலிருந்து எடுப்புகள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. பழையகாலத்தில் ஹிந்துக்களுக்குப் பிரத்தியேகமான நாகரிகச் சின்னம் ஸ்வஸ்திகா. இவைகள் சுவரில் எழுதப்பட்டிருப்பதுடன் ஸ்வஸ்திகா ரூபமான ஜாலிகளும் சுவரில் பொருத்தப்பட்டிருக்கின்றன.

எதிரே தெரிவது லக்ஷ்மீ நாராயணன். இந்தத்தெய்வங்களின் மூலஸ்தானங்கள், சலவைக்கல்லால் ஆனவை. வெளிச் சுவரில் மக்கள் சொக்கும்படியான ஸரஸ்வதியும் நாரதரும் சர்வலக்ஷணங்களுடன் சலவைக்கல் சுவரில் செதுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளைவிட அழகு யோகினியும் நிருத்ய பைரவரும். தென்னிந்தியருக்கு எங்கு நடராஜ ஸ்வரூபத்தைப் பார்த்தாலும் பரவசம் ஏற்படும். அதிலும் அங்கியும் குரங்கமும் கையில் கொண்டு நர்த்தனம் புரியும் பிரதிமையைப் பார்த்தால் 'ஆஹா இதுவல்லவோ சிற்பியின் பெருமை?' என்று தோன்றும். லக்ஷ்மீநாராயணன் கோவிலுக்கு இடதுபுறம் துர்க்கையின் கோவிலும் வலதுபுறம் பரமசிவனின் ஆலயமும் அமைந்திருக்கின்றன.

இப்பக்கங்களில் அர்ச்சகர் தேங்காய் வாங்கி அர்ச்சனை செய்து கற்பூர ஹாரத்தி செய்யும் பழக்கம் கிடையாது. அதற்குப் பதிலாக ஜனங்கள் புஷ்பத்தைக் கை நிறைய சந்நிதியில் வாரி இறைக்கிறார்கள், அர்ச்சகர் என்ற பெயரில் உட்கார்ந்திருப்பவர் காலை மாலை வேளையில் தீப ஹாரத்தி செய்வதுடன் சிறு பையிலிருந்து குங்குமமும் விபூதியும் கேட்பவர்களுக்கு மட்டுமே கொடுப்பார்.

இம்மூன்று கோவில்களுக்குப் பின்னாலேயும் பிராகாரம் உண்டு. கோவில்களுக்குப் பக்கங்களிலும் பின்புறமும் ராமச்சந்திரன், ஸ்ரீ கிருஷ்ணர், பரசுராமர் முதலியவர்களின் அற்புதச் சுவரோவியங்கள் காண்பவர் கண்ணைக் கவர்கின்றன.

லக்ஷ்மீ-நாராயணன் கோவிலுக்கு வலதுபுறம் கீதாபவன் அமைந்திருக்கிறது. இது விசாலமான உபன்யாஸ மண்டபம். வடக்கே கிருஷ்ண பரமாத்மாவைத்தான் எல்லோரும் மெய்மறந்து பஜித்து ஆனந்தமடைகிருர்கள். பவனுக்கு நடுவே ஸ்ரீ கண்ணனின் பெரிய விக்கிரகம் உலகமான உருண்டையின் மேல் காட்சியளிக்கிறது. பவனில் எங்கே பார்த்தாலும் அற்புதமான இதிகாசப்படங்களும், சொற்சித்திரங்களும் காட்சியளிக்கின்றன. சாதாரணமாக வெள்ளி ஞாயிறன்று இங்கு ஏராளமான பக்தர்கள் கூட்டம் வரும். அதுவும் நாள் கிழமை என்ருல் பவன் தாங்காது ஜனத்திரள். இங்கேதான் மந்திர் பாடகர் ஒலி பெருக்கிமூலம் உருக்கமாகப் பாடுவார்.



பிர்லாமந்திரைச் சேர்ந்த கீதாபவன்.

லக்ஷ்மீநாராயணன் கோவிலுக்கு இடதுபுறம் பகவான் புத்தரின் ஆலயம் அமைந்திருக்கிறது. சாந்தியையும் ஜனக்கூட்டத்திலிருந்து விடுதலையையும் நாடுபவர்களுக்குகந்த இடம் இது. பொன்னிறமான மூல விக்கிரஹம் புத்தர் உலகத்தாருக்கு விலக்க வேண்டிச் சொன்ன ஐந்து பாபங்களை விரல் விட்டுச் சொல்லும் பாவனையில் அமைந்திருக்கிறது. புத்தர் விக்கிரஹத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாலே போதும், மனதிலுள்ள துயரங்களும் கவலைகளும் அகலும். மலர்ந்துள்ள தாமரையின் முகத்தை ஒத்த புத்த விக்கிரக ஸ்வரூபம் சாந்தியையும் ஜோதியையும் ஒளிவிட்டு வீசுகிறது.

பிர்லா மந்திர் அமைந்திருக்கும் இடம் விசாலமான வெளி என்றேன் அல்லவா! அந்த வெளியை எப்படி உபயோகப்படுத்தியிருக்கிருர்கள்? கோவிலுக்கு இடதுபுறம் தருமசாலை இருக்கிறது. புதிதாக டில்லிக்கு வருபவர்களுக்குத் தங்குவதற்கும் உண்பதற்கும் மூன்றுநாள் இலவச வசதி உண்டு. வலதுபுறத்தில் பல யானைகள் கல்லால் செய்யப்பட்டு நிறுத்தப்பட்டிருக்கின்றன. அங்கங்கே பண்டைய ஹிந்து அரசர்களான சந்திரகுப்தர் முதலியவர்களின் சிலைகள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றன.

கோவிலுக்குப் பின்னல் பிரும்மாண்டமான உல்லாஸத் தோட்டம். மேற்கு எல்லையில் தென்னிந்தியக் கோவிலின் கோபுரம் ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. வடநாட்டாருக்கு நம் கோபுரம் எப்படி இருக்குமென்று காட்டவே இது. தண்ணீரை இங்கிருந்து பலவித நீர்த்தும்பிகள்மூலம் சிங்காரக் கால்வாய்களில் பாய்ச்சுகிருர்கள். மீன்களும், ஆமைகளும், பாம்புகளும், மாடுகளும் ஜலத்தை உமிழ்கின்றன. டில்லியில் முனிஸிபாலிட்டி, பார்லிமெண்ட் இவைகளைத்தவிர வேறு மிருகக் காட்சிச்சாலை கிடையாததலால் பிர்லா, அரண்யத்தில் உள்ள சகல விலங்குகளையும் கல்லால் சமைத்து, குழந்தைகள் அநுபவிக்கச் செய்திருக்கிருர்.

பிர்லாவின் மனோரதம் பெரும் அளவில் நிறைவேறியிருக்கிறது, ஜனங்கள் கோவி

லுக்கு வந்துவிட்டு, பிறகு பிருந்தாவனம் எனப்படும் தோட்டத்திற்குச் சென்று சாவ காசமாக உட்கார்ந்து பொழுதுபோக்கு கிறார்கள். நேரடியாகவும் மறைமுகமாக வும் ஹிந்துக்கள் கோவிலுக்குச் செல்லப் பலவித ஆகர்ஷண சக்திகளை உண்டாக்கிய பிர்லா ஜனங்கள் பிரார்த்தனையுடன் தூய்மை, சுத்தம் முதலியவைகளைக் கற்க வும் உதவியிருக்கிறார். பிர்லாவை ஜனங்கள் புகழ்வதன்மூலம் லக்ஷ்மீநாராயண மந்திர் பிர்லா மந்திர் ஆனதில் ஆச்சரியம் ஒன்று மில்லை. ●



பிர்லாமந்திரின் பின்புறத் தோற்றம். கோபுரத்திற்கு முன் காணப்படுவது தடாகமும் பிருந்தாவனம் எனப்படும் தோட்டத்தின் மரங்களும்.



# அந் நிலவிலே

— ரா. ஸ்ரீ. தேசிகன் —

வானோங்கி வளர்ந்து நிற்கும் இமயமலைக் காட்சி எவருடைய உள்ளத்தையும் கொள்ளைகொள்ளும் என்பதில் யாதொரு ஐயமுமில்லை. ஹரித்துவாரில் புகலரும் அழகோடு ஓடுகின்ற கங்கையின் நிலையைப் பார்த்து மகிழ்ந்தேன். ரிஷிகேசத்தின் வனப்பை அள்ளி அள்ளிப் பருகினேன். பதிரிக்குப்போகும் வழியிலுள்ள லக்ஷ்மன் ஜூலாவைக் கடந்து பாலத்தின் அந்தப் பக்கத்தில் நின்றுகொண்டு நோக்கினால் ஒரு தெய்வீகக் காட்சி நம்முன்விரியும்; எங்கே பார்த்தாலும் வரைகள் தோன்றும். கீழே கங்கை சுழித்தோடும் தோற்றத்தைச் சொல்வதையிற் சிறை செய்ய முடியாது. ஊண் உறக்கமின்றி அதையே கண்களால் பருகும் பாக்கியம் எனக்குக் கிட்டுமோ? என்றெண்ணுவேன். சுவர்க்காசிரமும் ஒரு தனி எழிலோடு விளங்குகின்றது.

அங்கே சிலநாள் தங்கினேன். ஒரு பழுத்த நிலவு; எங்கும் ஓர் அமைதி ஒரு தனி ஆட்சி செய்தது. திடீரென்று பல வாத்தியங்கள் முழங்கின. கங்கைமீது பல நிற விளக்குகள் மிதந்து சென்றன.

'இன்றைக்கு என்ன விசேஷம்? ஏதேனும் ஒரு திருவிழா உண்டா?' என்று அங்குள்ள ஒரு பக்தரைக் கேட்டேன்.

'அது தெரியாதா? உங்களுக்கு இந்தவூர் விச்வநாதபெருமாள் இல்லாமற்போனால் அத்தனை கோவில்களும் அழிந்துபோயிருக்கும், சிதைந்து உருமாறிய கோயில்கள்கூட மீண்டும் உயிர் பெற்றெழுந்தன' என்றார். 'அந்தக் கோயில் எங்கே? என்னை அழைத்துப் போகிறீர்களா?' என்று கேட்டேன்.

'அதற்கென்ன? என்னோடு வாருங்கள்' என்றார்.

நான் அவரைப் பின் தொடர்ந்தேன். ஒரு பர்லாங் வரையில் சென்றோம். நிலவு வெள்ளத்தில் தோய்ந்து கிடந்த ஒவ்வொரு காட்சியும் என் மனத்தைக் கவர்ந்தது.

'கோயில் ஒரு சிறிய கோயில் தான். தென்னாட்டுக் கோயில் போல இல்லையே' என்றேன்.

'இங்கே பெரிய கோயில்களைக் கட்டினால் ஆபத்தாய் முடியுமென்று உங்களுக்குத் தெரியாதா?'

'முகமதியர் பண்ணின அட்டூழியங்களை மனத்தில் வைத்து இதைச் சொன்னீர்களா?' என்றேன்.

'ஆம்; உங்கள் தென்னிந்தியா பாக்கியம் பண்ணின புனிதமான பூமிதான். நான் உங்கள் நாட்டிற்கு வந்திருக்கிறேன். கோயிலின் அபூர்வமான சிற்பம், அமைப்பு, அதன் காம்பீரியம் எல்லாம் என் கண்களுக்கு விருந்தாய்த் திகழ்ந்தன. முகமதியப் படை வெள்ளம் எங்கள் கோயில்களை அடித்துக்கொண்டு போயிற்று. இந்தக் கோயில்தான் எஞ்சி நின்றது. அதோ தெரிகின்றனவே வேறு கோயில்கள், அவைகள்கூட இந்தக் கோயிலின் மகிமையால் உயிர் பெற்றெழுந்தன' என்றார்.

கோயிலை அணுகினதும் எல்லாவற்றையும் துருவிக் கவனித்தேன். பல இடங்களிலுள்ள தெய்வங்கள் அங்கே காட்சி அளித்தன. ஒவ்வொரு கோயிலுக்கும் ஒரு தனி நிறமுள்ள விளக்குண்டு. ஜனங்கள் அருவி அருவியாகப் போவதும் வருவதுமாயிருந்தனர். பல வர்ணத் தீபங்கள் எரிந்துகொண்டிருந்தன. இடையிடையே வாத்தியங்கள் முழங்கின. அவ்வாத்தியங்களின் நல்லிசை

நாதங்கள் அந்தப் பழுத்த நிலவில் என் செவிகளில் மதுரமாய் ஒலித்தன. சுமார் ஒன்பது மணியிருக்கும். தெய்வங்கள் தம் தம் கோயில்களை அடைந்தன, மீண்டும் பல வர்ண விளக்குகள் கங்கை மீது மிதந்து சென்றன 'கங்கா மாயி' என்ற அரவம் எழுந்து நிலவின் அமைதியில் இறந்தது. நாங்கள் இருவரும் கங்கையை நோக்கிய படியே ஒருபாறைமீது அமர்ந்தோம்.

'இந்தத் தெய்வத்தால் மற்றத் தெய்வங்கள் உயிர்பெற்றெழுந்தன. மற்றத் தெய்வங்களுக்கு உயிர்ப்பிச்சை இந்தப் பிரான் தான் தந்தார். அதற்காகச் சித்ரா பௌர்ணமி தினத்தில் மற்றத் தெய்வங்கள் வருஷந்தோறும் இந்தத் தெய்வத்திற்குக் காணிக்கை செலுத்திப் போகும்' என்றார்.

'யார் வேறு கோயில்களை இடித்தது?' என்று வினவினேன்.

'நம் நாட்டுமீது படையெடுத்து வந்த உலூகான். ஆனால் அந்த உலூகானின் ஆற்றல் இந்தத் தெய்வத்தினிடம் பலிக்க வில்லை. இது கண்கண்ட தெய்வம்' என்றார்.

'தெய்வங்களிடம்கூட வித்தியாசம் உண்டா? எல்லாம் ஒன்றுதானே'' என்று பதிலளித்தேன்.

'அதென்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்? கல்லெல்லாம் ஒரே கல்லாய் விடுகின்றதா? சில பாறைகள் கண்ணுக்குத் தெரியாமல் அலைகள் மோதியபடியே கடலின் அடியிற் கிடக்கின்றன. வேறு சில பாறைகள்மீது புனிதமான ஆறுகள் பாய்கின்றன. சில கற்கள் அம்மிக் குழவிகளாய்த் திகழ்கின்றன. வேறு சில உரல்களாய்க் காட்சி அளிக்கின்றன. நாம் மிதிக்கும் படிக்கல்லின் வடிவத்தையும் அவைகள் எடுக்கின்றன. ஒரு சிற்பியின் கையில் அதே கல் ஓர் அபூர்வமான அழியாச் சிற்பமாய் உயிர் பெற்று எழுந்துவிடுகின்றது. அவன் கண்ணுக்குப் பாறைகளில் துயின்றுகொண்டிருக்கும் பல்லாயிரக் கணக்கான தெய்வ உருவங்கள் தோன்றும். கல் ஒரு தெய்வமாய்க் கண் திறந்து காட்சி அளிக்கும் வரையில் காலை அதன்மீது வைத்துச் செதுக்கிய தபதியும் அதை வணங்குகின்றான்' என்றார்.

'கற்களுக்குக்கூடச் சாதகம் கணித்துவிடுவீர்கள் போலத் தோன்றுகிறதே!' என்றேன்.

'அவைகளுக்கும் ஜாதகமுண்டு' என்றார். 'சில கோயில்கள் பாழடைந்து விடுகின்றன; வேறு சில கோயில்கள் எங்கேயோ மலைகள் மீது அமைந்து கிடந்தாலும், ஆயிரக் கணக்கான மக்கள் இடையறாது போய்க் காணிக்கையைச் செலுத்தி விடுகின்றனர்.'

'சுவாமிகளிலும் பணக்காரச் சுவாமிகள் ஏழைச் சுவாமிகள் என்ற வித்தியாசம் உண்டா? முட்டாள்தனமாய் இருக்கிறதே!' என்று சற்று ஆவேசமாய்ப் பேசினேன்.

'துரை வீட்டு நாய்க்கும், தெருவிலே எச்சிலைத் தின்னும் பிச்சைக்காரர்களோடு போட்டி போடும் சொறி பிடித்த நாய்களுக்கும் வித்தியாசமில்லையா?'

'தெய்வங்களைப் பற்றிப் பேசுகிற பொழுது நாய்களைப் பற்றி ஏன் பேச வேண்டும்?' என்றேன்.

ஆங்கில மொழியில் நாய்க்கும் கடவுளுக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டென்று முகத்தில் முறுவல் பூத்தே பதில் சொன்னார். 'எல்லாம் ஒன்றாய்ப் பார்த்து விட்டால்?' என்று மெல்ல ஆரம்பித்தேன். 'அப்பொழுது சர்ச்சை இல்லை. பேச்சுக்கு இடமில்லை. ஏன் உங்கள் உடம்பையே கோவிலாகக் கொள்ளலாம். நீராடும் பொழுதெல்லாம் ஆண்டவனுக்குத் திருமஞ்சனமாகும். நாம் உண்ணும் உணவு அவனுக்கு அளித்த நிவேதனமாகும். நம்மையே நாம் வலம் வந்தால் அவனைச் சுற்றின தன்மையாகும், வேதத்தின் உண்மையை நான் அறிவேன். ஆனால் உலக முறைக்குத் தெய்வங்களின் தராதரத்தைச் சொன்னேனே தவிரவேறொன்றில்லை, என்று முடித்து விட்டு என்னிடம் விடைபெற்று அகன்றார்.

அத்தனை பெரிய வேதாந்தியா? நான் அறியாமல் போனேனே என்று என் மனத்திற்குள் எண்ணமிட்டேன்.

இரவு வளர்ந்து கொண்டே போயிற்று. எல்லாம் சித்திரத்தில் அலர்ந்தன போலத் தோன்றின. நிலவின் அமைதியைப் பருகிய வண்ணமே உட்கார்ந்தேன். இலை ஆடவில்லை. விண்ணில் ஒரு சலனத்தையும் காணோம். ஆனால் ஓர் தனித்த இன்பம் உள்ளத்தில் பாய்ந்து கொண்டிருந்தது. உலகச் சந்தடிகளெல்லாம் எங்கேயோ மாய்ந்து விட்டன. இந்திரியப் பூசல்களெல்லாம் ஓய்ந்த நிலையில் பிறக்கும் பேரமைதி தானோ என்னைச் சூழ்ந்துவிட்டது என்ற எண்ணம்

என் மனத்தில் மெல்ல நுழைந்தது. பல அருவிகள் இசை பாட, இயற்கைத் தொட்டிலில் தாலாட்டப்பட்ட அந்த மலையைச் சிந்தித்தபடியே படுத்திருந்தேன். சரித்திரத்தில் தோய்ந்த என் அகக்கண் முன் ஒரு நீண்ட பாதை விரிந்தது. அதில் சென்றுகொண்டிருந்தேன். 'உலூகான்' என்ற சொல் என் மனத்தில் பல்லாயிரக் கணக்கான சிந்தனை ஓட்டங்களைத் தூண்டி விட்டது. திபத்திற்கப்பாலுள்ள ஒரு முக மதிய நாட்டை என் மனம் சித்திரித்தது. அதைச் சார்ந்த மன்னன் தான் உலூகான் என்பவன். இவன் தாய்வழியின் முன்னோர்கள் எல்லோரும் படித்தவர்கள்; முதிர்ந்த அறிவுள்ளவர்கள்; கல்வி கேள்விகளில் திளைத்தவர்கள். ஓவியக் கலை, சிற்பக் கலை, சங்கீதக் கலை, நடனக்கலை சான்றோர்கள் போற்றும் அத்தனை கலைகளின் ஜீவநாடி அவர்களின் ரத்தத்தில் நன்கு பேசும். தகப்பன் வழி முன்னோர்களில் புற மதங்களின் கோயில்களைத் தகர்க்கும் தன்மையும், கொலைபுரியும் இயல்பும், பெண்களின் கற்பை அழிக்கும் நீசத்தனமும், ஊர்களைத் தீக்கிரையாக்கும் குரூர நோக்கமும், விஷம் வைத்து உயிர்களை மாய்க்கும் உணர்ச்சியும் மிகுதியாய்த் தோன்றின. இவ்விரு முரண்பாடான தன்மைகள் உலூகானிடம் மாறி மாறி வரும்.



சிறு பிராயத்தில் இசை அமுதத்தைப் பருகும் தன்மையுள்ளவன். காட்டில் தனியாய்த் திரிவான், மூங்கிற் காடுகளில் காற்று புல்லாங்குழல் இசைப்பதை நாள் முழுவதும் கேட்பான். இயற்கை அன்னை காலை விண்ணும் விரிந்த கிழியில் வரையும் சித்திரங்களின் வனப்பைக் கண்டு வியப்பான். செக்கர்வானம் இவனைப் பரவசமாக்கிவிடும், அந்திப்பொழுதில் அழகாய் ஆடி மிதந்துவரும் அமுதகீதவலையில் இவன் சுருக்குண்டு மெய்மறந்து கிடப்பான். ஓர் இரவு ஒரு முதிர்ந்த நிலவில் ஒரு மலைச் சரிவில் அப்படியே அங்கிலவைப் பருகிய வண்ணம் படுத்திருந்தான். சேணிலுள்ள புத்த விஹாரத்தின் மணிகளின் நாதங்கள் அங்கிலவின் நீண்ட அமைதி மீது மெல்ல மிதந்து வந்தன. காலம் தேயத் தேய அவன் பெற்றோர்கள் கவலை பாய்ந்த முகத்தோடு அவனைத் துருவித் தேடிப்பிடித்தார்கள். இத்தகைய சம்பவங்கள் கொண்ட பல அத்தியாயங்கள் அவன் வாழ்க்கைப் புத்தகத்தில் உண்டு.

உலூகான் கவிதை இசைப்பான்; ஓவியங் தீட்டுவான்; சிற்பங்கள் செதுக்குவான்.. பாட்டைப் பாடியே இரவைக் கழிப்பான் ஆனால் உணர்ச்சிப் போர்கள் அவன் மனத்தில் அடிக்கடி அலை மோதும். அவன் மனம் ஒரு போர்க்களமாய்ப் போய் விடும். சண்டமாருதம் போலச் சீற்றமும் அவனிடம் எழும். கண்கள் சிவந்து தீயைக் கக்கும். உதடுகள் படபடக்கும். பல்லை நெறுநெறுவென நெறிப்பான். அவ்வெம் சீற்றத்தில் தான் வரைந்த படங்களைக் கிழிப்பான்; தான் செதுக்கிய சிற்பங்கள் சுக்குநூருய்ப்போய்விடும்; தான் இன்புற்று வாசித்த இசைக் கருவிகளின் தந்திகளை முறித்தெறிந்து விடுவான்; ஆனல் மீண்டும் கலை உணர்ச்சிகள் எழும் அங்கிலையில் தன் மனத்தில் கடல் போல் ஒரு பெருந்துயர் எழக் காண்பான்.

உலூகான் தன் குடும்ப நெறியைப் பின்பற்றினன்; நம் நாட்டின் மீது பலமுறை படையெடுத்தான்; ஒவ்வொரு படையெடுப்பு வெள்ளமும் ஏதாவது ஒரு கோயிலை

அடித்துச் செல்லும். அந்த வெள்ளத்தில் அகப்படாமல் ரிஷிகேசத்து விச்வநாதர் கோயில் ஒன்றுதான எஞ்சி நின்றது. அதன் மீதும் உலூகான் பகைக் கண்களின் பார்வைகள் விழுந்தன. அவன் படையெடுக்கும் செய்தி காட்டுத் தீயைப் போலப் பரவிற்று. இந்துமதக் கோட்டைபோலத்திகழ்ந்த விசுவநாதர் கோயிலும் மண்ணோடு மண்ணாய்ப் போய்விட்டால் எங்கள் கதியாதோ? என்று அடியார்கள் வருந்தினர். அவன் போர் முரசம் ஒலிக்கும்போதெல்லாம் அதன் இடிக்குரல் தங்கள் உள்ளத்தைத் தாக்கிப் பிளக்கும் உணர்ச்சி அவர் மனத்தில் பாயும்; வேள்வித் தீயை வளர்த்தனர்; வேத மந்திரங்கள் இரவெல்லாம் முழங்கின. பூஜை மணியின் நாதம் கணகணவென எங்கும் ஒலித்தது. தீபாராதனைகள் நடந்துகொண்டே இருந்தன. புஷ்பங்களும், வில்வதளங்களும், மலைபோலக் குவிந்தன.



சித்திரா பௌர்ணமியின் நிலவு எங்கும் வழிந்தோடிற்று. போர் முரசத்தின் ஒலிகளும் இறந்தன. அடியார்களின் மனத்திலும் சற்று அமைதி ஏற்பட்டது. உலூகான் ரிஷிகேச மலைச் சரிவில் சாய்ந்துகொண்டு இயற்கை எழிலில் ஆழ்ந்துவிட்டான்.

தன் கிளரொளி இளமைப் பருவத்தில் தான் கண்ட காட்சி அவன் முன் எழுந்தது, மணிகள் மதுரமாய்ச் சிந்தையில் ஒலிக்கக் கண்டான். அவன் அகமனத்தின் ஆழத்தில் எங்கேயோ துயின்றுகொண்டிருந்த சந்தர்ப்பத்தை இந்நிலவு விழிக்கும்படி செய்துவிட்டது. பல்லாயிரக் கணக்கான கலை உணர்ச்சிகள் அவன் மனமன்றில் நடனமாடின. தான் உடைத்த சிற்பங்களின் அழகெல்லாம் மனத்தில் தோன்றி அவனுக்கொரு சோகம் கலந்த உணர்ச்சியைக் கிளறிவிட்டன. ஓர் அளப்பரும் துயர்க்கடல் அவன் முன் விரிந்தது. அதில் தான் மிதப்பதை உணர்ந்தான். கண்கள் நீரைச் சொரிந்தன. தான் புரிந்த தீச்செயல்களுக்கொரு பிராயச்சித்தமாகப் பாழாக்கிய கோவில்கள் அனைத்தையும் திரும்பக் கட்டுவீர்களாக என்ற உத்தரவை முரசடித்துவிட்டான். போர் முரசத்தின் இடிக் குரலொலி சேணில் அவிந்துவிட்டது.

இரவெலாம் அடியார்கள் கண்துஞ்சவில்லை. யாதாகுமோ? என்று அஞ்சினர். நீண்ட அந்த இரவு மெல்லத் தேய்ந்தது. கீழ்வானம் வெள்ளென்று வெளுத்தது, போர்ச்சின்னங்கள் யாவும் மறைந்ததைக் கண்டு அவர்களின் உள்ளத்தில் ஓர் அமைதி பாய்ந்தது. பறவைகள் இன்னிசை பாடின, பொழில்களில் மலர்கள் பூத்துச் சொரிந்தன. மந்தமாருதம் மெல்ல வீசிற்று.

இந்த உத்தரவு பிறந்ததும் ஆண்டவன் அருளை ஒவ்வொரு பொருளிலும் அவர்கள் பார்க்கத்தொடங்கினர்.

நாங்கள் இடையறுது பண்ணின பூசைகளும், வேள்விகளும், ஆராதனைகளும் வீண்போகவில்லை. தெய்வங்களுக்குக் கண்ணில்லை, செவியில்லை என்றெல்லாம் பழி சுமத்தினோமே! எங்கள் அப்பன் விசுவநாதன் அருள் நோக்கோடு எங்களைப் பார்த்துவிட்டான். அதோ அவன் புன்முறுவல் எங்கள் உள்ளங்களைக் கொள்ளைகொள்ளுகிறதே. எங்கள் குலதெய்வம் மற்றத் தெய்வங்களுக்கும் குலதெய்வமாகிவிட்டதே என்ற ஆரவாரம் விண்ணைப் பிளந்தெழுந்தது. அன்று முதல் பல தெய்வங்கள் காணிக்கை செய்வதின் தன்மையை நான் நன்கு அறிந்துவிட்டேன். அதன் மர்மம் எனக்கு விளங்கிவிட்டது. ரிஷிகேசிலுள்ள விசுவநாதப் பிரான் மகிமையைச் சொல்லும் பொழுதெல்லாம் இமயமலைச் சரிவில் சாய்ந்துகொண்டு நிலவைப் பருகி நிற்கும் உலூகானின் சோக உருவந்தான் என்முன் நிற்கும்.

“தினசரி சக்தியைப்
பெற எங்கள் வீட்டில்
எப்பொழுதும் டால்டாவில்
சமைக்கிறோம்”






டால்டா-சமநிலை
உணவில் உங்களுக்கு தேவை
யான சக்திதரும் கொழுப்பை
அளிக்கிறது

HVM. 168-50 TM

# போகுமுன்னும்

விந்தியா.

கையிலே டென்னிஸ் மட்டையைச் சுழற்றியவாறே, அந்தச் சுழற்சிக்குத் தகுந்தவாறு ஒரு பாட்டினை முணுமுணுத்தபடியே, உடைமாட்டியினருகு வந்து நின்ற கிருஷ்ணன், சடாரெனச் சலனமில்லாமல் உற்றுக் கவனித்தான். யாரோ பேசிக்கொண்டிருந்தார்கள் தாயாருடன்.

"உமா எப்படி வளர்ந்து விட்டாளே! கல்யாணம் பண்ண வேண்டியது தான்!"

"எல்லாம் கிருஷ்ணன் தான் பொறுப்பாகச் செய்யவேணும்! வரனைத் தேடிப் பிடிச்சு......"

கிருஷ்ணனின் முகம் மலர்ந்தது!

உமாவின் திருமணப் பொறுப்பு அவனுடையது! ஜோர், ஜோர்!...... ஜமாய்க்கவேண்டும்! நாட்டியம், பாட்டு, விருந்து!

பெரியவர்களின் சம்பாஷணையினாலே வெட்கம் மேலிட்டவளாக உமா ஓடி வருவதை, முறுவலுடன் கவனித்தான் கிருஷ்ணன். அழகும் பொலிவும் தங்கையின் முகத்திலே ஒளி வீசுவதைப் பார்த்தான். அவளுக்கேற்ற மணாளன், அழகன், நற்குணன், எங்குள்ளான்? கவனித்து வர வேண்டும் இளைஞர்களை!

உமா வாசலுக்கு ஓடி மறைந்ததும், கிருஷ்ணன் மீண்டும் காதுகளைத் தீட்டிக்கொண்டு கவனித்தான்.

"பிள்ளைக்குப் பதினெட்டு வயசாச்சா?"

"ஆச்சு! ஆனால் சிறு பிள்ளையாயிருக்கிறான்! பொறுப்புத் தெரியவில்லை! பதினைந்து வயது தானே ஆகிறது, உமாவுக்குக் கலியாணத்திற்கு அவசரமென்ன என்று கேட்கப் போகிறானே என்று நான் அவனிடம் பேச்செடுக்கவே தயங்குகிறேன். பதினைந்து குறைச்சலா?"



அதற்குமேல் சம்பாஷணையைக் கேட்க விரும்பாத கிருஷ்ணன், வீட்டைவிட்டுக் கிளம்பிவிட்டான். முகம் சாம்பியது. உள்ளம் கூம்பிவிட்டது.

உலகத்தையே ஆளும் பொறுப்பு ஏற்பட்டால் கூடச் சமாளித்துவிட முடியும் என்னும் புத்துணர்ச்சி அவனை ஆட்கொண்டிருந்த பருவமுதல், அவன், அம்மாவின் குற்றச் சாட்டுக்கு இலக்காகியிருந்தான்! "பொறுப்பு தெரியவில்லை" என்ற கவலைப் பல்லவியைக் கேட்டுக் கேட்டு அவன் மனம் சலித்துப்போனான்!

கிருஷ்ணனுக்குப் பதினாலு வயது; அவனுடைய தந்தை இறந்தார். "எப்படி நான் காலங்கடத்துவேன்!" என்று அவனுடைய தாய் ஓலமிட்டாள். கிருஷ்ணனும் அப்படித்தான் கதறியழுதான். ஆனால் அன்னையின் புலம்பல் கிருஷ்ணனைக் குறை கூறுவதுபோல நாளடைவிலே மாறிவிட்டது! "இந்தப் பிள்ளைக்குப் பொறுப்பே தெரியவில்லை! எப்படிக் காலந்தள்ளப் போகிறேனோ?" என்று அவனுடைய தாய் அழுதாள்.

குடும்பம் பெரிசல்ல. அவன், அவனுடைய தங்கை, தாயார்தான். செல்

வச் செழிப்பு குறையவில்லை, அதனால் கிருஷ்ணன் தந்தையின் மறைவைப்பற்றியும் அன்னையின் கைம்மையைப்பற்றியும் ஏங்கித் தவிக்கவில்லை! பள்ளி, படிப்பு என்று ஊக்கமாகவே இருந்தான்.

ஆனல் செல்லம்மாளுக்கு அவனுடைய படிப்பு ஆர்வம் திருப்தியளித்ததாகத் தெரியவில்லை! "என்ன படிப்புப் படிக்கிருனே? நான் ஒரு விஷயம் சொன்னல் நினைவிருப்பதில்லை! மகா கவனக் குறைவு! துளிப் பொறுப்பு இல்லை வீட்டில்!" என்று குறைப்பட்டாள். எந்த விதமாக இருந்தால் 'பொறுப்புள்ளவன்' என்ற அர்த்தம்? பொறுப்பு என்றால் எப்படி இருக்கும்? அன்னையின் விருப்பம் என்ன? இது போன்ற வினக்களுக்கு விரிவு காணுமல் கிருஷ்ணன் எத்தனையோ சந்தர்ப்பங்களிலே தவித்தது துண்டு. முயற்சிகள் தோற்றபொழுது அலுத்துப் போய், அசட்டையான பதில்களை வீசி, பொல்லாப்புக்குச் சப்பட்டை கட்டிவிட்டுக் கொண்டதும் உண்டு. கடைசியில் கல்லூரி மாணுக்கனுக மாறியபொழுதுதான் விடை புரிந்ததாக மகிழ்ந்தான். படித்துப் பட்டம் பெற்று, பதவி ஏற்றுப் புருஷனுய் லக்ஷணமாய் அம்மாவையும் தங்கையையும் தாங்க வேண்டும் என்று தெரிந்து கொண்டான். வருங்கால மனிதன் அவன். கலாசாலையின் சீரிய பண்புகளும் சிறப்புகளும் படிந்தால் தானே வாழ்விலும் உயர்வு ஏற்படும்? கிருஷ்ணன் கலாசாலையில் உயர்வுடன் விளங்கினன். ஆனல் அப்பொழுதும் செல்லம்மாள் குறை கூறினள். கல்லூரி மாணவனுக்குரிய பெருமிதமுடன் கிருஷ்ணன் பேசும்பொழுதும், கல்லூரிக்கழகக் காரியமாய்க் கருத்துடன் செயலாற்றும் பொழுதும், "ஒரே காலேஜ் நினைப்பாய் இருக்கிருயே! குடும்பப் பொறுப்பு தெரியவில்லையே!" என்ருள்.!

"பொறுப்பும் வேண்டாம்! பழியும் வேண்டாம் இப்பொழுது வீட்டிலே குறை என்ன இருக்கிறதாம்? நான் என்ன கவனிக்கவில்லையாம்!" என்று கிருஷ்ணன் பட்டும் படாமலும் இருக்க முயன்ருன். ஆனல், வாலிப உள்ளத்தின் வேதனை எங்கே போய் மறையும்?

"தங்கையின் திருமணப் பொறுப்பு கிருஷ்ணன் பொறுப்பு!" என்று சொல்லி, கிருஷ்ணனின் உள்ளத்தைக் குளிரவைத்த செல்லம்மாள், அடுத்த பேச்சிலேயே உணர்ச்சி சுண்டிவிடும்படி பேசிவிட்டாளே?

இந்த நிலைமைக்கு ஒரு முடிவு வேண்டாமா?

* * *

"அம்மா!" என்று அழைத்தான் கிருஷ்ணன்.

"ஏண்டாப்பா!"

"உமாவுக்கு அடுத்த மாசம் பிறந்த நாள், இல்லையாம்மா? பதினைந்து முடிந்து பதினறு ஆரம்பம்!"

"ஆமாண்டாப்பா, ஆகிறது பதினைந்து!"

"அவளுக்குப் 'பிரசண்டு' என்ன சொல்லட்டுமா? நல்ல அகமுடையான்!" இப்படிச் சொல்லி விட்டுக் கிருஷ்ணன் தங்கையைப் பார்த்துக் கண் சிமிட்டினன்.

"அத்தனை சீக்கிரம் அகமுடையான் கிடைச்சுடுவானு? கனுத்தான் காணணும்! இல்லையென்ருல் ஆச்சு ஆச்சு என்று தாவியைக் கட்டி அனுப்



பிச்சுடணும்! ஆர அமரப் பார்த்துச் செய்யாமல் .........''

"ஆர அமர என்று இழுக்கடிக்கவும் கூடாது. அம்மா! பதினேழு வயதுக்குள் பெண்களுக்குக் கலியாணம் செய்து விடுகிறதுதான் அழகு, இல்லையாம்மா?''

"ஆமாம்! வாஸ்தவம்தான். நடக்கணுமே! இப்போ முதற்கொண்டு வரன் தேடினால் தானே........''

"சக்கை போடு போடுகிறேன், பார்!'' என்று கிருஷ்ணன் அளித்த பதில் செல்லம்மாளின் மனதைக் கவர்ந்தது. "உனக்கும் பொறுப்புத் தெரிகிறதே!'' என்று நினைப்பவள் போல மலர்ச்சியுடன் நோக்கினாள்.

அதற்குப் பிறகு கிருஷ்ணன் தன் நண்பர்கள் பலரை அடிக்கடி வீட்டிற்கு அழைத்து வரலானான். உமாவுக்கு மனதிற்குகந்தவன் யார்? அன்னைக்கு எத்தகைய வரன் சம்மதம்? இதையெல்லாம் அறிந்து ஆராய முடியும் என்பது அவன் நினைப்பு. ஆனால் செல்லம்மாளுக்கு, கிருஷ்ணனின் நண்பர்கள் கசந்தார்கள். "எதற்குக் கிருஷ்ணா, வயசு வந்த பிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு வருகிறாய்? வயசுப் பெண் ஒருத்தி வீட்டில் இருக்கிறாளே, எதாவது வம்பு கிளம்புமே என்று தெரிகிறதா பார் உனக்கு!'' என்று ஒருநாள் கேட்டுவிட்டாள். ஆனால் இந்தக் கேள்வியினால் கிருஷ்ணன் சினங்கொள்ளவில்லை! அம்மா ஊர் வாய்க்குப் பயப்படுவது நியாயமற்றதாகுமா? "நிஜந்தான் அம்மா! எனக்குத் தோணவே இல்லை!'' என்று கிருஷ்ணன் ஒப்புக்கொண்டான்.

"போகிறது, பொறுப்புத் தெரிகிறது உனக்கு!'' என்று அன்னையும் ஒப்புக்கொள்ளவே நோய் ஒழிந்து பத்தியச் சாப்பாடு கண்டாற்போலக் கிருஷ்ணன் ஆறுதலும் இன்பமும் கொண்டான்.

* * *

உமாவின் திருமண விஷயமாகக் கிருஷ்ணனுக்கு ஏற்பட்டுவிட்ட சிரத்தையைக்கண்டு செல்லம்மாள் சந்தோஷங்கொண்டுவிட்டாள். அன்னையின் உவகை கண்டு கிருஷ்ணனின் ஊக்கம் வளர்ந்தது. முயற்சி பழுத்தது.

மனதிற்குகந்த வரன், 'சம்மதம்' என்று பதிலளித்துவிட்டான். தை மாதமே முகூர்த்தம் வைக்க வேண்டுமென்று செல்லம்மாள் சொன்னதற்கும் ஆக்ஷேபனை இருக்கவில்லை. கிருஷ்ணன் கூடத் தயங்கவில்லை. பி. ஏ. பரீக்ஷைக்குத் தயாராகவேண்டுமே என மலைக்கவில்லை. ஆனால் எதிர்பாராதவிதமாகத் திட்டம் மாறியது. உமாவை மணக்க இசைந்த பையன் இரண்டே மாதங்களிலே ஒரு உத்தியோகத்திலே அமருகிறானாம். வேலையிலே புகுந்த பிறகுதான் இல்லறம் மேற்கொள்ள விரும்புகிறானாம்! கடிதம் வந்தது.

கிருஷ்ணன் கடிதத்தைப் பார்த்துச் சந்தோஷப்பட்டான்.

"பார், அம்மா! என் பரீட்சையும் முடிந்துவிடும்.! சௌகரியமாய்ப் போச்சு!'' என்று கூறினான்.

செல்லம்மாள் சந்தோஷப்படவில்லை. "பார்த்தாயா? இதான் உனக்குப் பொறுப்புத் தெரியவில்லை என்கிறேன்! சுபஸ்ய சீக்கிரம்னு கல்யாணம் சீக்கிரம் நடக்கணும் என்பது என் கவலை. தள்ளிப் போனது நல்லதாச்சு என்று நீ குதிக்கிறாயே!'' என்றாள் தாயார்.

திடுக்குற்றான் கிருஷ்ணன். கொஞ்ச நாட்களாக அவன் செவியுறாத குற்றச்சாட்டு, ஓய்வு பெற்றுக் கொண்ட புதுவேகத்துடன் அவனைத் தாக்கிவிட்டது.

"பையன் ஒப்பியிருந்தால் நான் பரீட்சையைப் பார்ப்பேனாம்மா?'' என்று கிருஷ்ணன் நொந்த குரலில் கேட்டான்.

"என்னவோப்பா! வரன் நிச்சயமாகியும் தவக்கம் என்றால் எனக்குக் குறைதான். கல்யாணம் செய்துகொள்வதற்கும் வேலைக்கும் என்ன தடங்கல் என்று நீ ஒருவார்த்தை கேட்கலாம். பரீட்சை என்று நீயும் அசிரத்தையாயிருக்காப்பலே இருக்கு!'' என அன்னை பதிலளிக்கவே கிருஷ்ணன் வெகுண்டான்.

"அப்படித்தான்?'' என்று வீரம் பேசிவிட்டுச் சோர்ந்து விழுந்தது, மகனின் நொந்த மனம். உமாவின் கணவனாகப் போகிறவனின் விருப்பம், தனக்கும் சாதகமாகவே அமையும் பொழுது, ஏன் வீணாகப் பரீட்சைகளுக்கு அபசாரம் செய்ய வேண்டும்?

முனைந்து படித்தான். பரீட்சை எழுதி முடித்தான். பொறுப்போடு மீண்டும் கடிதம் எழுதிக் கேட்டான். ஏற்பாடுகளை மும்முரமாகத் தொடங்க வேண்டாமா?

உத்தியோகம் செய்யும் பிள்ளை என்ற நிலையைச் சாக்கிட்டு, பையனின் தந்தை வெகு மிடுக்காகப் பதில் எழுதினார். வரதக்ஷிணைத் தொகை ஏறியிருந்தது. சீர் ஜாபிதா வளர்ந்திருந்தது.

சொன்ன சொல் தவறியவர்களிடம் தங்கை உமாவை ஒப்படைப்பதா?

கிருஷ்ணனின் இளம் ரத்தம் கொதித்தது. இரைந்தான், அந்தச் சம்பந்தமே கூடாது என்று.

"பிள்ளை வீட்டார் என்றால் அப்படித்தான்! நாம் தணிந்துதான் போகணும்!" என்று புத்தி சொன்னாள் செல்லம்மாள்.

உயர்ந்தோர், நல்லோர் என்றால் தணிந்து போகலாம். அற்பர்களுக்கு அடிபணிவதா?

கிருஷ்ணன் அன்னையிடம் வாது செய்வதை விட்டு, தங்கையின் பக்கம் திரும்பினான்.

"சொன்ன பேச்சுத் தவறி நடக்கும் குடும்பத்திலே புகுந்துகொள்ள உனக்குச் சம்மதமா, உமா? சொல்லிவிடு! அந்தப் பையனோடு நீ சுகமாக இருக்கமுடியுமா? இரண்டு மாதமாக நீ அந்தப் பையன்மீதே நாட்டம் கொண்டுவிட்டாயோ என்பதற்காகத்தான் கேட்கிறேன்!" என்று வினவினான்.

"அம்மாவுக்குத்தான் நாட்டம்!" என்று கலங்காமல் உமா பதிலளித்துவிட்டாள்.

அந்த வெற்றிப் பெருமிதத்திலே கிருஷ்ணன், அன்னையின் ஆக்ஷேபணைகளை ஏற்கவில்லை.

"பணங்காசு வரும்! வரன் திகையுமா?" என்று அன்னை கேட்டதற்கு, "பணங்காசு வரும்! வரனும் வரும்!" என்று தெம்பாகப் பதிலளித்தான்.

அவன் எடுத்துக்கொண்ட முயற்சிகள் பழுத்து, உமாவின் திருமணம் நடந்தபோது, உமாவுக்கு வயது பதினெட்டு!

"பொறுப்புத் தெரியாமல் வந்த வரனை நழுவவிட்டாயே!" என்று இரண்டாண்டுகள் தாயார் நினைப்பூட்டிய வண்ணம் இருந்தாள். அந்த நிலையில் தோன்றிய பிடிவாதம், லட்சியத்தில் தோல்வி அடையவில்லை. குணமும் அழகும் நிறைந்த கணவன்தான் உமாவின் கையைப்பிடித்தான்.

* * *

இன்ப வாழ்க்கை நடத்தும் தங்கை எழுதிய கடிதம் வந்தது. "பார், அம்மா, எப்பேர்ப்பட்ட மாப்பிள்ளை பிடித்துவிட்டேன், தெரிந்துகொள்! உமா இப்படி இருப்பதைத்தானே நாம் பார்க்கவேண்டும்! அவள் கண்ணைக் கசக்கினால் நமக்குத்தானே கஷ்டம்?" என்று கிருஷ்ணன் தாயைக் கேட்டான்.

எதிர்க் கேள்வி கேட்டாள் செல்லம்மாள். "இப்பொழுதே இப்படிச் சொல்கிறாயே! கல்யாணம் செய்து அவளை அனுப்பிவிட்டதுமே பொறுப்பு ஒழிந்தது என்று நீ இருந்துவிடலாமா? அவள் கண்ணைக் கசக்காவிட்டாலுங்கூட உனக்கு அவள் விஷயத்திலே அக்கரை இருக்கவேண்டாமா? ஒரே பையன் நீ, தங்கையை மறக்கலாமா? உனக்கு ஒருத்தி வருகிறதற்கு முந்தியே இப்படிப் பேசுகிறாயே! அப்புறம் எப்படி இருப்பாயோ?" என்று வருத்தமுடன் கேட்டாள் தாயார்.

அவனுடைய 'ஒருத்தி'யைப்பற்றிக் கிருஷ்ணன் சிந்தனை செய்ததே இல்லை. ஆனால் அவன் தாயாருக்கோ, கவலை, பீதி; "பொறுப்பு வந்திருக்கு, ஆனால் எத்தனை நாளைக்கு இது நிலை?" என்று எத்தனை தடவை செல்லம்மாள் சொல்லியிருக்கிறாள்? அதன் பொருள் இப்பொழுதல்லவா கிருஷ்ணனுக்கு விளங்குகிறது?

மனைவி வந்தால் மாறிவிடக்கூடிய அற்ப மனம், கெட்ட நினைப்பு தனக்கு இல்லை என்று கிருஷ்ணனுக்கு நம்பிக்கை இருந்தது. ஆனால் அவன் திருமணம் செய்துகொள்ள அஞ்சினான். பச்சைத் தண்ணீரை ஊற்றினால்கூடக் கொதித்தெழும் சுண்ணாம்புக் கிளிஞ்சல்கள் போன்றதா அம்மாவின் இயல்பு என்று கிருஷ்ணன் கூசினான்.

ஆனால் விதியின் விசை வேறு விதமாகத்தான் இருந்தது.

தாயாரின் தூண்டுதல், அவனுடைய பருவ உணர்ச்சிகளுக்கு ஊட்டங் கொடுத்துவிட்டது. கல்யாணி அவனைக் கவர்ந்தாள். பசுமையான உடல் வனப்பும், பவழ வாயின் அழகும் கமலக் கண்களின் கனிவும் அந்தப் பெண்ணுக்கு அளித்த எழில், ஏழைமை நிலையை மறக்கடித்தது. தங்கக் கட்டடத்திலே வைரம்போலச் சுடர் விட்ட கல்யாணியின் அழகு கிருஷ்ணனை ஆட்கொண்டது. அவளைத் தேர்ந்தெடுத்தான்.

செல்லம்மாள் பூரண சம்மதம் தெரிவிக்கவில்லை. "ஒரே பிள்ளை நீ! உனக்கு எத்தனை உயர்த்தியாகப் பெண் கிடைக்கவேண்டும்!" என்றாள்.

"ஒரே பிள்ளை நான்! கொஞ்சம் வண்மை வரிசைகள் குறைந்தால் நமக்குக் கஷ்டமா நஷ்டமா? நம் அந்தஸ்துக்கு ஏற்றவாறு நாம் மாற்றிவிடுவோம் அவளை!" என்று பதிலிறுத்தான் கிருஷ்ணன். பிள்ளை வீட்டார் மிடுக்காகவும் பணப் பற்றுடையவராயும் இருப்பது அழகல்ல என்று தங்கை விஷயத்தில் அனுபவப்பட்டவனாயிற்றே!

அனுமதி கொடுத்துவிட்டாள் செல்லம்மாள். பண்டைக்கால மனுஷி. சீர்செனத்தி விஷயமாக எத்தனை பற்று இருக்கும்? மகனின் சந்தோஷத்திற்காக விட்டுக் கொடுத்துவிட்டாளே என்று கிருஷ்ணன் இறும்பூது எய்தினான். ஏழைப் பெண் மாமிக்கு அடங்கியவளாய் இருப்பாள். அவளுடைய மற்ற அம்சங்களோ, அவனுடைய மன நிறைவை நிரப்பும்! இதுதான் கிருஷ்ணனின் பெருமிதம்.

அவன் நினைப்பு வீண்போகவில்லை. கல்யாணி சுடர் விளக்குப்போல மனைபுகுந்தாள். செல்லம்மாள் குறைபட்டுப் பேசுவது மறைந்துவிட்டது. அடக்கம் நிறைந்த மருமகளும், ஆதரவு நிறைந்த மகனும் நடத்தும் இல்லறத்திலே அவள் குறை காண முடியுமா?

"பிள்ளைகள், கல்யாணமாகும்வரை தாய்க்குத் திருப்தியளிப்பவராக இருந்து, பிறகு மணமானதும்தான் திருப்தியைக் குலைப்பார்கள்! நான் நேர் எதிர்! என் வாழ்க்கைத் துணைவியின் ஒத்துழைப்பினால்தான் என் அன்னைக்கு மகிழ்ச்சியளிக்கிறேன்!'' என்று கிருஷ்ணன் கர்வப்பட்டான். செல்லம்மாள், உமாவை அழைத்துவந்து மகப்பேறு முதலிய சம்பிரதாயச் சடங்குகளை நடத்திவைத்து, தன் கடமையைச் செய்துவந்தாள். இளம் தம்பதிகளைக் கொஞ்சம் தனியாக விட்டுவைக்க வேண்டும் என்ற எண்ணம் போலும், பெண்ணின் வீட்டிற்குப் போய்த் தங்கிவிட்டு வந்தாள். உமாவுக்கும் பெரிய துணையாக மாமியார் மாமனார் இருக்கவில்லை, அதனால் தாயின் உதவிகள் தேவைதானே? ஆனால் கிருஷ்ணனுக்குத் தாயின் அந்தரங்கம் தெரியாது!

* * *

ஒரே பிள்ளை, ஒரே பெண் என்ற நிலையிலே கைம்மை எய்திய செல்லம்மாள், எத்தகைய பயங்கரக் கற்பனைகளுக்கு இடமளித்துவிட்டாளோ? அவளுடைய அந்தரங்கம், 'பெற்றதெல்லாம் பிள்ளையில்லை, நட்டதெல்லாம் பயிர் இல்லை!' என்று அடிக்கடி அசைபோட்டது.

எப்பொழுதோ ஒரு தடவை கிருஷ்ணன் இடக்காக, 'சும்மா சும்மா இதென்ன வசனம் அம்மா! நீ பெற்றதெல்லாம் பிள்ளையில்லை என்று தெரியாதா? உமாதான் ஒரு பெண் ஆச்சே?' என்று சிரிப்பும் அலுப்புமாகக் கேட்டிருக்கிறான்! அவன் கேட்டதற்கு ஏற்றாற்போல்தான் செல்லம்மாள் தன் வருங்காலத் திட்டத்தை வகுத்துவந்தாள்!

உமாவிற்கு உதவியாகப் பலதடவை போனாள். கடைசியில். உமாவையே அணைந்து வாழ உறுதி பூண்டாள். கிருஷ்ணனுக்கு எழுதிவிட்டாள்.

"முன்போலவே இங்குமங்குமாய் இருக்கத் தடை என்ன அம்மா?'' என்று கிருஷ்ணன் எழுதிக் கேட்டதற்கு மறுமொழி ஒன்றும் புகலவில்லை. செல்லம்மாளின் மோனம், கிருஷ்ணன் தம்பதிகளிடையே தர்க்கம் எழுப்பியது.

''எழுதணுமா? தெரியவில்லையா?'' என்று கல்யாணி கிருஷ்ணனைக் கேட்டாள்.

''என்ன தெரிய?''

''பிள்ளை நாட்டுப்பெண் நாம் கைவிட்டுவிடுவோம் என்று பயம் அம்மாவுக்கு! பெண்தான் மாறாமல் அன்பு செலுத்துவாள் என்ற நினைப்பு அம்மாவுக்கு!''

''ஓஹோ, இந்த அழகான விளக்கம் உனக்கு எப்படித் தெரிகிறதடியம்மா?''

''சொன்னால் கோபம் வரும். நானும் கவனித்தேன். எங்கம்மாவும் சொன்னாள்......''

தன் மாமியார் என்ன சொன்னாளாம் என்ற திகைப்புடன் கிருஷ்ணன் அதட்டிக் கேட்டான். கல்யாணி சொன்ன விவரம் என்ன?

பெண்ணுக்குச் சீரும் சிறப்பும் செய்ய வேண்டியது முறைதான். ஆனால் அதற்காகப் பெற்ற பிள்ளையை ஓட்டாண்டி ஆக்கக்கூடாது என்று கல்யாணியின் தாயார் சொன்னாளாம்.

"நீ இல்லதும் பொல்லதும் சொன்னயாக்கும் உன் பிறந்தகத்தில்!" என்று கிருஷ்ணன் கடுமையாகக் கேட்டான்.

நீர் ததும்பும் விழிகளைக் கல்யாணி நிமிர்த்தாமலே பதிலளித்தாள். "உள்ளதைத்தான் சொன்னேன், பூமாதேவிகூடத்தான் ஒரு பகுதி நிலத்தில் விளைச்சலை அதிகம் கொடுக்கிறாள்' ஒரு பகுதி நிலத்தை வறள வைக்கிறாள்! ஒருநாள் அடுத்தகத்துமாமி உங்கள் அம்மாவைப் பார்த்து, 'எத்தனை நகையைப் பெண்ணுக்குப் போட்டாயே, ஒன்று நாட்டுப் பெண்ணுக்குக் கொடேன்!" என்று சொன்னதற்கு அம்மா என்ன பதில் சொன்னார் தெரியுமா? பெண்ணுக்கு எத்தனை செஞ்சாலும் தகும்! அவள்தானே தாயார் என்று அக்கரை காட்டப் போகிறாள் என்று பதில் சொன்னார்! அதுவும் நிஜம்தான்! திடுமென்று என்மேல் எரிந்து விழுந்தமாதிரி அம்மாவிடமும் எப்பொழுதாவது சிள்ளென்று விழுவீர்கள்! எந்தத் தாயாரும் பிள்ளையிடம் பேச்சுக் கேட்கப் பொறுக்கமாட்டாள்! அம்மா–பெண் என்றால் ஆயிரம் இருக்கும். அன்பும் மாறாது. உலகவழக்கந்தான்!" என்று கல்யாணி பேசி முடித்த போது கிருஷ்ணன் திகைத்துப் போனான்!

திகைப்பு நீங்கியதும் எச்சரிக்கை கொண்டான். குழந்தையைக் கிள்ளிவிட்டுத் தொட்டிலையும் ஆட்டிவிட்டுத் தாலாட்டுப் பாடுகிறாள் கல்யாணி என்று தோன்றியது. தன் தாயைக் குறைகூறி விட்டு மெழுகிப் பூசிப் பேசுகிறாள் மனைவி, என்று சினந்தான். ஆண் கும்பல் கெடுவதே இப்படித்தான் என்று முடிவுகட்டிவிட்டு, தன் ஆண்மையைக் காப்பாற்றிக்கொள்ள உமாவின் ஊரை நோக்கிப் பயணமானான்:

* * * *

உமா அண்ணனைக் கனிவோடு நோக்கினாள்.



"அம்மா இஷ்டப்படிதான் விட்டுவிட்டேன் அண்ணு! நீ அவளுக்குப் பிள்ளை; சொல்கிருய், மன்னி அம்மாவுக்கு நாட்டுப்பெண்தானே? நாட்டுப் பெண்ணிடம் இருப்பதைவிடப் பெண்ணிடம் இருப்பது அம்மாவுக்கு விருப்பமாக்கும்! இருக்கட்டுமே!" என்ருள் உமா, சிரித்து.

"அப்போ உன் புருஷர் மாப்பிள்ளைதானே! பிள்ளையிடம் இருப்பதைவிட மாப்பிள்ளையிடம் இருப்பது உசத்தியோ?" என்று கிருஷ்ணன் ரோசமாகக் கேட்டான்.

கண் சிமிட்டிச் சிரித்துவிட்டு உமா, "இப்போ பெண்கள்தானே அதிகாரிகளாம் வீட்டிலே!" என்று கேட்டு, கணவனைப்பார்த்து அன்புப் பரிகாசம் செய்தாள். கிருஷ்ணன்கூட அவர்களிருவருடனும் சேர்ந்து சிரித்தான்.

உமாவிற்கு நல்ல கணவனைத் தேடித் தந்த கிருஷ்ணன், "நல்ல தனம் இதற்குத்தானு பயன்? என் அம்மாவிற்குப் புகலிடம் அளிக்கும் நல்ல தனம்!" என்ற விளக்கம் செய்துவிட்டுத்தான் ஊர் மீண்டான். அதுவரை செய்துவந்த கடமைப் போரிலே சிறப்புக்கொடி நாட்டமுடியாமல் சமாதானக்கொடியை நாட்டிஞன். உமாவும் அவனும் ஓர் அன்னையின் மக்கள். யாரிடம் முதுமையைக் கழிக்க விருப்பமோ அங்கேயே அம்மா இருக்கட்டுமே! அதனுல் தாய் தனயன் உறவு போகுமோ?

* * *

கிருஷ்ணன் மனங்குமையவில்லை. ஆனுல் உள்ளத்தின் ஆழத்திலே இருகுரல்கள் அடிக்கடி ஒலித்தன. "பிள்ளை நாட்டுப்பெண் கைவிட்டுவிடுவோம் என்று பயம் அம்மாவுக்கு! பிள்ளையிடம் சொல் கேட்கமட்டும் எந்தத் தாயாரும் பொறுக்கமாட்டாள்!" என்று சொன்ன கல்யாணியின் குரல் ஒன்று. மற்ருென்று உமாவின் குரல். "இப்பொழுதெல்லாம் பெண்கள்தானே வீட்டில் அதிகாரிகளாம்!" என்று கேட்டாளே உமா?

கிருஷ்ணன் கல்யாணியை அடிக்கடி கவனித்தான். பலதடவை சோதனை செய்யும் நோக்குடன் கவனித்தான். அவள் இல்லத்தின் அதிகாரியாகத்தான் இருக்கிருள்! ஆனுல் அம்மா இருந்தபொழுது எப்படிப் பணிவாய் இருந்தாளே! அம்மாவுக்கு எப்படி மனக்குறை ஏற்பட்டிருக்கும்?

கசப்பான உண்மை புலனுகிவிட்டது கிருஷ்ணனுக்கு! அவனுடைய தாய்க்கு அவன்மேல் நம்பிக்கை இல்லை. அதுதான் காரணம். அவனுடைய காளைப் பருவம் முழுதும் சொல்லும் இதை!

சாம்பலிலே ஊற்றிய பன்னீர் போலல்லவா தன்னுடைய முயற்சிகள் தோற்றன என்ற சிந்தனை மூட்டம், சில கண்ணீர்த் துளிகளைச் சிந்தச் செய்துவிடும்! அதற்கும் கூசுவான் கிருஷ்ணன்.

ஒரு பயங்கரக்கனவு கண்டு கண் விழித்த கிருஷ்ணன், மனைவியிடம் கனவைச் சொல்லிவிட வேண்டும் என்னும் துடிப்புடன் கல்யாணியைப் பார்த்தான். அவள் ஆனந்தமாய்த் துயின்று கொண்டிருந்தாள். முதல் நாள் முழுதும் உடம்பு வலி, அசதி என்று சொல்லியிருந்தாளே, அவளை எழுப்புவது உசிதமா என்ற யோசனை எழவே, சற்றுத் தயக்கமுற்று, அவளையே கூர்ந்து பார்த்தான் கிருஷ்ணன்.

"உடம்பு வலி ஜாஸ்தியாயிருக்கு; பயமாயிருக்கு! அடிக்கடி வலி கிலி என்ருல், வேறு கல்யாணம் பண்ணிக்கொள்கிறேன் என்று புருஷர்கள் கூசாமல் சொல்லிவிடுவீர்கள்!" என்று கிண்டலாகச் சொல்லிவிட்டு, சொஸ்தமாகத் தூங்குகிருளே! அவளுடைய கேலிப் பேச்சு எத்தகைய கனவை உருவாக்கிவிட்டதே!

கனவின் மூலம், கல்யாணியின் பேச்சுத்தானு என்பதை ஆராய, கிருஷ்ணன் கனவை நினைவு படுத்திப் பார்த்தான்.

எங்கேயோ......ஒரு சிறு பாறைமேல் அவனுடைய அம்மா கண்ணீரும் கம்பலையுமாக உட்கார்ந்திருக்கிருள். பிறகு...... உமாவின் ஊர் போல லேசாக ஒரு தோற்றம். "உனக்கு அம்மா தெரிவிக்கவில்லையா?" என்று உமா கேட்கிருள் அவனை. உமாவின் கணவர் ஏளனமாகச் சிரிக்கிருர். சிரிக்கமாட்டாரா' அம்மா—பிள்ளை உறவு இருக்கும் லட்சணத்தைப் பார்த்து!......... உமா தானே, அவர் மனைவிதானே, அம்மாவுக்குப் பிள்ளையாக இருக்கிருள்?......

திடீரென்று உமா எப்படிப் பேசுகிருள்! "அடுத்த தெருத்தான்! நீயே போய்க் கண்டு பிடிக்கலாம்! என்னுல் வர முடியாது!" என்று சொல்கிருள்.

"வீடு காட்ட வரக் கூடாதாமே!" என்ற கோபமுடன் கிருஷ்ணன் விரைந்து செல்கிருன்.

இப்பொழுது பாறையைக் காணேம். ஒரு புதருக்குப் பக்கத்தில் அம்மா படுத்துக்கொண்டிருந்தாள்.

"அம்மா பார்த்தாயா? உமா பெண்தான் உனக்கு; அவள்மட்டும் எப்படியிருக்கிருள்? நகை நட்டு எல்லாம் பெற்றுக்கொண்டபின் விரட்டியாச்சு!" என்று கிருஷ்ணன் சொல்கிருன்.

விம்மி விம்மி அழுகிருள் செல்லம்மாள். பிறகு "உமா என்னை விரட்டவில்லையடா கிருஷ்ணு!" என்று சொல்லி அலறுகிருள்.

"மாப்பிள்ளையா?"

''மாப்பிள்ளையும் விரட்டலில்லையே!''

''பின்னே யார்? நானா?''

''நீதான் என்னை அழைச்சுண்டு போறேன்னு வாதாடிண்டிருக்கயேடாப்பா?''

''பின்னே கல்யாணியா?''

''ஐயோ, அவளும் இல்லேடா? பார், பார்! அதோ பார்! இன்னொருத்தி! மணைமேலே உட்கார்ந்துண்டு என்னைப்பார்த்து முழிக்கிறாளே! ஐயையோ, கிருஷ்ணா, கிருஷ்ணா!'' செல்லம்மாள் இப்படி அலறியபொழுது கனவு கலைந்து விட்டது.

மணையில் உட்கார்ந்தது யார்? கல்யாணி சொன்னாளே, வேறு கல்யாணம் பண்ணிக்கொள்வீர்கள் என்று?

கனவைப்பற்றி ஆர அமர யோசித்த பிறகு கிருஷ்ணன் வேறு விதமாகக் கவலைப்பட்டான். கனவைக் கல்யாணியிடம் சொன்னால்? ''வேறு ஒருத்தியைப் பற்றிக் கனவு காணத் தொடங்கியாச்சா?' என்று கேட்பாள்! சிரிப்பாள்! பிறகு அடிக்கடி நினைப்பூட்டுவாள்!

உமா சிரித்தது, கல்யாணி சொன்னது, பழைய பேச்சு, புதிய பேச்சு எல்லாமாக ஒரு கனவாகி விட்டதற்காக, பெரிய விஷயம் போலப் பாராட்டவேண்டாம். மறக்கவேண்டும். கிருஷ்ணன் கல்யாணியை எழுப்பாமலேயே படுத்துவிட்டான். ஆனால் உறக்கம் எளிதில் மீளவில்லை.

* * *

அவனுடைய சஞ்சலம் தெளிந்துபோகும் துன்பநாள் வந்துவிட்டது. கனவு பலித்துவிட்டது. கண்ணீரை அடக்கும் நினைப்பேயின்றிப் பெருக விட்டு, அன்னையைப் பார்த்தான் கிருஷ்ணன்.

''அம்மா! இனிமேல் வந்து என்னோடு இரு!'' என்று சொல்லி முடித்தான்.

''ஐயோ கிருஷ்ணா! ஒன்றுமே சொல்லாதேயேன்!'' என்று புலம்பினாள் அவனுடைய தாய். குமுறும் வயிற்றிலிருந்து எழும்பிய விம்மல்கள் அடங்கட்டும் என்று கிருஷ்ணன் பொறுத்தான்; தன்னையும் தேற்றினான். பிறகு நிதானமாக, ''அம்மா!'' வென்று அழைத்தான்.

மைந்தனை ஏறிட்டுப் பார்த்த செல்லம்மாளின் விழிகளிலே கண்ணீர் மல்கியிருந்தது. ஆனால் முதிய முகத்திலே உறுதி தளரவில்லை. உள்ளத்தோடு ஊன்றிப் போன பிடிவாதம் போகவில்லை; அந்நிலையிலும். சிதைந்து போன பண்டைச் சிற்பக் கோயில் போன்று செல்லம்மாள், தனக்கே உரித்தான அம்சத்தைத் தாங்கித்தான் இருந்தாள்.

''எனக்கு மட்டும் வெட்கமாயிராதா, கிருஷ்ணா? எனக்கு இங்கே இருப்பாக இருக்கும் என்றும் நினைக்காதே, இனிமேல்.........''

கிருஷ்ணன் துடித்தான் மறுமொழிக்காக.

உமாவின் கணவர் குறுக்கிட்டார்.

''மாமி, என்ன சொல்லப் போகிறீர்கள்? எங்கே போகப் போகிறீர்கள்? இங்கே இருக்க வேண்டியதுதான் உங்கள் கடமை!'' என்று பதறினார் அவர்.

''என் கடமை நான் இருந்தவரை ரொம்ப லக்ஷணமாகத்தானே இருந்தது!'' என்று ஏளனமாகத் தன்னை நொந்துகொண்டு சிரித்த செல்லம்மாள், திடீரென்று குலுங்க அழத் தொடங்கி விட்டாள்.

அந்தத் தாயுள்ளத்திலே பெருகிய பச்சாத்தாபத்தின் வெம்மையைத் தாளாமல் உருகியது அன்பு. வறண்டிருந்த இதயத்திலே கசிந்த குருதியின் மாற்று உருவேதான் அந்தக் கண்ணீர்.

சற்றுப் பொறுத்துச் செல்லம்மாள் பேசத் தொடங்கிவிட்டாள். சோகம் ஒளிந்தது. பிடிவாதம் ஒளிவீசியது.

''அவள் பெற்றுவிட்டதுகளை ஒரு கண் பார்த்துக் கொள்ளாமல் போகிறேனா? பார்த்துக்கொள்கிறேன்! ஆனால், கிருஷ்ணா, ஒரு உதவி செய், போதும். மாட்டுக்கொட்டில் ஆனாலும் போதும், இல்லை, மோட்டார் ஷெட்டானாலும் ஆகட்டும்; இந்த ஜன்மத்துக்கு இனிமேல் அதுதான் வீடு! வாடகை பேசி வை!'' என்று சொல்லிவிட்டாள்!

உமா சிரித்தாள்! எங்கே?

''அம்மாவின் பயம் புரியவில்லையா, அண்ணா? மனசு வேலை செய்கிற வேகம் தெரியவில்லையா, அண்ணா? இந்தக் குடும்பத்தின் சர்வாதிகாரி இன்னொருத்தி வருவாளே! புருஷர்களுக்கென்ன! பெண்டாட்டி செத்தால் புது மாப்பிள்ளை!''

உமா சிரிப்பதுபோலப் பிரமை கிருஷ்ணனுக்கு ஏற்பட்டது. அம்மாவைப் பிரமிப்புடன் பார்த்தான்.

அம்மா என்ன சொல்கிறாள்!

''மாப்பிள்ளை புது மாப்பிள்ளையாகிறவரைக்குங்கூட எனக்கு இங்கே இருப்பாக இருக்காதப்பா, கிருஷ்ணா! சீக்கிரம் பார், இந்த ஊரிலேயே! உமா இருந்த ஊர், இதைவிட்டு எங்கும் போக இஷ்டமில்லை!''

கிருஷ்ணன் பிரமித்தான். தாயின் கற்பனை வளம் எத்தகையது? எத்தனை முன் யோசனைகள், முன் எச்சரிக்கைகள்? ஆனால் சுகப்படவில்லையே, பாவம்! உமாவை நம்பியிருந்தாளே!

விண்ணுலக வாசியாகிவிட்ட தங்கையைப் பக்தியுடன் நினைவு கூர்ந்து இரண்டொரு நீர்த் துளிகளை விழிகளிலே தேக்கிக் கொண்டான்; மாசற்ற அன்பினை உள்ளத்திலே தேக்கிக் கொண்டான்.

* * *

போய்விட்ட தங்கையைப் பற்றி எப்படிக் குறைகூறத் தோன்றும்? அதுபோல வே, போகுமுன்னும் தன்னைத் துறந்துவிட்டஅன்னையையும் கிருஷ்ணன் குறைகூறவேஇல்லை. அன்னையின் போக்குக்கு இனிமேல் தடையா? வேண்டாம்-அவள் பிடிவாதப்படியே நடக்கட்டுமே!

"முன்பணம் வேண்டாம், கிருஷ்ணன். உங்கள் தாயார் என் வீட்டில் குடியிருக்க நான் கொடுத்து வைக்கவேண்டாமா? அந்தம்மாவிற்கு, அந்த நாளிலே எத்தனை அன்பு என்மேல்? நான் பிள்ளை மாதிரி! வாடகையா பிரமாதம்?" என்று முழங்கும் நண்பரைக் கூர்ந்து பார்த்தான் கிருஷ்ணன். "நம்பிக்கை செறிந்த அன்பு வேண்டும்!" என்று எண்ணமிட்டபடியே புன்னகை புரிந்ததனுலே உதட்டுச் சிரிப்புக் கோணிப் போயிற்று! ●






மாயவரம் ஜங்ஷனில் வண்டி வந்து நின்றபோது ஏறக்குறைய இரவு 1 மணி ஆகிவிட்டது. ரயிலை விட்டிறங்கிய, அவன் கையில் பற்றியிருந்த பையுடன் எதிர்பிளாட்பாரத்தை அடைந்து நின்றான். ஆனால் அந்த ரயில் வந்தால்தானே! அருகிலிருந்த ரயில்வே அதிகாரியை மெல்ல விசாரித்தான். அஸ்வாரஸ்யமான குரலோடு அவர், இன்னும் இரண்டு மணி நேரத்திற்கு அந்த வண்டி வராதென்பதைத் தெரியப்படுத்திவிட்டுச் சென்றார்—ஏதோ வாழ்க்கையே கசந்து விட்டவரைப் போல!

பிரயாணிகள் தங்கும் அறைகள் யாவும் அடைபட்டுக் கிடக்கவே, அவன் பிளாட்பாரத்தின் கோடியை அடைந்து அங்கிருந்த பெஞ்சியின் மேல் அமர்ந்தான். ஆங்காங்குச் சுருண்டுகொண்டிருந்த ஒருசில பிரயாணிகளைத் தவிர வேறெவரும் காணப்படவில்லை. இராக் காலமும், திறந்த வெளியுமாய் இருந்தாலும் அந்த இடம் புழுக்கமும் கதகதப்பும் நிறைந்து கொசுக்களினால் ஆக்கிரமிக்கப் பட்டுத்தான் இருந்தது.

கையிலிருந்த பையைத் தலைக்கு அண்டக் கொடுத்துவிட்டுச் சாய்ந்திருந்த அவன் நித்திரை கொள்ளாமல் வெறித்துக் கருவானத்தை நோக்கிக் கொண்டிருந்தான். மூன்றாவது, நான்காவது பிளாட்பாரங்களில் வண்டிகள் வந்து போவதின் சப்தமும் அதைத் தொடர்ந்து பிரயாணிகள் சந்தடியும்தான் கேட்டுக் கொண்டிருந்தன.

எங்கோ யோசனையில் ஆழ்ந்திருந்த அவன், அருகே பேச்சரவம் கேட்டுத் தலையைத் திருப்பிப் பார்த்தான். சற்றுத் தூரத்தில் நின்றிருந்த விளக்குக் கம்பத்தினடியில் அப்பிரயாணிகள் வந்து அப்போதுதான் அமர்ந்துகொண்டிருந்தனர். கலகலத்த பேச்சும் சிரிப்பும் நிறைந்திருந்த அச் சிறிய கூட்டத்தை அவன் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

அவர்கள் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்போல்தான் தோன்றினர். கண்ணியமான தோற்றத்துடன் பெரியவர் ஒருவர் இருந்தார். அவரைச் சுற்றி இரண்டு மூன்று இளம் பெண்களும், அழகாக வாரிவிடப்

பட்ட கிராப்தலையுடன் ஒரு வாலிபனும் மற்றும் சில குழந்தைகளும், வயோதிக விதவை மாது ஒருத்தியும் இருந்தனர். அவர்களுடைய ஆடைகளையும், மூட்டை முடிச்சுகளையும் பார்க்கும்போதே அவர்கள் கல்யாணக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் என்பது தெற்றெனத் தெரிந்தது. அவ்விளம்பெண்களில் ஒருத்தி பட்டுப் புடவையுடனும் நகையுடனும், காலில் நலங்கு தெரிய, கையில் கங்கணத்தோடு அற்புதமாகவே விளங்கினாள். சரிகைத் துப்பட்டாவை அலட்சியமாகத் தோளில் வீசியிருந்த கிராப்புத் தலை வாலிபன், புதிதாக மைதீட்டியிருந்த தன் கண்களை அவ்வப்போது அப்பெண்ணின் பக்கம் திருப்பியபோது, அவர்கள் இருவர் முகமும் களையுடன் சோபிக்கச் செய்தன. கூட இருந்த இளம் பெண்கள் ஓயாமல் இத்தம்பதிகளைப் பரிகசித்துக்கொண்டும், சிரித்துக் கொண்டும் விளையாடியது அப்பெரியவருக்குக்கூட வேடிக்கையாக இருந்தது.

அவர்கள் பட்டணம் செல்பவர்கள்போல் காணப்பட்டனர். பெஞ்சியின்மீது சாய்ந்து கொண்டிருந்த அவன் இவர்களையெல்லாம் பார்த்துக்கொண்டேயிருந்தான். உற்சாகம் நிறைந்த அவர்களின் பரிகாசங்களும் விளையாட்டுக்களும் அவனை என்னவோ செய்தன. கல்யாணம் என்றாலே குதூகலம்தானே! அதுவும் இளம் உள்ளங்களுக்கு இதைவிட உற்சாகமான சம்பவம் வாழ்வில் வேறெப்போது கிடைக்கிறது! அந்த மயக்கம் அவர்கள் மனத்தைவிட்டு மறைவதற்குள்ளாகவே அல்லவா அவர்களைப் பிணைத்துவிட்டு வேடிக்கை பார்க்கின்றனர் பெரியோர்கள்! மயக்கத்திலேயே பொறுப்பை ஏற்றி வைத்துவிட்டால் மயக்கம் தெளிந்த பின்புகூடப் பொறுப்பு தங்கித்தானே விடுகிறது! அதைமீறி அவர்கள் செல்ல முடியாதபடி அக்னிசாக்ஷி குறுக்கே நிற்கவில்லையா!

அவன்கூட இப்போது ஊருக்குச் செல்வது கல்யாணத்திற்குத்தானே! அலமுவின் பெண் மீனுவுக்கு விமரிசையாகக் கல்யாணம் செய்யப் போவதாய் அவன் மாமா எழுதியிருக்கவில்லையா? ஜேபியிலிருந்த கல்யாணப் பத்திரிகையை எடுத்துப் பார்த்தான், பொழுது விடிந்தால் முகூர்த்தம், பதினைந்து வருஷங்களுக்கு முன் ஊரைவிட்டு வந்த அவன் இப்போதுதானே மறுபடியும் அத்திசைக்குச் செல்லத் துணிந்தான்!

எல்லாம் இப்போது நடப்பதுபோல்தான் தோன்றியது. அவனுக்கு வயது இருபத்திரண்டு இருக்கும் அப்போது. மாமா பெண் அலமு குத்துவிளக்கைப் போல் இருந்தாள். இதோ எதிரே விளக்குக் கம்பத்தினடியில் அமர்ந்து, பரிகாசத்தினூடே மூட்டைத் தோசையைச் சங்கோசத்துடன் புசித்துக் கொண்டிருந்த இந்தக் கல்யாணப் பெண்ணைப் போலத்தானே ஏறக்குறைய அலமுவும் இருந்தாள் அன்று! அவனிடம்தான் அவளுக்கு எத்தனை பிரியம்! 'அத்தான்' 'அத்தான்' என்று நச்சரித்துக்கொண்டே இருக்கமாட்டாளா! அவனும் சிறுவயது முதலே அவளிடம் தனி வாஞ்சையுடன் தானே பழகி வந்தான். அவளுக்கு விவாகப் பருவம் வந்து, பேச்சு ஆரம்பித்தபோதும், அவன் பிடிவாதமாக அவளைத் தான்தான் விவாகம் பண்ணிக் கொள்வதாகக் கூறவில்லையா! அவள் மட்டும் பின் வாங்கினாளா......? ஒரு நாளெல்லாம் அழுது, தன் அம்மாவின் சம்மதத்தைப் பெற்றுத்தானே விட்டாள்!

அப்பாகூட எவ்வளவோ சொல்லி அவன் மனதை மாற்றப் பார்த்தார்.

"டேய், மணி! உனக்குத் தெரியாதுடா...? மாமா நல்லவர்தான்...! ஆனால் அவர் பணம் பொல்லாதது! அவர் அந்தஸ்துக்கு நாம் ஏற்றவர்கள் இல்லையடா...! நாளைக்கே நம்மைக் கேலி செய்வார்கள்...! ஆமாம்...!"

ஆனால் அவன் மனம் ஒத்துக்கொண்டதா! மாமாவின் மனதை அப்பா புரிந்து கொள்ளவில்லை என்றுதானே நம்பினான்! அலமு அவ்வளவு தூரம் தன்னை விரும்பும் போது மாமா அதைப் புறக்கணித்து, அந்தஸ்தையா பார்க்கப் போகிறார்! அலமுவின் சந்தோஷத்தையே பிரதானமாகக் கருதும் அவர், அவனை நிராகரித்துவிடுவாரா என்ன......!

ஆயினும் எல்லாம் கானல் நீராகத்தானே முடிந்தது. அப்பா சொன்னது உண்மையோ என்னவோ, ஆனால் மாமா செய்தது மட்டும் மாற்ற முடியாதது! கல்யாணத்திற்குச் சகல ஏற்பாடும் செய்தாகிவிட்டு இன்னும் இரண்டு நாட்களில் முகூர்த்தம் நடக்க இருக்கையில் மாமா பெரிய குண்டைத் தூக்கிப் போடவில்லையா! அந்தஸ்தைப் பற்றி அவர் ஏதேனும் ஆட்சேபிப்பார் என்று அப்பா கூறியதற்கு மாறாக, அவர் அதைப்பற்றிப் பிரஸ்தாபிக்காமல் வேறொரு காரணத்தை

# ஒவ்வொரு வருடமும் இந்த உபகண்டத்தில் 20 லக்ஷத்திற்கு மேலான ஜனங்கள் மலேரியாவினுல் கொல்லப்படுகிருர்கள்

மலேரியாவினுல் ஏற்படும் மரணங்கள் ஒருபுறமிருக்க இக்கொடிய வியாதி அதனுல் பீடிக்கப்படுபவர்களைப் பலஹீனப்படுத்தி இதர வியாதிகள் தாக்குவதற்கு முன்பே கொன்றுவிடுகிறதென்பதைத் தெரிந்துகொண்டால் இந்த பயங்கரமான எண்ணிக்கை மேலும் முக்கியத்துவம் அடைகிறது. மலேரியாவின் பயம் எப்பொழுதும் உங்களைச் சுற்றியிருக்கிறது. ஏனெனில் அது உங்களுடைய சரீரத்தில் தொற்றிக் கொள்வதற்கு ஒரு கொசுக்கடியே போதும். நீங்கள் இந்த அபாயத்தை ஒருபொழுதும் அலட்சியம் செய்யக்கூடாது.

இப்பொழுது 'பாலுட்ரின்' மலேரியாவிலிருந்து உங்களுக்குப் பாதுகாப்பை அளிக்கிறது. ஒரே அணு விலையுள்ள ஒரு மாத்திரையை வாரம் ஒருமுறை உட்கொண்டு வந்தால், அது அந்த நோயை அணுகவிடாது. நீங்களும் உங்களுடைய குடும்பமும் வாரத்திற்கு, ஒருவருக்கு மிகக் குறைவான ஒரே அணு செலவில் மலேரியாவிலிருந்து உங்களைப் பாது காத்துக் கொள்ளலாம். அளவு முறைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**அபாயத்தின் சின்னங்களைக் கவனியுங்கள்:**

முதலில் குளிரால் நடுக்கம் உண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். இதனுல் உடம்பு முழுவதும் வியர்க்கும். தேகம் முழுவதும் வலி உண்டாகும். இந்த அறிகுறிகளை ஒருபொழுதும் அலட்சியம் செய்யாதீர்கள்—உடனேயே டாக்டரின் ஆலோசனையைக் கேளுங்கள். மலேரியா கண்டிருந்தால், 'பாலுட்ரின்' எப்படி உங்களுடைய ஜுரத்தை சில நாட்களில் நீக்குகிறது என்பதையும் எதிர்காலத்தில் மலேரியா உங்களை அணுகாமல் எப்படி பாதுகாப்பை அளிக்கிறது என்பதையும் அவர் சொல்லுவார்.

நம்பிக்கைக்குகந்த 'பாலுட்ரின்' மாத்திரைகள் சுத்தமான, தெளிவாகத் தெரியும் காகித உறைகளில் சுற்றப்பட்டு வருகின்றன. ஒரு மாத்திரை விலை ஒரே அணு தான்.



# 'பாலுட்ரின்'

மலேரியாவை வீழ்த்துகிறது

## அளவுமுறை

**சிகிச்சைக்கு:** வயதானவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும் ஒரு மாத்திரை.. 6லிருந்து 12 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு அரை மாத்திரை. 6 வயதிற்கு கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு கால் மாத்திரை விதம் தினந்தோறும் ஜுரம் குணமடையும் வரை கொடுக்கவும்.




**பாதுகாப்பிற்கு:** மேலே குறிக்கப்பட்ட அளவுகளை அனுசரிக்கவும். ஆனுல் வாரம் ஒருமுறை அதே தினத்தில் சாப்பிட வேண்டியது.

எப்பொழுதும் 'பாலுட்ரின்' சாப்பாட்டிற்குப் பிறகு அதிக அளவு தண்ணீருடனே அல்லது பாலுடனே உட்கொள்ள வேண்டும் என்பதை ஞாபகத்தில் வைத்திருங்கள்.

இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்.

ICP 73

யல்லவா காட்டினர். மாப்பிள்ளைக்கு ஆயுள் பாவம் தோஷம் பட்டு இருப்பதாகக் கூறி, இந்த விவாகம் அலமுவின் வாழ்வைக் குலைத்துவிடும் என்று வாதாடி, கல்யாணத்தை நிறுத்தி விடவில்லையா! ஏமாற்றமும்வருத்தமும் அடைந்த அவன் தந்தை அதோடு தன்னை அழைத்துச் சென்றவர் தானே! பிறகு அதே முகூர்த்தத்தில் அலமுவுக்கு வேறொரு மாப்பிள்ளையை மாமா ஏற்பாடு செய்து விவாகத்தை நடத்தினரே, அதுதான் அவர் அந்தஸ்துபோலிருக்கிறது......!

விளக்கினடியிலிருந்து கொல்லெனச் சிரிப்பொலி கிளம்பியது. எல்லாம் பழைய விளையாட்டுத்தான்! மணப் பெண்ணின் பின்னலையும், கிராப்புத்தலை வாலிபனின் அங்கவஸ்திரத்தையும் முடிபோட்டிவிட்டு வேடிக்கை செய்துகொண்டிருந்தனர்! பெண்ணின் பின்னே சென்று முடியை அவிழ்த்துக்கொண்டிருந்த மாப்பிள்ளையைப் பரிகாசம் செய்துகொண்டிருந்தாள் ஒரு விஷமக்காரச் சிறுமி.

“அண்ணா! கல்யாணம் ஆன முதல்நாளே இப்படி மன்னி பின்னாலே சுத்தறயே...! பட்டணத்திலே வந்து நீ மறுபடியும் எப்படித் தான் ஆபீசுக்குப் போகப் போறே மன்னியை விட்டுட்டு!...”

எல்லோரும் கணீரெனச் சிரித்துக் கைகொட்டினர். கல்யாணப் பெண்ணின் முகம் வெட்கத்தால் சிவந்து குங்குமம் போலிருந்தது.

மறுபடியும் அவன் எண்ணங்கள் சுழன்றன. அலமுவின் விவாகத்திலும் இதைப் போன்ற பல வேடிக்கைச் சம்பவங்கள் நடந்திருக்கும்! ஆனல் அதில்தான் அவனுக்குப் பங்கில்லையே! ஆயுள் பாவம் தோஷமடைந்திருந்த அவன், அலமுவின் வைரியாகத் தானே விளங்கினன்!

ஆனல் அப்படி மாமாவின் ஜோசியம் பலித்துவிட்டதா! அதற்குப்பதில் விபரீதம் தானே நேரிட்டது! இன்று பதினேந்து வருஷங்களாகியும் அவன் இன்னும் உயிரோடு தான் இருக்கிறன். ஆனல் அலமுவின் கணவன்...? மீனு பிறந்த மறு வருஷம் அவன் வைசூரியில் போய்விட்டானே! ஆயுள் பாவமே பிரதானம் என்று வீராப்புப் பேசிய மாமாவின் கர்ஜனை எங்கே இப்போது!

ஆனல் இதையெல்லாம் அவன் சிந்திப்பதற்கு எங்கே அவகாசம் இருந்தது. அலமுவின் கல்யாணத்தோடு ஊரை விட்டுச் சென்றவன் பல வருஷங்களுக்குப் பின்பு இன்றுதானே அவள் ஊரை நோக்கிச் செல்கிறன். மாமாவின் கைப்பட விலாசம் எழுதப்பெற்று வந்த மீனுவின் கல்யாணப் பத்திரிகை அவன் மனத்தில் சற்று ஆர்வத்தை உண்டாக்கிவிட்டதுபோலும். மாமாவே இவ்வளவு காலம் அலமுவையும் குழந்தையையும் காப்பாற்றியதோடு அவர் காத்திலேயே மீனுவைத் தாரை வார்த்துக்கொடுக்கப்போகிறர். அவருக்காக இல்லாவிட்டாலும் அலமுக்காகவாவது போகவேண்டாமா! பாலவனமாய் விட்டிருந்த அவள் மனம் தன் பெண் கல்யாணத்தில் சற்று மகிழ்ச்சியடைந்தாலும். அவனைப் பார்ப்பதில் இன்னும் கொஞ்சம் பூரிப்படையாதா...!



தூரத்திலிருந்த ஏதோ ஒரு கடிகாரம் மூன்றடித்தது கேட்டது. அதைத் தொடர்ந்து எதிர் பிளாட்பாரத்தின் மணியை ஒரு போர்ட்டர் அடித்துவிட்டுச் சென்றுன்.

பெஞ்சியின் மீது சாய்ந்திருந்தவன் எழுந்து அமர்ந்தான். கல்யாணக் கூட்டத்தார் மெல்லத் தம் சாமான்களை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தனர். பட்டணம் செல்லும் வண்டி இன்னும் சில நிமிஷங்களில் எதிர் பார்க்கப்பட்டதோடு, பிளாட்பாரத்தில் ஜன சந்தடியும் ஏற்பட ஆரம்பித்தது.

கல்யாணப்பிள்ளையின் தந்தை குழந்தைகளையெல்லாம் தயாராக இருக்கும்படி சொல்லிவிட்டுச் சாமான்களையும் எண்ணிவைக்கத் தொடங்கினர். அவர் சாந்த முகமும் கண்ணியமான தோற்றமும் மனதைக் கவர்ந்தன. பிள்ளையின் விவாகத்தை முடித்துக்கொண்டு அன்றைய தினமே மருமகள்சகிதமாய்ப் பட்டணம் செல்வதில் அவருக்குத் தனிப்பெருமை இருந்ததுபோல்தான் தோன்றிற்று.



பிளாட்பாரத்தின் சந்தடி அதிகரித்தது. தூரத்தில் ரயில் வரும் ஓசை கேட்டது. இங்குமங்கும் ஓடுபவர்களும் சாமான்களைத் தாங்கிய போர்ட்டர்களும் செவிடுபடக் கூச்சலிட்டனர்.

சிரத்தையற்றவனுய்ப் பெஞ்சியில் அமர்ந்தவாறே வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த அவன் 'ஓ' வென்ற கூக்குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினுன். சந்தோஷத்துடன் நின்றுகொண்டிருந்த அக்கல்யாணக் கூட்டம் பதைபதைப்புடன் முன்நீட்டிய கரங்களோடுகோஷமிட்டுக்கொண்டிருந்தனர். அவர்கள் முகத்தில் தோன்றிய பயங்கரக் கலவரம் அவனை உலுக்கியது ஒருகணம். அவர்கள் பார்வை சென்ற திசையில் திரும்பிப் பார்த்தான்.

இருப்புப் பாதையைக் கடந்து எதிர் பிளாட்பாரத்திற்கு நீர் கொண்டுவரச் சென்றிருந்த கிராப்புத் தலை வாலிபன் அப்போது தான் கையில் கூஜாவுடன் திரும்பிக் கொண்டிருந்தான்.

ரயில் இன்னும் சற்றுத்தொலைவிலே இருந்ததால், அவன் நிதானமாகவே பாதையைக் கடந்து வந்திருக்கலாம். ஆனுல் எல்லாம் நாம் நினைப்பது போல் எங்கே நடக்கிறது!

ரயில் பாதையோரமாகச் சென்ற கை காட்டி மரத்தின் கம்பி அவன் கால்களை இடறிவிட்டது. கூஜாவோடு கீழே விழுந்தவன் ஒருவாறு சமாளித்துக் கொண்டு எழுந்துவிட்டான்! ஆனுல் ஏனே அவன் அந்த இடத்தைவிட்டு அப்பால் நகரவில்லை! பிளாட்பாரத்திலிருந்து எழுந்த 'ஓ' வென்ற அலறலும், வெகு அருகே வந்துவிட்ட ரயிலின் தடதட வென்ற சப்தமும் கதிகலங்க அடித்தன. என்ஜினின் விளக்கொளி ஒரு விநாடி அம்மாப்பிள்ளையின் மேல் பூரணமாய் விழுந்தது. தண்டவாளத்தில் சிக்கிக்கொண்டிருந்த அவன் சரிகை வேஷ்டி அவனை நகரவொட்டாமல் தடுத்துவிட்டது! அதிலிருந்து மீள அவன் மன்றுடிக் கொண்டிருந்தான்!

பெஞ்சியை விட்டுத் துள்ளி எழுந்த இவன் அங்கம் துவண்டது! கண்ணெதிரே காணப்பட்ட அக்காட்சி முதுகெலும்பைப் பிடித்து உலுக்கியது! நெருப்பைக் கக்கிக்கொண்டு வந்த என்ஜினும், கிராப்புத் தலை வாலிபனும் ஒரு கணம் நீராவிப் புகையில் மறைந்தனர்! 'வீல்' என்ற பல அலறலின் மத்தியில் இவன் தன் முகத்தை இரு கரங்களாலும்

மூடிக்கொண்டு விட்டான்! கடகடவென்று வண்டித் தொடர் கடந்து சென்றது மட்டும் கேட்டது!

ஒரு நிமிஷம் கழித்துத் தலை நிமிர்த்த அவன் ஒரே ஜனத்திரளைத்தான் கண்டான். அக்கண்ணராவிக் காட்சியை மேலும் காணப் பிரியமின்றி பையைக் கையிலெடுத்துக் கொண்டு நான்காவது பிளாட்பாரத்தை நோக்கி ஓடினான். அவன் ஏறிச் செல்ல வேண்டிய ரயிலும் அப்போது வந்து புறப் படத் தயாராக இருந்ததால் அதில் சட் டென ஏறி அமர்ந்தான். மறுகணம் தெற்கு நோக்கி அவ்வண்டி ஓடியது.

அரை மணிக்குப் பின்பு சுய உணர்வு அடைந்த அவன் ரயில் பிரயாணிகளின் பேச் சைச் சற்றுக் கவனித்தான். பட்டணம் செல் லும் ரயிலடியில் அகப்பட்டுக் கொண்ட அவ் வாலிபனைக் குற்றுயிராய் உள்ளூர் ஆஸ்பத் திரிக்குத் தூக்கிச் சென்று விட்டனர் என்ற விவரம் வெளிப்பட்டது!

காலை சுமார் 7 மணிக்கு ஊரை அடைந்த வன், மனப் பாரத்துடனேயே மாமாவின் இல் லத்தை நோக்கி நடந்தான். வீட்டை நெருங் கியபோது அங்குக் காணப்பட்ட மணப் பந்த லும் தோரணங்களும் அவன் உள்ளத்தைக் கொஞ்சம் உற்சாகப் படுத்தின. துரிதமாகச் சென்று உள்ளே நுழைந்தான். கல்யாணச் சந்தடி அங்கு நிறைந்திருந்தாலும், பரபரப்பு ஒன்றுமில்லாமல் எல்லோரும் நிதான மாகவே காணப்பட்டனர். முகூர்த்தம் ஒரு வேளை நடந்துவிட்டதா என்று எண்ணிய படியே கூடத்தை அவன் அடைந்தபோது மாமாவும் அலமுவும் எதிரே வந்து புன்ன கையுடனேயே வரவேற்றனர். சிகை நரைத்து வயதாகி விட்டிருந்த மாமா சற்றுத் தேகம் ஒடுங்கி விட்டுத்தான் இருந்தார். அலமுவின் தோரணையில் அமைதியும் சாந்தியும் வழிந் தன.

"என்னப்பா, மணி! 'ஆடி கழித்து ஐந் தாம் நாள்' என்பார்களே, அதுமாதிரி வந்தி ருக்கிறாயே கல்யாணத்திற்கு...! நேற்றே வரக்கூடாதா...!"

அவன் ஒரு கணம் திகைத்துவிட்டான்.

"என்ன மாமா! பத்தாம் தேதிதானே கல் யாணம் என்று போட்டிருந்தது...!"

நெற்றியைச் சுருக்கிய மாமா மெல்லச் சிரித்தார்.

"ஆமாம் அப்பா! இன்றைக்குத் தேதி என்னவென்று நினைக்கிறாய்...?"

வியப்புடன் அவன் அவரையும் அலமு வையும் மாறி மாறிப் பார்த்தான். எதிர்ப் புறச் சுவரில் மாட்டப்பட்டிருந்த காலண்டர் பதினொன்றும் தேதியைக் காண்பித்துச் சிரித்தது!

"அத்தான் எப்போதுமே இப்படித்தான்! நாள் கிழமைகூட நினைவிருக்காது...!" என்ற படியே அலமு உள்ளே சென்று காப்பியைக் கொணர்ந்து வைத்தாள்.

கல்லாய்ச் சமைந்திருந்த அவன் ஒன் றுமே பேசவில்லை. தன் அறிவீனத்தை நொந்துகொண்டிருந்தான் போலும்!

கடைசியில் ஒருவாறு சமாளித்துக் கொண்டு கேட்டான்.

ஹூம்! சரி! மாமா! கல்யாணம் எல்லாம் நன்றாக நடந்ததல்லவா...? மீனா எங்கே...?"

அலமுவின் முகத்தில் திருப்தி நிறைந் திருந்தது. மாமா நாற்காலியில் அமர்ந்த வாறே பதிலளித்தார்.

"நன்றாக நடந்ததப்பா! பிள்ளை வீட்டுக் காரர்கள் மிகவும் நல்லவர்கள். பிள்ளையும் கெட்டிக்காரன்! மீனாவுக்கு ரொம்ப அதிர்ஷ் டம்! என்னைப் பொறுத்தவரைக்கும் எது இருந்தாலும் இல்லாவிட்டாலும் பிள்ளை விஷயத்தில் ஒரே திருப்தி என்னவென்றால் அவன் ஆயுள்பாவம் தீர்க்கமாய் இருக் கிறது! அலமுதான் இப்படிப் போய்விட் டாள்! மீனாவாவது பூரண வாழ்வு வாழ வேண்டுமென்பதுதானே எல்லோருடைய விருப்பமும்...!"

மாமா சற்று நிறுத்திவிட்டு மேலும் தொடர்ந்தார்.

"பிள்ளையின் தாயார் தேக அசௌக்கிய மாய்ப் பட்டணத்திலேயே இருப்பதால், கிரு ஹப் பிரவேசத்தை அவர்கள் அங்கேயே வைத்துக்கொள்ள வேண்டுமென, நேற்றுத் தாலி கட்டியவுடன் இரவே பெண்ணை அழைத்துக்கொண்டு பட்டணம் போயிருக் கின்றனர்! ஏன்...? நீயும் நேற்றிரவுதானே புறப்பட்டு வந்தாய்! மாயவரம் ஜங்ஷனில் நீ வண்டி மாறும்போது இவர்களும் அங்கே தான் மாறி இருப்பார்கள். கவனித்திருந் தால் நீ அந்தக் கூட்டத்தைக்கூடப் பார்த் திருக்கலாமே...?"

அதற்குமேல் மாமா என்ன கூறினார் என் பதை அவன் கேட்கவேயில்லை! அவன் கை கால்கள் துவண்டு நடுங்கின! ஐயோ! நேற்

திரவு அவன் பார்த்த கல்யாணக் கூட்டம், மீனுவின் புக்ககத்தினரா! ரயிலில் அகப்பட்டுக்கொண்ட மாப்பிள்ளை மீனுவின் கணவனு...! இரண்டாம் முறையாகவுமா மாமாவின் ஜோசியத்திற்குத் தண்டனை...!

கையிலெடுத்த காபியை அவன் பருகவேயில்லை! அவன் கலவரத்தை அவர்கள் கவனித்தார்களோ என்னவோ! ஆனுல் அவனுக்கு மட்டும் ஒன்றுமே பேசத் தோன்றவில்லை! கல்யாணச் சிரமம் ஓய்ந்து சாந்தியுடன் காணப்பட்ட அலமுவிடம், மனம் துணிந்து இக் கோரச் செய்தியைக் கூறி அவள் இருதயத்தை அவனு தூளாக்க வேண்டும்...!

"என்ன அத்தான்! காப்பியைச் சாப்பிடாமலேயே எங்கேயோ வெறித்துப் பார்க்கிருயே...! என்ன அப்படி யோசனை...!"

அலமுவின் குரலில் ஒலித்த பழைய வாஞ்சை அவனை உலுக்கியது! தலையை உதறியபடியே எழுந்தவன் பையைக் கையிலெடுத்துக்கொண்டு,

"மாமா! நான் அவசரமாகப் பட்டணம் திரும்ப வேண்டும்! முக்கியமான வேலை ஒன்றை மறந்து வந்துவிட்டேன்...! அடுத்த ரயிலைப் பிடித்தாக வேண்டும்...! போய் வருகிறேன், அலமு...!" என்றபடியே வெளியே வந்தான். எல்லைமீறிய வியப்புடன் மாமாவும், அலமுவும் அவனைப் பின் தொடர்ந்து வருவதற்குள் அவன் தெருக் கோடியை அடைந்து விட்டான்.

"அத்தான் எப்போதுமே இப்படித்தான்...!" என்ற அலமுவின் குரலில் ஏக்கம் தொனிக்கத்தான் செய்தது! மாமா ஒன்றுமே கூறவில்லை.

ஸ்டேஷனை அடைந்து உள்ளே நுழைந்த அவன், திரும்பி எதிரே இருந்த தபாலாபீசைப் பார்த்தான். அப்போதுதான் தந்திச்சேவகன் ஒருவன் ஒரே ஒரு தந்தியை மட்டும் கையில் எடுத்துக்கொண்டு சாவதானமாய், சைகிளில் ஏறிக்கொண்டிருந்தான்!

வெறிகொண்டவன்போல் பிளாட்பாரத்தினுள் விரைந்தவன், அப்போதே புறப்பட்ட சென்னை வண்டியில் தாவி ஏறினுன். ●



# நியூயார்க்கில் ஒரு நாள்

சி. வி. ராமகிருஷ்ணன்

'La Guardia' விமான நிலயத்தின் வாயிலைத் தாண்டி வெளியே வரும்பொழுது ஓர் அம்மையார் எங்களுக்காகக் காத்திருப்பதைக் கண்டோம். புன்முறுவலுடன் எங்களை வரவேற்ற இவர் யார் என்பது முதலில் புரியவில்லை. பிறகு 'Institute of International Education' சார்பாக வந்திருக்கிறார் என்று அறிந்தோம். "அமெரிக்கப் பெண்களின் அமரிக்கையான புன்முறுவலே அலாதிதான், நம் நாட்டுப் பெண்களைப் போல 'கக்கே புக்கே' என்று வாய் விட்டுச் சிரிப்பதில்லை" என்று நினைத்தேன். பின்னர்தான் தெரிந்தது அந்த அமெரிக்கச் சிரிப்பின் மர்மம்! ஒருவேளை அப்படிச் சிரித்தால் அவர்கள் ஒழுங்கற்ற பல் வரிசைகள் கண்ணில் பட்டுவிடுமோ என்ற பயத்தாலோ என்னவோ! அமெரிக்காவில் யாருக்காவது பல் அழகாக இருந்தால்கூட ஏமாந்துவிடக் கூடாது! அது அநேகமாகச் செயற்கைப் பற்களாக இருக்கலாம்! எங்களை வரவேற்ற அம்மையார், தம் முகத்திலும், மனத்திலும் இருப்பதை வெளிக்காட்டாமல் இருக்கத்தான் ராஜாஜி 'கூலிங்க்ளாஸ்' (அவர் போட்டுக் கொண்டிருந்த கறுப்பு மூக்குக் கண்ணாடியைத்தான் சொல்கிறேன்) அணிந்துகொண்டிருந்தார் போலும். (இப்பொழுது ராஜாஜிகூடக் கறுப்புக் கண்ணாடியை விட்டுவிட்டதாகக் கேள்வி.) அந்த அம்மையார் எங்களையும், எங்கள் சாமான்களையும் தம் காரில் திணித்துக்கொண்டு மணிக்கு எழுபது மைல் வேகத்தில் காரை ஓட்ட ஆரம்பித்தார்; கப்பலிலும், விமானத்திலும் வந்துகொண்டிருந்த பொழுது நாங்கள் ஓரிடம், எங்கள் சாமான்கள் ஓரிடம் என்று இருந்தது. இப்பொழுது திரும்பவும் எங்கள் சாமான்களை அருகிலேயே திணித்துவிட்டவுடன் இந்தியாவில் இருப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டுவிட்டது! தெருவில் கார்கள் நடமாட்டம்தான் மனிதர்கள் நடமாட்டத்தைவிட அதிகம். மணிக்கு எழுபது மைல் வேகத்தில் கார்கள் ஒரேயடியாகப் பறப்பதைக் கண்ட எனக்கு உயிர் பத்திரமாக இருக்க வேண்டுமே என்ற பயம் உண்டாகிவிட்டது. வாயு வேகம் மனோவேகத்தில் கார் பறந்து கொண்டிருக்கும்பொழுது 'இவ்வளவு வேகமாகக் கார் செல்கிறதே' ஆக்ஸிடென்ட் (விபத்து) ஏற்பட்டால் என்ன செய்கிறது என்று விசாரித்தேன், அமெரிக்காவில் கார்களும் சகஜம், அவை வேகமாகச் செல்வதும் சகஜம், கார் விபத்துகளும் சகஜம் எனப் பதில் கிடைத்தது. கார் விபத்துகள் அதிகமாகையால் ஒவ்வொரு காரையும் இன்ஷ்யூர் செய்து விடுகிறார்கள். மனிதனுக்குச் சேதம் ஏற்பட்டால் அவன் மனைவிக்கு இன்ஷ்யூரன்ஸ் பணம் கிடைக்கும். இந்த விவரங் கேட்டபொழுது 'குட்டுப் பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப்பட வேண்டும்' என்று சொல்வது போல, செத்தாலும் கார் இன்ஷ்யூரன்ஸ் செய்துகொண்டு கார் விபத்தில் சாகவேண்டும் என்று தோன்றியது! காசியில் செத்தால் முக்தி என்று சொல்வார்கள். காசியில் செத்தால் அருள் உலகம் கிடைக்கத்தான் 'சான்ஸ்' உண்டு. இங்கே கார் விபத்தில் செத்தாலோ நம் மனைவிக்கு நிச்சயமாக பொருள் உலகம் உண்டு. 20000 டாலர் (லக்ஷம் ரூபாய்) என்றால் சும்மாவா! மனைவி மக்கள் பாடு குஷிதான்! அவர்கள் நம்மை வாழ்த்துவதிலேயே நமக்கு நிச்சயமாக ஸ்வர்க்கம் கிடைத்துவிடும்! நம்முடைய ஆத்மாவும் மனைவி மக்கள் என்ன செய்கிறார்களோ என்ற கவலையில்லாமல் சாந்தியடையும்! இவ்வாறு எண்ண அலைகள் ஒன்றன்பின் ஒன்றாக மோதிக்கொண்டிருக்கும்போதே திடீரென்று நான் என் நண்பர்மீது மோதிக்கொண்டேன்! 'ஐயோ, இன்னும் கார் இன்ஷ்யூரன்ஸ் செய்து கொள்ளவில்லையே' என்று அலறினேன். காரை ஓட்டிக்கொண்டுவந்த அம்மையார், "நாம் இறங்கும் இடம் வந்தாகிவிட்டது. ஸீட்டில் சாய்ந்து உட்கார்ந்தால் 'ப்ரேக்' போட்டு நிறுத்தும்பொழுது சௌகரியமாக இருக்கும்" என்று நிதானமாகச் சொன்னார்!

காரை விட்டு இறங்கியவுடன் எதிரே பிரம்மாண்டமான ஹட்ஸன் ஹோட்டல் தென்பட்டது. "இங்கேதான் உங்களுக்கு அறை ரிசர்வ் செய்யப்பட்டிருக்கிறது. நீங்கள் போய், 'ரெஸ்ட்' எடுத்துக்கொண்டு

பிறகு எங்களை ஆபீஸில் வந்து சந்தியுங்கள்'' என்று சொல்லிவிட்டு அந்த அம்மையார் விட்டார் கார் சவாரி! நம் ஊராயிருந்தால் இவ்வளவு நாசுக்காகவும் 'business-like' ஆகவும் போகத் தெரியாது. கூடவே வந்து தொண தொணவென்று தலைவேதனை செய்வார்கள். வெளிநாட்டின் கல்வி ஸ்தாபனத்தின் அதிதிகளுக்கு ஹட்ஸன் ஹோட்டலிலோ அல்லது Y. M. C. A. யிலோதான் சாதாரணமாகத் தங்கஇடம் ஏற்பாடு செய்யப்படுகிறது. இரண்டு ஸ்தாபனங்களும் இவ்விஷயத்தில் அரிய சேவை செய்கின்றன. ஆபீஸுக்குச் சென்று எங்கள் பெயரைச் சொல்லி அறைச் சாவியை வாங்கிக்கொண்டு Lift-ல் ஏறி 11ஆவது மாடிக்குச் சென்றேன்.

அறையைத் திறந்தவுடன் என் கண்களையே என்னால் நம்பமுடியவில்லை. ஒரு சிறிய அறைக்குள் இன்னொரு உள் அறை. அதிலே கையலம்பக் குழாய், ஸ்நானம் செய்யத் தொட்டி, சோப், துண்டு முதலிய எல்லா வசதிகளும். அறையின் இன்னொரு மூலையில் 'கோட்' முதலியவற்றைக் கழற்றி வைப்பதற்கு 'Closet', ரேடியோ, டெலிபோன், டெலிவிஷன் முதலிய எல்லா வசதிகளும் அறைக்குள்ளேயே இருக்கின்றன. மிஸ் மாலினி படம் ஞாபகத்துக்கு வந்தது! பெட்டியை ஒரு ஓரமாக வைத்துவிட்டு நேரே ஸ்நான அறைக்குச் சென்றேன், ஸ்நானம் செய்துவிட்டு வெளியே வந்தவுடன் மேஜையிலிருந்த நோட்டீஸ் ஒன்று என் கவனத்தைக் கவர்ந்தது. டெலிபோன் மூலம் தந்திகொடுக்கலாம் என்று 'Western Union' விளம்பரம். உடனே குஷியாக டெலிபோனைக் கையிலெடுத்தேன் 'Western Union please'' என்றேன்; உடனே ''Hallo Western Union please'' என்ற பதில் வந்தது. எனக்கு இருந்த பரபரப்பில் ''என் மனைவிக்கு ஒரு 'கேபிள்' கொடுக்கவேண்டும்'' என்றேன். பெயர், விலாசம், ஊர் எல்லாவற்றையும் கொடுத்துவிட்டுச் சிரித்துக்கொண்டு ''Monarch arrived safe'' என்று சிலேடையாகச் சொன்னேன். ('மானர்க்' பத்திரமாக வந்து சேர்ந்தது ராஜா சௌக்கியமாக வந்துசேர்ந்தார்) எங்கள் விமானத்தின் பெயர் 'Monarch'. ராஜி தந்தியைப் பார்த்துவிட்டு,தன் 'ராஜா' சௌக்கியமாகப் போய்சேர்ந்ததைக் கேட்டு மகிழ்வாளல்லவா! டெலிபோன் ஆபரேடர் என்னுடைய போன் நம்பரை விசாரித்துக் கொண்டு 'டக்கென்று' ரிஸீவரைக் கீழே வைத்துவிட்டாள். ''அட, இங்கு 'கேபிள்' (Cable)கூட இனமாகக் கொடுக்கலாம் போலிருக்கிறது. பணத்தைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லையே'' என்று நினைத்துக் கொண்டேன். அப்புறம் ஹோட்டலை விட்டு வெளியே வரும்பொழுதுதான் கேபிள் சார்ஜ் 3 டாலர் (15 ரூபாய்) என்று தெரிந்தது. ஒரு 'ஏர்மெயில்' லெட்டரே போட்டிருக்கலாமே என்று பிறகு தோன்றியது! பசித்தவன் பழங்கணக்குப் பார்த்து என்ன செய்வது!

''பறையன் பல் தேய்த்துப் பொறுக்கமாட்டான், பார்ப்பான் குளித்துப் பொறுக்க மாட்டான்'' என்று பழமொழி உண்டு. ஸ்நானம் செய்தவுடன் பசிக்க ஆரம்பித்தது. உடனே போனை எடுத்து ஹோட்டல் புரொப்ரைட்டரிடம் காபி, டிபன், அனுப்பும்படி சொன்னேன். 'இந்த ஹோட்டலில் ஆள் கிடையாது, கீழே காப்டீரியாவுக்கு (Cafeteria) வந்துதான் சாப்பிட வேண்டும் என்று மரியாதையாகப் பதில் வந்தது 'சிவனே' என்று கீழே சென்றேன். இந்த ஹோட்டல்களில் படுக்கை, ரூம் முதலியவைகளைச் சுத்தம் செய்யும் வேலைக்காரர்கள் கண்ணில் தென்படுவதே இல்லை! இதைப்போன்ற பெரிய ஹோட்டல்களில் கல்யாணங்கள் செய்வதற்குப் பெரிய ஹால்களும், பெரிய மீட்டிங்குகள் நடக்க லெக்சர் ஹால்களும், பணக்காரர்கள் சாப்பிடக் கபே (Cafe)க்களும், நம்மைப்போன்றவர்கள் சாப்பிட Cafeteria (நாமே வேண்டியதை எடுத்துச் சாப்பிடும் இடம்.) களும் இருக்கும். நியூயார்க்கிலேயே பெரிய (Woldorf Astoria) ஹோட்டலைப்பற்றி வாசகர்களுக்குத் தெரிந்திருக்கலாம். இந்த ஹோட்டலில்தான் அயல்நாட்டுத் தூதர்கள் முக்கியமான டீபார்ட்டிகளை அளிக்கிறார்கள். இங்கு ஹோட்டல்கள் சமூக நடவடிக்கைகளுக்கு ஏற்ற இடமாகக் கருதப்படுகின்றதே ஒழிய நம் நாட்டிலிருப்பதுபோல, காபி, பலகாரக் கடை அல்ல.

கீழே உள்ள காப்டீரியாவிற்குச் சென்று எனக்கு வேண்டிய பழரசம், ரொட்டி, பால் மூன்றையும் எடுத்துக்கொண்டேன். அமெரிக்காவில் இருக்கும்வரை துறவியைப் போல் பாலும் பழமும் உட்கொள்ள வேண்டியதுதான்! வேறு வழி? சாப்பிடும் பொழுது ராஜி வார்த்துப்போடும் முறுகலான நெய் தோசை ஞாபகத்துக்குவந்தது. ராமாயணத்தில் ராவணனிடம் அகப்பட்டுக்கொண்டு அல்லலுறும் அந்த இக்கட்

டான நிலையிலும்கூட, சீதை ஹனுமானிடம் "ராமருக்கு இப்பொழுது யார் சமைத்துப் போடுகிறார்கள்? அதிதிகளை யார் உபசரிக்கிறார்கள்?" என்று மகா அக்கரையுடன் விசாரிக்கும் இடம் நினைவுக்கு வந்தது! ராஜியும், பாவம், அதுமாதிரிதானே கவலைப் படுவாள் என்று நினைத்துக்கொண்டேன். அவள் கவலைப்பட்டாலும் படாவிட்டாலும், நமக்காக ஒருவர் கவலைப்படுவதாக நினைத்துக்கொண்டால் அதிலேயே ஒரு திருப்தி இருக்கிறதல்லவா! அப்படிப்பட்ட அருமையான மனைவியைப்படைத்த ராமர் கூட, லக்ஷ்மணன் மூர்ச்சித்து விழுந்த பொழுது, "தேசே தேசே களத்ராணி, தேசே தேசேச பாந்தவா: | தம்து தேசம் நபச்யாமி யத்ர ப்ராதா ஸஹோதர:" "போகுமிடமெல்லாம் மனைவிகள் கிடைப்பார்கள்; உன்னையொத்த ஸஹோதரன் எங்கும் கிடைக்கமாட்டானே" என்று புலம்பினாராம்! ஸீதை பக்கத்திலில்லை என்ற தைரியத்தில் அப்படிச் சொன்னாரோ, என்னவோ! ராமாயணத்தில் சொல்லியிருக்கிறபடி அமெரிக்காவில் மனைவி வேண்டுமானாலும் கிடைப்பாள். ஆனால் ஒரு குறைதான் அமெரிக்க மனைவியிடமிருந்து நெய்தோசையும் தேங்காய் சட்னியும்தான் கிடைக்காது! அதனால் மனைவி தேடிப் பயனில்லை!" என்ற முடிவுக்கு வந்தேன்!



"நீலவானத்தின்மீது உலாவுவோம்" மேகங்களைத்தொட ஆவலுடன் இருக்கும் எம்பயர் கட்டிடத்தைப் பாருங்கள்.

காலை உணவை முடித்துக்கொண்டு அறைக்குத் திரும்பினேன். அறையில் ரேடியோ, டெலிவிஷன் முதலிய எல்லாம் இருந்தாலும் அவற்றுக்கு அவ்வப்பொது தட்சிணை கொடுத்தால்தான் அவை நமக்குத் தொண்டு செய்யும்! தவிர, உலகிலேயே மிகப்பெரிய நகரத்துக்கு முதன் முறையாக வந்துவிட்டு அறையிலேயே யார் உட்கார்ந்திருப்பார்கள்? குஷியாகக் கிளம்பினேன் ஊரைச் சுற்றிப் பார்க்க.

நியூ யார்க்கில் வழி கண்டுபிடிப்பது மிகவும் சுலபம். பெரிய பெரிய வீதிகள் குறுக்கும் நெடுக்குமாக ஒன்றுக்கொன்று இணையாகச் செல்கின்றன. நகரம் சதுரவடிவமாக இருக்கிறது. குறுக்காகச் செல்லும் வீதிகளை ஸ்ட்ரீட் 'Street' என்றும், நெடுக்காகச் செல்வதை அவென்யூ 'Avenue' என்றும் சொல்கிறார்கள். தெருக்களுக்குப் பெயர் கிடையாது, இத்தனையாவது 'ஸ்ட்ரீட்' அல்லது 'அவென்யூ' என்று நம்பர்தான் உண்டு. ஆகையினால் நாம் போகவேண்டிய இடத்துக்கு இன்னும் எவ்வளவு தெருக்களைக் கடக்கவேண்டும் என்று நிச்சயமாகத் தெரிகிறது. நம் நாட்டில் முக்கிய பட்டணங்களில்கூட சந்து பொந்துகள் ஏராளமாக மலிந்துகிடக்கின்றன. பலமுறை இந்த நீண்ட சந்துகளின் வழியாக நெடுகப்போய் மேலே வழியில்லாமல் சந்து ஒரு குட்டிச் சுவருடன் முடிவதைக் கண்டு திணறியதும் உண்டு! 'Coming against a blank wall' என்ற சொற்றொடரின் முழுப் பொருளும் அப்பொழுது அருமையாக விளங்கும்! 'குட்டிச் சுவரில் போய் முட்டிக்கொள்' என்று இந்த அனுபவத்தைதான் சொன்னார்களோ, என்னவோ! லண்டனிலும் ஒரு காலத்தில் இந்தமாதிரி சந்துகள் மலிந்திருந்தன. தெருவுக்கு நடுவே சாக்கடை. அதில் இருபுறத்திலிருந்தும் குப்பைகளைக்கொண்டு போடுவார்களாம்! தெருவைக் கடப்பது நினைவில் கூட முடியாத காரியம்! ஆனால் லண்டனுக்கு வந்த அதிர்ஷ்டம் அங்கு ஒரு பெரிய தீ விபத்து ஏற்பட்டு, பட்டணம் முழுவதும் சாம்பலாகிவிட்டது! புதிதாகக் கட்டும்

பொழுது அழகாகக் கட்டிவிட்டார்கள்! இந்த வரலாற்றைப் படித்தபொழுது நம் நகரங்களுக்கும் இப்படி ஒரு அதிர்ஷ்டம் அடித்தால் நல்லது என்றுகூடத் தோன்றியது! ஏற்கெனவே வீட்டுக்குச் சுண்ணும்படிக்கக்கூட வழியில்லாதவர்கள் புதிதாக வீடு எப்படிக் கட்டுவார்கள்? பாவம்! என்ற நினைவு உடனே வந்தது. நம்நாட்டிலும் புதிதாக இப்பொழுது கட்டும் இடங்களில் நல்ல ப்ளானுடன் கட்டுகிருர்கள். சென்னையில் புதிதாகக் கட்டியிருக்கும் காந்தி நகரில் தெருக்களுக்கு நம்பர் கொடுக்கும் முறைகூட வந்துவிட்டது. நம்நாட்டுப் பட்டணங்களின் வயதை யோசித்துப் பார்க்கும்பொழுது அவற்றின் நகர அமைப்பு அவ்வளவு மோசம் என்று சொல்ல முடியாது. பொதுவாக, ஊருக்கு நடுவே ஒரு கோவில்—அதைச்சுற்றி மாடவீதிகள், குறுக்காகச் சந்நிதி தெருக்கள்—மற்ற வீதிகள் இவற்றுக்கு இணையாக இருக்கின்றன. ஆனால் கொஞ்ச தூரம் சென்றபின் இந்த அமைப்பு குட்டிச் சுவராகப் போய் ஒழுங்கற்ற முறையில் சந்துகள் ஆரம்பித்து விடுகின்றன. சுமார் 50 வருஷங்களுக்குமுன் நம்நாட்டுக்கு வந்த அமெரிக்க அறிஞர் ஒருவர் காஞ்சீபுரத்தின் நகர அமைப்பு அதனுடைய பழமையைக் கருதிப் பார்க்கும்பொழுது பிரமிக்கத் தகுந்தது என்று வாயாரப் புகழ்ந்திருக்கிருர்.

நான் தங்கியிருந்த ஹட்ஸன் ஹோட்டல் 'மான்ஹாட்டன்' (Manhattan) என்ற பகுதியில் இருக்கிறது. இப்பகுதிதான் நியூயார்க்கின் முக்கிய வியாபார ஸ்தலம். இங்கேதான் உலகப்பிரசித்திபெற்ற Wall Street இருக்கிறது. நம் நாட்டில் விலைவாசிகள் திடீரென்று ஏறுவதும் இறங்குவதும்கூட Wall Streetஇன் நாடித்துடிப்பைப் பொறுத்தது! ஷேர் மார்க்கெட் அன்பர்களைக் கேட்டால் Wall Streetஇன் முக்கியத்துவம் தெரியும். இங்கேதான் நியூயார்க்கின் வானளாவும் கட்டடங்களும் (Sky skrapers) பிரசித்தமான வியாபார ஸ்தாபனங்களும் சங்கங்களும் இருக்கின்றன. இக்கட்டடங்களின் உன்னதமான அமைப்பைப் பார்த்துப் பிரமித்துக்கொண்டே வீதி வழியாகச் செல்லும்பொழுது Y. M. C. A. Sloane House என்ற போர்டு என் கவனத்தைக் கவர்ந்தது. Y. M. C. A. உலகம் முழுவதும் வியாபித்துள்ள ஸ்தாபனம் என்பது எல்லாருக்கும் தெரியும். நியூயார்க்கில் மாத்திரமேயுள்ள பதினெட்டு கிளை ஸ்தாபனங்களில் இது ஒன்று. இந்தியாவிலும் இந்த ஸ்தாபனத்தின் கிளைகள் பல இருக்கின்றன. சென்னையில் உள்ள Y. M. C. A, பல துறைகளிலும் நல்ல தொண்டு செய்து வருகிறது. போர்டைப் பார்த்ததும் உள்ளே நுழைந்தேன். 'Sloane House' என்றால் என்ன என்று தெரிந்துகொள்ள ஆவல்! உள்ளே நுழைந்தால் அங்கேயே லாண்ட்ரி, ஸலூன், ஹோட்டல் முதலிய எல்லா வசதிகளும் இருக்கின்றன. (Book Stall) புக் ஸ்டால் ஒன்று இருக்கிறது. தவிர, இளைஞர்களுக்கு வேலை, கல்வி முதலியவை விஷயமாக யோசனை சொல்வதற்கு ஒரு ஆலோசனைக் குழு (Advisory Board) இருக்கிறது. விசேஷமாக அயல் நாட்டிலிருந்து வருபவர்கள் இதன் உதவியைத் தாராளமாக நாடலாம். Y. M, C. A. மெம்பராக இருப்பவர்களுக்கு இங்கே குறைந்த செலவில் தங்க வசதி உண்டு. மேலும் எந்த நாட்டுக்குச் சென்றாலும் அங்குள்ள Y. M. C. A, கிளையில் தங்க இடம் ஏற்பாடு செய்து தருகிருர்கள். மெம்பரல்லாத மற்றவர்களும் இங்கே தங்கலாம். ஆனால் இடம் கொடுப்பதில் முதல் உரிமை மெம்பர்களுக்குத்தான்.

உள்ளே சுற்றிப் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது ஓர் அமெரிக்கர் என்னுடன் பேச்சுக் கொடுத்தார். பேச்சுப் போக்கில் "Are you going to schooling?" (பள்ளிப் படிப்பிற்காக வந்திருக்கிறீர்களா?) என்று விசாரித்தபோது எனக்குத் திகைப்பாக இருந்தது. "இல்லை விஞ்ஞான ஆராய்ச்சியில் பயிற்சி பெறுவதற்காக வந்திருக்கிறேன் Enzyme Institute-ல் வேலை செய்யப் போகிறேன்" என்று சொன்னேன். அவர் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தார்! அப்புறந்தான் தெரிந்தது, அமெரிக்காவில் பள்ளிக்கூடம், காலேஜ், ஆராய்ச்சிக் கல்வி எல்லாவற்றுக்குமே பொதுவில் 'ஸ்கூலிங்' என்ற ஒரே வார்த்தைதான் உபயோகிக்கப்படுகிறது என்று.

உள்ளே நுழைந்தால் ஒன்றுமே வாங்காமல் திரும்பி வரலாமா? புக் ஸ்டாலில் Y. M. C. A. Guide Book (வழிகாட்டும் நூல்) ஒன்று வாங்கிக்கொண்டேன். நியூ யார்க்கில் பார்க்கவேண்டிய முக்கியமான இடங்கள் என்னென்ன, அவற்றுக்கு எப்படிச் செல்லவேண்டும் முதலிய எல்லா விஷயங்களையும் இதிலிருந்து தெரிந்துகொள்ளலாம். ஒருவரையும் போய் விசாரித்துக்கொண்டிருக்க வேண்டியதில்லை. நம் நாட்டிலும் பெரிய நகரங்களுக்கு இந்த மாதிரி நல்ல புத்தகங்கள்

வெளிவந்தால் நன்றாக இருக்கும். சென்னைக்கு முதல் முதலாக வருகிறவர்கள் சரியான துணையில்லாவிட்டால் வழிதெரியாமல் திக்கு முக்காடிப் போகிறார்கள். யாரையாவது விசாரித்தாலோ ஒன்றுக்கொன்று சொல்லிவைப்பதால் திண்டாட்டம் இன்னும் அதிகமாகிறது. ஒரு சம்பவம் என் நினைவிற்கு வருகிறது. நான் பூனாவுக்குப் புதிதாகப் போயிருந்தபோது என் நண்பன் ஒருவனுடன் 'பார்வதி மலைக்கோவில்' பார்ப்பதற்காகக் காலை எட்டு மணிக்கு வீட்டிலிருந்து கிளம்பினேன். இருவருக்கும் வழிதெரியாது. என்ன பிரமாதம், விசாரித்துக்கொள்ளலாம் என்று கிளம்பிவிட்டோம், வழியில் யாரைக் கேட்டாலும் 'ஸீதா ஜாவ்' 'நேரே போ' என்ற ஒரே பதில்தான்—ஆனால் ஒவ்வொருவரும் காட்டிய திசைதான் வித்தியாசமாக இருந்தது! கடைசியில் இப்படியும் அப்படியுமாகச் சுற்றிக்கொண்டு போய்ச் சேர்வதற்குள் மணி பன்னிரண்டாகிவிட்டது. திரும்பி வரும்பொழுது பேசாமல் 'டாங்கா' வைத்துக்கொண்டு வந்துசேர்ந்தோம்!—மற்றொரு விஷயம் ஞாபகத்துக்கு வருகிறது. சில வருஷங்களுக்கு முன் இங்கிலாந்து சென்று திரும்பிய என் நண்பர் ஒருவர் சென்னையில் இருக்கிறார். அவர் லண்டனில் பிரயாணிகளுக்காகச் செய்திருக்கும் அற்புதமான ஏற்பாடுகளையும் வெளியிட்டிருக்கும் அழகான (Guide) புத்தகங்களையும் பற்றிப் பிரமாதமாக வர்ணித்துவிட்டு "நான்கூட ஒரு 'ப்ளான்' பண்ணியிருக்கேன் ஸார்! நம்ப மெட்ராஸுக்கு ஒரு பஸ்ட்க்ளாஸ் கைட்புக்கு' (First class Guide Book) போடணும்—இன்னும் இரண்டு மூணு மாஸத்துக்குள் வெளியிட்டுவிட்டால் பிரமாதமாக விற்பனையாகும்" என்று அடிக்கடி சொல்லுவார். ஆனால் இன்னும் வெளியீடு வந்தபாடில்லை! நம்மவர்களுக்குத் திட்டங்கள் ஏராளமாக இருக்கின்றன—ஆனால் உருவாகும் அளவுதான் மிகக் குறைவு!

(Guide Book)ஐயும் கையில் வைத்துக்கொண்டு நகரத்தைச் சுற்றிப்பார்க்க மனத்திலேயே ஒரு திட்டம் தயாரித்தவண்ணம் கொஞ்சதூரம் நடந்தேன். உலகின் எல்லாப் பாகங்களிலிருந்தும் ஜனங்களை நியூயார்க்கில் காணலாம். பம்பாய் கல்கத்தா மாதிரி நகரங்களிலேயே எல்லாத்தேசத்தாரையும் பார்க்க முடிகிறது. ஆகையால் உலகின் மிகப் பெரிய நகரமாகிய நியூயார்க்கில் எல்லாத் தேசத்தவர்களும் காணப்படுவதில் வியப்பு ஒன்றுமில்லை. ஏராளமான இந்தியர்கள் இங்கே வசிப்பதைப் பார்த்துவிட்டு அமெரிக்கா முழுவதுமே இந்தியர்கள் அதிகம் என்று நினைத்துவிடக்கூடாது. நம் நாட்டிலும் பெரிய நகரங்களில் அயல்நாட்டாரை அதிகமாகப் பார்க்கமுடிகிறது. ஆனால் குக்கிராமங்களில் இன்றுகூட வெள்ளைக்காரனைப் பார்ப்பதென்றால் ஒரு வேடிக்கைதான். அதுபோல் அமெரிக்காவின்கிராமங்களிலும் இந்தியன் ஒரு புதுமைதான். ஆனால் ஒரே ஒரு வித்தியாசம்—அவர்கள் சற்றும் தங்கள் ஆவலை வெளிக்காட்டாமல் அவரவர்கள் வேலையைக் கவனிக்கிறார்கள். நம் ஊரிலோ எல்லாரும் கைக் காரியத்தை விட்டுக்கும்பல்கூடி, பேசஆரம்பிக்கிறார்கள். என் ஆங்கிலேய நண்பர் ஒருவர் "உங்கள் தெருக்கள் வழியாக நான் செல்லும்பொழுது நான் ஏதோ பொருட்காட்சிச்சாலையில் வைக்கப்படவேண்டிய ஜந்துவோ என்ற சந்தேகம் எனக்கு உண்டாகிறது!" என்று கூறியது நினைவுக்கு வருகிறது!

(தொடரும்)



"நீலக்கடல் முழுவதும் கப்பல் விடுவோம்"
கப்பல்மூலம் அந்நியர்களைக் கர்வத்துடன் வரவேற்கும் கட்டிடக் கூட்டங்கள்.

# ஜண்டு பார்மஸூடிகல் வொர்க்ஸ் லிமிடெட்.




சகல ஆயுர்வேத மருந்துகளையும், இங்கிலீஷ் மருந்துகளையும் ஏராளமாக, சாஸ்திரோக்தமாக, தயாரிப்பவர்கள்

## "ஜண்டு கேஸரி ஜீவன்"

இது சாதாரண இருமல், ஜலதோஷம், ஆஸ்த்மா தொண்டைக் கம்மல், சுவாசகோச அழற்சியால் தோன்றும் இருமல் முதலிய வைகளுக்குச் சிறந்தது. மேலும் இது வக்கீல்கள், உபாத்தியா யர்கள், நூல் ஆசிரியர்கள் போன்றவர்களுக்கு மூளைக்குத் தெளிவையும், ஞாபக சக்தியையும் அளிப்பதோடு தேகத்திற்கு, தேஜஸூம் வீரியவிருத்தியும் அளிப்பதில் சிறந்தது.

*1 பவுன் 6—8—0   ½ பவுன் 3—6—0   ¼ பவுன் 1—13—0*

எல்லா மருந்து வியாபாரிகளிடமும், அல்லது ஜண்டு பார்மஸி ஏஜண்டுகளிடமும் கிடைக்கும்.

சென்னை ராஜதானி ஏஜண்டுகள்:

**தாமோதர் அண்டு கோ.,**

**113, நயனியப்பநாயக்கன் தெரு சென்னை, 3.**

## அவளுக்குத் தெரிந்திருந்தால்







ஆயுர்வேதாஸ்ரமம் லிமிடெட். மதராஸ். 17.

# மனப் போக்கு

ஆசிரியர்: பிரேம்சந்த்.....

தமிழாக்கம்: ராமகுமார்.



மிக்க அழகு வாய்ந்த இளம் பெண் ஒருத்தி விடியற்காலை வேளையில் காந்தி பார்க்கில் உள்ள சிமிட்டுப் பெஞ்சியில் படுத்து நல்ல உறக்கத்தில் ஆழ்ந்திருந்தாள். இது யாரையும் வியப்பில் ஆழ்த்தித் திடுக்கிட வைக்கக்கூடிய சம்பவந்தானே! எத்தனையோ பெண்கள் பார்க்குக்கு வருகிறார்கள், போகிறார்கள், காற்று வாங்குகிறார்கள்; கலகலவென்று பேசிப் பொழுது போக்குகிறார்கள்; ஓடியாடி விளையாடிப் பூஞ்செடிகளுள் மறைந்து கண்ணாமூச்சிகூட விளையாடுகிறார்கள். ஆனால் அவற்றையெல்லாம் யாரும் அவ்வளவாகப் பொருட்படுத்துவதில்லை. ஆனால் கமனீயமான தேகத்தை உடைய காரிகை ஒருத்தி பாத்திகளுக்கிடையே இருக்கும் சிமிட்டுப் பெஞ்சியில் தன்னை மறந்து உறங்குகிறாள் என்றால், அது யாரும் எதிர்பாராத வியப்பை அளிக்கும் விஷயம்தானே? போவோர் வருவோர் யாவரையும் காந்தம் போலக் கவரும் சக்தி புஷ்பப் பாத்திகளுக்கென்றே ஏற்பட்டது போலும்! குழந்தைகள், காளைப்பருவத்தினர்கள், கிழவர்கள்—யார் உலாவ வந்தாலும் பச்சைப் பசேல் என்றிருக்கும் புஷ்பப்பாத்திகளைக் கண்டுவிட்டால் ஒருகணமாவது மெய்மறந்து நின்றுவிடுவார்கள். காளைப்பருவத்தினர்கள் கண்களால் சிரித்து இதழ்களால் புன்முறுவல் பூப்பார்கள். கவலையே உருவான கிழவர்களுடைய கவலையைத் தீர்ப்பது இந்த புஷ்பப் பாத்திகள்தான். இந்தப் புஷ்பப் பாத்திகளுக்கிடையேதான் காதல்.

இளம் பெண்கள் நாணம் தாளாமல் நகத்தினால் தரையைச் சுரண்டிய வண்ணம் நிற்பார்கள். இந்த இன்பக் காட்சிகளைப் பார்க்க வேண்டும் என்றால் பார்க்கில் உள்ள புஷ்பப் பாத்திகளிடையே தினசரி காணலாம்.

* * *

வஸந்தனும் ஹாசிமும் நிக்கரும் பனியனும் அணிந்துகொண்டு, வெறுங்காலுடன் ஓடிக்கொண்டிருக்கிறார்கள். கிறிஸ்துமஸ் விடுமுறையின்பொழுது ஒலிம்பிக் விளையாட்டுக்கள் நடப்பதாக இருந்தது. அதற்காகத்தான் அவர்கள் இருவரும் தங்களைத் தயார் செய்துகொண்டிருந்தனர். இருவரும் இந்த இடத்துக்கருகே வந்ததும் தங்களை அறியாமலே நின்றுவிடுகிறார்கள். பெஞ்சியில் படுத்து உறங்கும் இளம் பெண்ணைக் கண்டதும் ஓடுவதை நிறுத்திவிட்டுத் தங்கள் தங்கள் சிந்தனையை ஓடவிடத் தொடங்குகிறார்கள்.

"இவளுக்குத் தூங்க வேறு இடமே கிடைக்கவில்லையா, என்ன?" என்று கேட்டான் வஸந்தன்.

"யாராவது வேசியாக இருப்பாளோ, என்னவோ?" என்றான் ஹாசிம்.

"ஆனால், வேசிகள் கூட இவ்வளவு வெட்கங் கெட்டவர்களாக நடந்துகொள்ள மாட்டார்கள் அப்பா!"

"வேசிகள் வெட்கங் கெட்டவர்களாக இல்லாவிட்டால் அவர்கள் வேசியே அல்ல!"

"எத்தனையோ குடும்பப் பெண்கள் வேசிகளைப்போல் நடந்து கொள்கிறார்கள் இந்தக் காலத்தில். ஆனால் ஒரு வேசிகூட இப்படி மானத்தைவிட்டு நாலுபேர் நடக்கும் இடத்தில் தூங்கமாட்டாள்!"




"உனக்கு என்ன அப்பா தெரியும்? தன் அழகைக் காட்ட இது ஒரு புதிய 'ஆர்ட்'டாக இருக்கலாம் அல்லவா?"

"'ஆர்ட்'டுக்கு அழகு எது தெரியுமா? உருவத்தை மறைப்பதுதான்; வெளிக்காட்டுவதல்ல. வேசிகளுக்கு இந்தக்கலையின் ரகசியம் நன்கு தெரியும்"

"அவர்கள் அப்படி மறைப்பதற்குக் காரணம் இன்னும் அதிகமாக ஒருவருடைய உள்ளத்தைக் கவருவதற்குத் தானே?"

"இருக்கலாம். ஆனால் இங்கே தூங்குகிறாள் என்பதற்காக ஒருத்தியை வேசி என்று முடிவு கட்டிவிடுவது சரியல்ல. இவள் நெற்றியை அலங்கரிக்கும் குங்குமப் பொட்டு கற்புக்கரசியின் திலகமாகத் திகழ்வது போலத்தான் தோன்றுகிறது!"

"ஆனால் ஒன்று, வேசிகள் சமயத்துக்கேற்றவாறு வேஷம்போடத் தெரிந்தவர்கள். கற்புக்கரசிகள்போல் வேஷம்போட அவர்களுக்கு எத்தனை நேரம் ஆகும்? இரவு முழுவதும் கூத்தும் கும்மாளமுமாக இருந்திருக்கலாம். காமக்கிரீடைகள் அளவுக்குமீறி நடந்திருக்கலாம். அந்தச் சோர்வின் காரணமாகக் குளிர்காற்றுப் பட்டதும் இவள் கண் அயர்ந்திருக்கலாம் அல்லவா?"

"நீ என்ன சொன்னாலும் சரி, எனக்கு இவள் ஒரு குடும்பப் பெண்ணாகத்தான் தோன்றுகிறாள் அப்பா!"

"குடும்பப் பெண்ணாயிருந்தால் இப்படிப் பார்க்குக்குத் தூங்க வருவானேன்?"

"வீட்டில் கோபித்துக்கொண்டு வந்திருக்கலாம் அல்லவா?"

"போய்க் கேட்டுவிடுவோமே!"

"சுத்த முட்டாளாக இருக்கிறாயே, நீ! முன்பின் அறிமுகம் இல்லாதவளை நீயும் நானும் போய் எப்படி அப்பா எழுப்புவது?"

"அறிமுகப் படுத்திக்கொண்டால் போயிற்று! நாலு வார்த்தை நல்ல வார்த்தையாகச் சொன்னுல் அவள் மனம் குளிர்ந்துவிடுகிறது!"

"நீ சொல்வதற்கு எதிராகச் சள்ளென்று எரிந்து விழுந்துவிட்டால்...?

"எரிந்து விழுவது என்றுல் இலேசா? எதற்கும் ஒரு காரணம் வேண்டாமா? அவளிடம் அன்பும் அனுதாபமும் காட்டித் சுமுகமாகப் பேசினுல், தானுக நம் வழிக்கு வந்துவிடுகிருள். எந்தப் பெண்ணும் இனிமையான பேச்சைக் கேட்டபின் எரிந்துவிழமாட்டாள், தலை நரைத்துப்போன கிழவிகளே பேச்சில் மயங்கிவிடுகிருர்கள். இவளோ இளம் பெண். நம் வழிக்கு வந்துதான் அப்பா ஆகவேண்டும்...அப்பப்பா அழகும் யௌவனமும் இவ்வளவு அழகாகச் சேர்ந்து நான் இது வரை பார்த்ததில்லை, அப்பா!"

"இந்த அழகு என்னுள்ளத்தில் பதிந்துபோய் விட்டதப்பா! இனிமேல் ஆயுள் உள்ளவரை இந்த அழகை என் உள்ளத்திலிருந்து பிரிக்கமுடியாது. என்னுல் இனிமேல் இவளையும் இவள் உருவத்தையும் மறக்கமுடியாது."

"இவள் ஒரு வேசியாகத்தான் இருக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது."




"அழகுத் தெய்வமாக இருப்பவள் வேசியாயிருந்தால்கூட, அவளை அவளுடைய அழகுக்காக வழிபடுவதில் எவ்விதமான தவறும் இல்லை!"

"இங்கேயே நின்றுகொண்டு கவிகளைப்போலக் கற்பனை செய்யத்தான் உனக்குத் தெரியுமா? கிட்டப்போய்ப் பார்க்கமாட்டாயா? அப்படியானுல் சரி, நீ இங்கேயே இரு. நான் போய் வலைவீசிப் பார்க்கிறேன்."

"ஏய், குடும்பப் பெண்ணுகத் தோன்றுகிறது, அப்பா!"

"ஒரு குடும்பப் பெண் இப்படிப் பார்க்கில் வந்து தூங்குகிருள் என்றுல். அவள் பிறர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளத்தான் முயற்சிக்கிருள் என்று அர்த்தம். அவள் உள்ளத்தில் வேசியின் மனப்போக்கு உதித்திருக்கக்கூடும் அல்லவா?"

"இந்நாளைய பெண்கள் ரொம்ப ரொம்ப முன்னேறிவிட்டார்கள், அப்பா!"

"முன்னேறிவிட்ட பெண்கள் இப்படி இளைஞர்களின் உள்ளத்தைக் கொள்ளைகொள்ள முயற்சிப்பதில்லை."

"என்னவோ, அப்பா! இவள் குடும்பப் பெண்ணுகத்தான் தோன்றுகிருள். குடும்பப் பெண்களுடன் எவ்விதமான பேச்சும் வைத்துக்கொள்ளக்கூடாது. அது அநாகரிகம். தெரிந்ததா?"

"சரி, அப்படியானுல் வா, ஓடுவோம்!"

"ஆனுல் உள்ளத்தில் இவளுடைய உருவம் அல்லவா ஓடிக்கொண்டிருக்கிறது!"

"அப்படியானுல் இங்கேயே உட்காருவோம். அவள் எழுந்து போகும்பொழுது அவள் பின்னுலேயே போவோம், எனக்கு இவள் வேசி என்றுதான் தோன்றுகிறது"

"இல்லை இவள் குடும்பப்பெண்தான்!"

"பத்து, பத்து ரூபாய் பந்தயம். என்ன சொல்கிருய்?"

* * *

இரண்டு வயது முதிர்ந்த கிழவர்கள் குனிந்த தலை நிமிராமல் காணுமற்போன காளைப் பருவத்தைத் தேடுபவர்கள்போல மெதுவாக நடந்து வந்துகொண்டிருக்கின்றனர். ஒருவருக்கு முதுகு கூனல் விழுந்துவிட்டது; தலைமயிர் கறுப்பாக இருக்கிறது. இன்னொருவரின் தலைமயிர் தும்பைப் பூவாக வெளுத்திருக்கிறது. கூனல் விழவில்லை; ஒற்றைநாடியான சரீரம். ஆனுல் இருவருக்கும் பல் விழுந்துவிட்டது. பொய்ப் பற்கள்வைத்துக் கட்டிக்கொண்டிருக்கிருர்கள். இருவரும் மூக்குக் கண்ணுடி அணிந்திருக்கிருர்கள். பருமனுனவர் வக்கீல். ஒற்றைநாடியானவர் டாக்டர்.

"இருபதாவது நூற்றாண்டின் விசித்திரத்தைப் பார்த்தீர்களா?" என்கிறார் வக்கீல்.

"ஓ! பார்த்தேன். இந்தியா உலகத்துக்கு அப்பாற்பட்டதல்லவே!"

"ஆனால் இதை நாம் ஒழுக்கம் என்று சொல்ல முடியாதே!"

"ஒழுக்கத்தை இழுக்கும் காலம் இதுவல்ல!"

"பெரிய வீட்டுப் பெண் போலத் தோன்றுகிறாளே!"

"பெரிய வீட்டுப் பெண்ணா? வேசி; சார், வேசி! இதுகூடத் தெரியவில்லையா?"

"வேசிகூட இவ்வளவு அநாகரிகமாக நடந்து கொள்ளமாட்டாள், ஸார்!"

"அதுதான் பெரியவீட்டுப் பெண்கள் அநாகரிகமாக நடந்துகொள்கிறார்களே!"

"எல்லாவற்றிற்கும் காரணம் இந்தப் புதுச் சுதந்தரமும் புது மோகமும்தான்!"

"நம்காலம் நல்லதோ, கெட்டதோ, ஒரு விதமாகக் கழிந்துவிட்டது. எவன் தலையில் எப்படி எழுதியிருக்கிறதோ, அப்படி அனுபவித்துவிட்டுப் போகிறான்!"

"வாழ்க்கை நரகத்தைக் காட்டிலும் வீணாகி விட்டது!"

"என்ன கிரஹசாரம்! இந்தச் சமயம் பார்த்து வாலிபப் பருவம் விடை பெற்றுக்கொண்டுவிட்டதே!"

"என்ன செய்வது? கண்ணால் பார்த்துக் கருத்தைக் கருக்கிக்கொள்ள வேண்டியதுதான்!"

இன்னும் ஒருமுறை இளைஞனாகமாட்டோமா என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. உண்மையைக் கேட்டால் இந்தக் காலத்து வாழ்க்கையில்தான் ஆனந்தம் இருக்கிறது. அந்தக்காலத்தில் இந்தமாதிரி உருப்படி நம் கண்களில் விழுந்தது உண்டா? இந்த நாட்களில் எங்குப் பார்த்தாலும் அழகுக் கூட்டம்தான்; எழிலுருவம்தான்!"

"இளம் பெண்களுக்கு இந்த உலகத்தில் பிடிக்காத பொருள் ஒன்று உண்டென்றால் அது இந்தக் கிழங்கள்தான் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்!"

"நான் இதை ஒப்புக்கொள்ளத் தயாராயில்லை. ஆணின் பெருமை அவனுடைய காளைப்பருவத்தைப் பொறுத்ததல்ல; அவனிடம் உள்ள பொருளின் சக்தியைப் பொறுத்தது. எத்தனையோ கிழவர்கள் கட்டிளங் குமரர்களைக்காட்டிலும் கடுமையானவர்களாக இருக்கிறார்கள். நான் எப்பொழுது பார்த்தாலும் துயரப்பட்டவன்தான். ஆனால் நான் என்னை எந்த வாலிபனுக்கும் கிழாகக் கருதுவதில்லை"

"அதெல்லாம் இருக்கலாம். ஆனால் கிழவர்களின் மனம் மிகவும் பலவீனமானது. அப்படி இல்லாவிட்டால் இந்த அழகியை இம்மாதிரி நிலையில் பார்த்துவிட்டு நாம் இப்படிச் சும்மாபோக மாட்டோம். நான் நிறைந்த கண்களால் ஒரு தடவைகூடப் பார்க்கமுடியவில்லை. நான் பார்க்கும்பொழுது அவள் விழித்தெழுந்து நான் அவளையே பார்த்துக்கொண்டிருப்பதைப் பார்த்து விட்டால், மனத்தில் என்ன நினைத்துக்கொள்ளுவாள் என்று பயமாயிருக்கிறது!"

"கிழவர்களையும் மயக்கும் சக்தி தன்னிடம் இருக்கிறதே என்று எண்ணி இறுமாப்பு அடைவாள்!"

"போதும் ஐயா, பரிகாசம்!"

"கொஞ்ச நாட்கள் நீங்கள் 'ஒகாஸா' சாப்பிட்டுப் பாருங்களேன்!"

"'சந்திரோதயம்' முதற்கொண்டு சாப்பிட்டுப் பார்த்துவிட்டேன். எல்லாம் ஆளை ஏமாற்றிப் பணம் பறிக்கும் விஷயந்தான்!"

"'மங்கி கிளாண்டு' வைத்துக்கொண்டு பார்ப்பதுதானே?"

"நீங்கள் இந்தப் பெண்ணை எனக்கு நிச்சயம் செய்துவிடுவீர்களானால் நான் தயார்!"

"ஆல் ரைட்! அது என் பொறுப்பு. ஆனால் எனக்கும் ஒரு பங்கு உண்டு!"

'நீங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லையே!'

"அதாவது அடிக்கடி நானும் தங்கள் வீட்டுக்கு வந்து என் கண்களுக்கு அழகைப் பருகச் சந்தர்ப்பம் அளிப்பேன்!"

"அப்படியெல்லாம் நினைத்துக்கொண்டு வந்தால் உங்கள் உயிருக்குச் சத்துருவாகிவிடுவேன்!"

"அட! 'மங்கி கிளாண்டு' வைத்துக்கொள்வதற்கு முன்பாகவே வாலிபராகி விட்டீர்களே!"

"இது டாக்டர்கள் மனிதர்களைக் கொள்ளையடிப்பதற்காக் கண்டுபிடித்த விஷயமாயிருக்குமோ என்று எண்ணுகிறேன். என்ன உண்மைதானே?"

"அட, நீர் ஒண்ணு ஐயா! இந்தப் பெண்ணைத் தொட்டாலே வாலிபப் பருவம் தானாக வந்துவிடும் ஐயா! அவளுடைய ஒவ்வொரு அங்கத்திலும் ஒவ்வொரு பார்வையிலும், ஒவ்வொரு புன்முறுவலிலும், ஒவ்வொரு அங்க நெளிவுகளிலும் இளமை இடித்து இடித்து நிரப்பப்பட்டிருக்கிறது ஐயா! நூறு 'மங்கி கிளாண்டு' வைத்துக் கொள்

வதும் சரி, ஒரு பெண்ணின் அரவணைப்பில் இருப்பதும் சரி!''

"சரி, சரி! வாருங்கள்! கட்சிக்காரர்கள் வந்து காத்திருப்பார்கள்!"

"இந்த உருவம் மறக்காது!"

"அட! மறுபடியும் ஞாபகப் படுத்திவிட்டீர்களே!"

"இவள் ஏனிப்படித் தூங்கியிருக்கிறாள் தெரியுமா? இவளுடைய அழகை, இவளுடைய அங்க நெளிவுகளை, இவளுடைய கலந்த கேசங்களை, இவளுடைய திறந்த கழுத்தைப் பார்த்து ஜனங்கள் உள்ளம் பொரும வேண்டும் என்பதற்காகவே இவள் இப்படிப் படுத்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. இப்படி நாம் சும்மாப் போய்விடுவது இவளுக்கு நாம் அநியாயம் இழைப்பது ஆகும். அவள் அழைக்கிறாள் நீங்களோ ஓடுகிறீர்கள். இது நியாயம் ஆகுமா?"

"நாம் மனமாரக் காதலிப்பதைப்போல இளைஞர்களால்கூடக் காதலிக்கமுடியாது, ஐயா!"

"நீங்கள் சொல்வது நூற்றுக்கு ஒரு வார்த்தை. ரசிக்கும் திறன் வாய்ந்த கிழவர்களைத் தேடித்திரியும் பெண்கள் எத்தனையோ பேரை எனக்குத் தெரியும். இளைஞர்கள் திடசித்தமுள்ளவர்கள் அல்ல; வெறியர்கள், கர்வமுள்ளவர்கள். அவர்கள் காதலுக்குப்பதிலாக ஏதாவது விரும்புகிறார்கள், ஆனால் இங்கேயோ தன்னலம் சிறிதும் இன்றி நாம் நம்மையே அர்ப்பணம் செய்ய முற்பட்டு விடுகிறோம். இளைஞர்களிடத்தில் இதை எதிர்பார்க்கமுடியாது!"

"உங்கள் வார்த்தைகளைக் கேட்கக் கேட்க மனத்தில் புல்லரிப்பு உண்டாகிறது."

"ஆனால் ஒன்று நினைவு வைத்துக்கொள்ளவேண்டும். அவளுக்கு யாராவது வாலிபன் காதலனாகக் கிடைத்துவிட்டால்......"

"கிடைத்தால் கிடைக்கட்டுமே! எனக்கு ஒன்றும் பயம் இல்லை!"

"உங்கள் கல்யாணப் பேச்சு நடந்தாற்போலிருக்கிறதே!"

"ஆமாம், ஆனால் என் பிள்ளையே என்னிடம் சண்டைக்கு வந்துவிட்டான். நான் என்ன செய்வேன்? என் பெரியபிள்ளை யசவந்தன் இருக்கிறானே, அவன், 'கொன்றுவிடுவேன் ஜாக்கிரதை!' என்று மிரட்டினான். இதைக் காலத்தின் கோலம் என்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்லுவது?"

வெயில் வரவர அதிகமாகவே இரு நண்பர்களும் வீட்டைநோக்கி நடந்தார்கள்.

*  *  *

இரண்டு பெண்மணிகள் 'பார்க்'கின் வாசலில் காரிலிருந்து இறங்கிக் காற்றுவாங்குவதற்காகப் 'பார்க்'குக்குள்ளே நுழைந்தனர். அவர்களில் ஒருத்தி வயதானவள். இன்னொருத்தி யுவதி. அவர்கள் இருவருடைய பார்வையும் தூக்கக் கலக்கத்தில் இருந்த யுவதியின்மீது விழுந்தது.

"மானங்கெட்டவள்!" என்று ஆரம்பித்தாள் வயதானவள்.

யுவதி வெறுப்புடன் ஒரு முறை நோக்கிவிட்டு, "வேஷத்தைப்பாரு! பெரிய குடும்பத்துப் பெண்களைப்போலிருக்கிறது!" என்றாள்.

"இந்த வேஷத்தைப் பார்த்துவிட்டுத்தான் புருஷர்கள் பெண்களுக்குச் சுதந்திரம் கொடுக்கக் கூடாது என்று சொல்லுகிறார்கள்!"

"இவளைப்பார்த்தால் வேசியாக இருப்பாளோ என்று எனக்குத் தோன்றுகிறது!

"வேசியாகவே இருக்கட்டுமே! இப்படி மானங் கெட்டுப் போய்ப், பெண் உலகத்துக்கே அவப்பெயர் உண்டாகும்படி நடந்துகொள்ள இவளுக்கு என்ன உரிமை இருக்கிறது?"

"வீட்டில் தூங்குவது போல எவ்வளவு ஆனந்தமாகத் தூங்குகிறாள், பாரேன்!"

"அப்பப்பா! வெட்கங்கெட்டதனம்! எனக்கும் ஆண்களிடத்தில் அடிமையாயிருப்பது பிடிக்கவில்லை. ஆனால் வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடப்பதும் பிடிக்கவில்லை, ஆனால் பெண்களுக்கு இயல்பான அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு முதலியவற்றை நான் விட விரும்பவில்லை. இந்தக் காலத்து நவநாகரிகப் பெண்கள் நாலுபேருக்கு நடுவில் வாயில் சிகரெட்டை வைத்துக்கொண்டு குடிப்பதைப் பார்த்தால் எனக்கு உள்ளம் பற்றி வருகிறது. அரை உடல் தெரியும்படி சிங்காரம் செய்துகொள்வதும் அநாகரிகமான நகைகள் அணிந்துகொள்வதும் எனக்குப் பிடிக்கவில்லை. நாம் முன்னேறியிருக்கிறோம் என்பதற்கு அடையாளம் இப்படியெல்லாம் நம்நாட்டுக் கலாசாரத்தைக் காற்றில் பறக்க விடுவதுதானா? இந்த நாளில் ஆண் பிள்ளைகள்கூட வெற்று உடலுடன் வெளியே வருவதில்லை. ஆனால் இந்தக்காலத்துப் பெண்கள்......"

"இந்த விஷயத்தில் உங்களுக்கும் எனக்கும் ஒத்துக்கொள்ளவில்லை. நான் சொன்னால் கோபித்துக் கொள்கிறீர்கள். ஆண்கள் சுதந்தர புருஷர்கள். தங்களுக்குச் சுதந்திரம் இருப்பதாகவே அவர்கள் எண்ணுகிறார்கள்; அப்படியே நடந்தும் கொள்ளுகிறார்கள். அவர்கள் வேஷம் போடுவதில்லை. பெண்கள் தமக்குச் சுதந்திரம் இல்லை என்றே எண்ணுகிறார்கள். ஆகவே தமக்குச் சுதந்திரம் இருப்பது போல வேஷம் போடுகிறார்கள். நிறைகுடம் தளும்பாது. குறை குடம்தான் தளும்பும். பலமுள்ளவன் பெருமை அடித்துக் கொள்வதில்லை. பலம் இல்லாதவன்தான் 'வருட்டு வருட்டு' என்று மடாத்தவளை போலக்கத்திப் பீத்திக் கொள்ளுகிறான். இதுதான் இயல்பு. அவர்கள் கண்களைத் துடைத்துக் கொள்வதற்குக் இவ்வளவு உரிமைகூடத் தாங்கள் கொடுக்கவில்லையா?"

"பெண்கள் தங்களை மறைத்துப் புருஷர்களை எப்படி ஆட்டிவைக்க முடியுமோ, அப்படித் தங்களை வெளிக்காட்டிப் புருஷர்களை ஆட்டிவைக்க முடியாது என்றுதான் நான் சொல்கிறேன்!"

"பெண்மட்டும் ஆணைக் கவரவேண்டும், தன்பால் ஆகர்ஷிக்கவேண்டும் என்று கவலைப்படுவானேன்.? ஆண்தான் பெண்களைக் கவரவேண்டும் என்று கவலைப்படட்டுமே!"

"வீணாக வாயைக் கிண்டாதே, மீனு! இவளை எழுப்பி வீட்டுக்குப் போய்த் தூங்கச் சொல்லு. இத்தனைபேர் இங்கு வந்து போய்க்கொண்டிருக்கிறார்கள். இந்த வெட்கங்கெட்டவள் இப்படிக்



காலை நீட்டிக்கொண்டு படுத்திருக்கிறாளே, இவளுக்கு இங்கே எப்படித் தூக்கம் வந்தது?''

''நேற்று இரவுதான் என்ன புழுக்கம்; என்ன புழுக்கம்! அப்பப்பா! காலைவேளையில் 'குளுகுளு' வென்று அடிக்கும் இந்தக் காற்றைக் கண்டு அவள் கண்கள் மூடியிருக்கலாம் அல்லவா?''

''நேற்று இரவு முழுவதும் இங்கேயேதான் இருந்திருப்பாள் என்று எனக்குத் தோன்றுகிறது!''

மீனா யுவதிக்கு அருகில் சென்று, அவள் கையைத் தொட்டுஎழுப்புகிறாள். ''ஏன் அம்மா! இங்கே தூங்கிக்கொண்டிருக்கிறாய்? பொழுது ஏறிவிட்டது. வீட்டுக்குப் போ!'' என்கிறாள்.

அந்த இளம் பெண் கண் விழிக்கிறாள். ''ஓஹோ! இவ்வளவு நேரம் ஆகிவிட்டதா? இவ்வளவு நேரமும் நான் தூங்கிப்போய்விட்டேனா, என்ன? எனக்கு அடிக்கடி தலை சுற்றுகிறதுண்டு. காலையிளங்காற்று உடம்புக்கு நல்லது என்று எண்ணிவந்தேன். தலைசுற்றவே இந்தப் பெஞ்சியில் உட்கார்ந்துவிட்டேன். அப்புறம் என்ன நடந்தது என்று எனக்கு நினைவில்லை. இப்பொழுதுங்கூட எழுந்து நிற்கமுடியவில்லை. விழுந்துவிடுவேனோ என்று தோன்றுகிறது. எத்தனையோ மருந்துகள் சாப்பிட்டுப் பார்த்துவிட்டேன். ஆனால் ஒன்றும் பலன் இல்லை. உங்களுக்கு டாக்டர் சியாமநாத்தைத் தெரியுமா? அவர்தான் என் மாமனார்.''

யுவதிக்கு ஆச்சரியம் தாளவில்லை. ''அப்படியா? இப்பொழுதுதான் அவர் இந்தப் பக்கமாகப் போனார்!''

''நிஜமாகவா? ஆனால் என்னை அடையாளம் கண்டுகொண்டிருக்கமுடியாது. ஏனெனில் இன்னும் எனக்குக் கல்யாணம் நிச்சயம் ஆகவில்லை, பேச்சு நடந்துகொண்டிருக்கிறது.''

''நீங்கள் அவருடைய பிள்ளை ரதன்நாத்துக்கு மனைவியாக வரப்போகிறீர்களா?''

யுவதி நாணத்தினால் தலையைக் குனிந்து கொண்டு, 'ஆம்' என்பதற்காகத் தலையை அசைத்தாள். மீனா சிரித்துக்கொண்டு, இப்பொழுது தான் ரதன்நாத்கூட இந்தப் பக்கமாகப் போனார். எனக்கு அவரை யூனிவர்சிடியிலேயே தெரியும்!''

''அப்படியா? ஆனால் அவர்கூட என்னை இன்னும் பார்க்கவில்லை!''

''நான் போய் வேண்டுமானால் டாக்டருக்கு விவரத்தைச் சொல்லட்டுமா?''

''வேண்டாம், வேண்டாம்; இன்னும் சிறிது நேரத்திற்குள் நான் சரியாகிவிடுவேன்!''

''ரதன்நாத்கூட அங்கேதான் நிற்கிறார். அவரை வேண்டுமானால் கூப்பிடட்டுமா?''

''வேண்டாம், யாரையும் கூப்பிடவேண்டாம்!''

''அப்படியானால் வாருங்கள். என் காரில் உங்களை உங்கள் வீடுவரைக்கும் கொண்டுபோய் விடுகிறேன்.''

''உங்கள் உதவிக்கு வந்தனம்!''

''எந்தத் தெருவில் இருக்கிறீர்கள்?''

''பேகம் கஞ்சில். ஜயராம்தாஸின் வீடு!''

''இன்றைக்கே ரதன்நாத்திடம் சொல்கிறேன்.''

''அவரும் இந்தப் பார்க்குக்கு வருகிறார் என்பது எனக்குத் தெரியாது''

''யாரையாவதுகூட அழைத்துக்கொண்டு வந்திருக்கக்கூடாதோ?''

''எதற்காக? அதெல்லாம் ஒன்றும் வேண்டியதில்லை!'' என்றாள் அந்தப் பெண்.







# நீங்கள் எங்கிருந்தாலும்...

# ஹிமாலயா புக்கெ ஸ்னோ

## உபயோகியுங்கள்.




ஏனென்றால் இது பிரத்தியேகமாக இந்தியாவின்
சீதோஷ்ணத்திற்கேற்ப தயாரிக்கப்பட்டது

சீதோஷ்ண நிலை எப்படி இருந்தாலும்—இந்தியாவில் நீங்கள் எங்கிருந்தாலும், ஹிமாலயா புக்கெ ஸ்னோ உங்கள் சருமத்தை அதிக மிருதுவாகவும், அழகாகவும் வைத்துக்கொள்கிறது. இதன் நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்.

இன்னுமொரு நேர்த்தியான **இராஸ்மிக்** தயாரிப்பு

HBS. 7-X30 TM        இராஸ்மிக் கம். லிட். லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது.




3

"**நா**ன் வந்ததைக்கூடக் கவனியாமல் சிந்தனாக்கிராந்தையாக அப்பழைய படத்தையே பார்த்துக்கொண்டிருக்கிறாயே? என்ன அதிசயத்தைக் கண்டாய் பிரேமா?" என்ற கணவனின் குரல் கேட்டுத் திரும்பினாள்.

"வந்து ரொம்ப நேரமாய் விட்டதோ? அப்பழைய படத்தில் புதுமை இன்பத்தைக் கண்டு கொண்டிருந்தேன். அதுதான் சுற்றுப்புறக் கவனத்தை இழந்துவிட்டேன்" என்றாள் புன்சிரிப்புத் தவழ நிற்கும் கணவனை நோக்கிப் புன்னகையுடன்.

"மருந்து கொடுத்தாளா? இந்தப் பிறந்தநாள் கொண்டாட்டம் முடியும்வரை சற்றுநேரம் சேர்ந்தாற்போல் உன் பக்கத்தில் உட்கார முடியாது போலிருக்கிறது" என்று கட்டிலில் அவள் பக்கத்தில் உட்கார்ந்தான்.

"சொன்னால் கேட்கமாட்டேனென்கிறீர்களே? அந்த நாற்காலியில் உட்காரக்கூடாதா? என் பக்கத்தில் உட்கார்ந்து ஒட்டிக்கொள்ள வேண்டுமா? எல்லோரும் ஒதுங்கி நடக்கிறார்கள் என் அம்மா உள்பட. ஹேமாவும் நீங்களும்தான் என்கூட விழுந்து புரளுகிறீர்கள்."

"எதற்கு வீண் பிரமை. நீ யார்மீது விழுந்து புரண்டு வியாதி வந்தது. காலம் செய்யும் கொடுமைக்குக் காரணம் வேறு தேடவேண்டுமா? இன்னொரு தடவை இந்த மாதிரி பேசினாயானால் என் மனம் மிக்க வேதனை யடையும்".

"உங்கள் மனம் புதிதாக என்ன வேதனையைக் காணப்போகின்றது. சரி, வேண்டாம், இனிமேல் சொல்லவில்லை. பாவம், ரொம்ப அலைகிறீர்கள் போலும், நாம் இருவர் செய்யவேண்டியதை நீங்கள் ஒருவரே செய்யவேண்டியிருக்கிறது," என்று அவன் கையைத் தன் கையிலெடுத்துக்கொண்டாள்.



"மருந்துகொடுத்தாளா?" என்று நெற்றிமீது விழுந்திருந்த அவள் கேசத்தை ஒதுக்கிவிட்டான்.

"யந்திரம்போல் மணிக் கணக்குத் தவருமல் எல்லாம் செய்துவிடுவாள் ஹேமா. சரியாக எட்டு மணிக்குச் சாப்பாடு கொண்டுவந்து விடுவாள்" என்ருள்.

"இல்லை ஒன்பது மணிக்குத்தான் கொண்டு வருவாள்".

"ஏனப்படிச் சொல்லுகிறீர்கள்?"

"இந்தா, இந்த மருந்தைப் புதிதாக இன்று கொடுக்கும்படி சொன்னுர் டாக்டர். ஆகாரத்திற்குச் சமமாக இருக்குமாம். கிடைக்காம லிருந்ததை எவ்விடமெல்லாமோ சொல்லி வரவழைத்திருக்கிருர்" என்று சொல்லிய வண்ணம் மருந்தைக் கொடுத்துவிட்டு, இது சாப்பிட்டு ஒரு மணி அவகாசம் கழித்த பின்னர்தான் ஆகாரம் சாப்பிடவேண்டும். அவளிடம் சொல்லிவந்தேன்"

"மருந்து வாய்க்கு ருசியாக இருக்கிறது. அது போகட்டும். நீங்கள் சற்றுநேரம் உட்கார்ந்திருக்க முடியுமா? அவசர ஜோலி இருக்கிறதா?

"ஒன்றும் கிடையாது. வருகிற கக்ஷிக்காரர்களுக்குக் குமாஸ்தா சாம்பு பதில் சொல்லிக்கொள்வான். மற்றப்படி யார் வந்தாலும், நான் இல்லையென்று கூறிவிடுவாள் ஹேமா."

"சந்தோஷம். படத்தில் புதுமை கண்டேன் என்று சொன்னேனே, என்ன கண்டாய்? என்று கேட்கவில்லையே?" என்ருள்.

"அழிந்துபோக வேண்டிய விஷயத்திற்கு உயிரை ஊட்டுவானேன்? என்று தான் கேட்கவில்லை."

"அழிந்து போகவேண்டிய விஷயங்கள் என்ருே அழிந்துபோய்விட்டன. உயிர் கொடுக்க வேண்டிய விஷயமே சிந்தனைக்கு உரியது"

"அப்படி யென்ன விஷயம் சொல்லு கேட்போம்" என்று சற்றுத் திரும்பி அவள் முகத்தைப் பார்த்தவண்ணம் கையை அவளின் மறுபுறத்தில் ஊன்றிக்கொண்டான்.

"இப்பொழுது அதாவது இந்த ஆறுமாதமாக என் மனமிருக்கும் தெளிவைப்போல், படத்தின் சம்பவத்தின் பொழுது இருந்திருந்தால் என் வாழ்க்கை எவ்வளவு மேம்பட்டிருக்கும்?" இந்த நிலைமைகூட ஏற்படாதிருந்திருக்கலாம்?"

"வருவது வந்தே தீரும். தடுக்கும் சக்தி பெற்றிருந்தால் உலகம் போகும் போக்கே வேறு. உடம்பு படிப்படியாகக் குணமாகி வருகிறது என்று டாக்டர் சொல்லுகிருர். எழுந்து நடமாட முடிந்ததும் உன் இஷ்டப்படி யாவும் நடக்கும். மனதில் கவலைகூடாது. நீ என்றைக்கும் தெளிவு பட்ட மனத்தையுடையவள் என்பது நான் அறியாத விஷயமா?"

பதில் ஓர் வறண்ட சிரிப்பு.

"ஏன் சிரிக்கிருய்; நான் சொல்வது தப்பா?

"தப்பிதம் இல்லை. தந்திரப்பேச்சு"

"அப்படி யென்ருல்?"

"இனி நான் பிழைத்து எழுந்து நடமாடுவது என்பது 'மலடிமகன்' என்பதுபோலத்தான்."

"யார் அப்படிச் சொன்னது?"

"டாக்டர் உங்களிடம் சொன்னுர்?

"பிரேமா! இது என்ன யார் சொன்னுர்கள்?"

"ஏன் இவ்விதம் பதட்டப்படுகிறீர்கள்? ஆஸ்பத்திரியில் டாக்டர் சொன்னதை நர்ஸ் என்னிடம் சொன்னுள். அவளுக்கு, உங்களையும் ஹேமாவையும் வேவுபார்த்து வந்து சொல்வதற்

காக ஙிறையப் பணம் கொடுத்துவந்தேன். உங்கள் இருவரின் உயர்ந்த பண்புபற்றி அவளே சிலா கித்து விட்டாள். மற்றப்படி யார் யார் என்ன பேசினார்கள் என்பதை உடனுக்குடன் சொல்லி விடுவாள்.''

"இதை மட்டும்தானு சொன்னுள். 'தெளியாது என்று சொல்லிவிட முடியாது. எங்கள் மனம் நம்பிக்கை யிழந்த தருணம், சில சமயம் விதி நம்பிக்கை யூட்டிவிடுகிறது. ஆஸ்பத்திரியிலிருப் பதினுல் குணமேதுமில்லை. தினம் வியாதியின் பலதிறப்பட்ட சூழ்நிலையில் ஏற்படும் நிகழ்ச்சி களினுல் மனம் அதிர்ச்சி பெறக்கூடும். வீட்டில் ஸௌகரியமிருக்கும்பொழுது இந்தச் சூழ்நிலை வேண்டாமென்றுதான் அனுப்புகிறேன்' என்று சொன்னுரே, அதை ஏன் சொல்லவில்லை?'',

"மறந்துபோயிருப்பாள். அது கிடக்கட்டும். பிறர் சொல்லுவானேன்? எனக்கே புரியவில்லையா என் நிலைமை. நாளுக்குநாள் க்ஷீணம் அதிகரிக் கிறது. நான் சாப்பிடும் ஆகாரங்களும் மருந்து களும் எங்கேதான் போகின்றனவோ? குட்டிச் சுவரில் முட்டிக்கொள்ள வெள்ளெழுத்தா?"

"வியாதி இருக்கும்வரை பலமிருக்கும். வியாதி குறையக்குறையப் பலஹீனம் தோன்றுவது இயற் கைதானே? இதற்காக நீ அதைரியப்படலாமா? உன் முகம் தெளிவடைந்து வருவதாகவே எனக் குத் தோன்றுகிறது''

"அணையும் தறுவாயில்தான் தீபம் பிரகாசமாக எரிகிறது''

"இதென்ன பிரேமா, இன்று இவ்விதம் பேசு கிறுய்? உன் உடம்பிற்கு என்ன செய்கிறது?'' என்று அன்பு ததும்பக் கேட்டான்.

"உடம்பு எப்பொழுதும் போலத்தானிருக் கிறது. மனம்தான் சரியாயில்லை''

"இதைப் பார் கவலைப்படவே கூடாது. மனதி லுள்ளதை வெளியிட்டுச் சொல்லவேண்டும். என்ன செய்தால் உன் மனம் சமாதானமாக இருக்குமோ அதைச் சொல்லு. அதை உடனே செய்து முடிக்கிறேன். ஹேமாவை அவள் தந் தையுடன் அனுப்பிவிடட்டுமா?"

"தயவுசெய்து இன்னெரு முறை அவ்விதம் சொல்லாதீர்கள். என்னை, என் மாறுதலை நீங்கள் புரிந்து கொள்ளவில்லையா? புரிந்துதான் வேண்டு மென்று கேட்கிறீர்களா?"

"பிரேமா!'' என்றுன். ஹிருதய தாபம் முழு வதும் அச் சொல்லில் பிரதிபலிக்க; அவள் கண் களை ஊடுருவிகு பார்த்த வண்ணம்:

"ஏனிப்படி பார்க்கிறீர்கள்?'' என்றுள் அமைதி யாக அவன் கிராப்புத் தலைக்குள் விரல்களை விட் டுக் கோதிய வண்ணம்.

"நான் என்றே உன்னைப் புரிந்து கொண்டு விட்டேன். ஆனுல் இன்று உன் கேள்வியையும் சொல்லையும் புரிந்துகொள்ள முடியவில்லை.''

"புரிய வைக்கிறேன். ஹேமாவை ஒரு காலத் தில் வெறுத்தது உண்மைதான். ஆனுல் இந்த ஒன்பது மாதமாக என் பூர்ண அன்புக்குரியவள் அவள்தான் என்பதை எனது ஒவ்வொரு ரத்தத் துளியின் துடிப்பும் எடுத்துக் கூறுகிறது. என் குழந்தை பிரதிபாவின் தாய் அவள். ஒருமாதமா கத் தீவிரமாகத் தோன்றி நிலைத்து நிற்கும் எண் ணத்தைத் தங்களிடம் சொல்லத் துடித்த மனதை எவ்வளவோ நாட்கள் அடக்கி வந்தேன். இன்று சொல்லாவிட்டால் என் ஹ்ருதயம் வெடித்துவிடும் போலிருக்கிறது.''

"சொல்லு பிரேமா சொல்லு.'' என்று அவ ளின் இருபுறமும் இருகைகளையும் ஊன்றியிருந்த வாறு கேட்டான்.

"எனக்குப் பின் என் குழந்தை ஹேமாவை விட்டுப் பிரியக்கூடாது. அதற்காக என் ஸ்தா னத்தை நீங்கள் ஹேமாவிற்குக் கொடுக்க வேண் டும்'' என்றுள் அமைதியாக.

"என்ன?'' என்றுன் பதறியவனுக.

"ஏனிப்படி பதறுகிறீர்கள்? ஏதாவது நடக்கக் கூடாத விஷயத்தைச் சொல்லிவிட்டேனு? உல கில் இயற்கையாக நடக்கும் விஷயம்தானே.''

"இல்லை; நடக்கக்கூடாத விஷயத்தைத்தான் சொல்லுகிறுய்?''

"ஏன்? காரணம்?

"நிச்சயமாகப் பகவான் உன்னை என்னைவிட் டுப் பிரிக்கமாட்டார்.''

"இதைப் பாருங்கள், என் நிலைமை அறிந்தவ ரானுல், என்மீது வைத்திருப்பது உண்மையான அன்பென்றுல், தாங்கள் ஒரு லக்ஷ்ய புருஷரா னுல் அத்தைப் பாட்டி வேதாந்தம் பேசாமல் மனம்விட்டு நேருக்கு நேர் விஷயத்திற்கு வாருங் கள். என் கேள்விக்குச் சரியான பதில் சொல்லுங் கள். நெருப்பு என்றுல் வாய் வெந்துவிடாது. சற்றுமுன் கவலை கூடாது என்று சொன்னீர்க ளல்லவா! நான் கவலையில்லாமலிருக்க வேண்டு மானுல் மனம்விட்டுப் பேச வேண்டும்'' என்றுள். இந்த நாலு வார்த்தை படபட வென்று சொன் னது அவள் சக்திக்கு மீறிய செய்கைபோல் மேல் மூச்சுத் தோன்றினது. நெற்றியில் முத்து முத்தாக வேர்வை அரும்பி நின்றது. அதைக் காணச் சகியாதவனுக கைக்குட்டையினுல் அவள் வேர்வையைத் துடைத்துவிட்டு "பிரேமா, சற்று ஆச்வாஸப் படுத்திக்கொள். நீ சொன்னபடி கேட்கிறேன்,செய்கிறேன். விஷயத்தைச் சொல்'' என்று குனிந்து அவள் முகத்துடன் தன் முகத்

தைப் பதியவைத்து அவளை மேலே பேசவிடாமல் செய்தான்.

சற்று நேரம் சென்றதும் அவளை நிமிர்ந்து உட்காருமாறு வேண்டினான்.

"பிரேமா, பிரதிபா ஹேமாவைவிட்டுப் பிரியக் கூடாது என்பதுதானே உனது விருப்பம். பிரதிபாவை அவள் கணவன் வந்து ஏற்கும் வரை ஹேமாவின் ஆதரவிலிருப்பாள் நம் கண்மணி. இது நிச்சயம். இந்த விஷயத்திற்கு எப்படிப் பட்ட வாக்குறுதி வேண்டும் கேள், தருகிறேன்."

"ஹேமா உங்கள் மனைவியாவாள்" என்ற வாக்குறுதி வேண்டும்.

"ஒரு நீண்ட மூச்சிற்குப்பின்" பிரேமா அந்த விஷயம் முடியாது என்பதற்குரிய காரணங்களை எடுத்துச் சொல்லுகிறேன். அதைக் கேட்டுவிட்டுப் பிறகு வாக்குறுதி கேள்."

"சரி சொல்லுங்கள்."

"தாய் முகம் காணுது, வறுமை மிகுந்த சூழ் நிலையில் வளர்ந்து வந்த, ஹேமாவை நான் முதலில் பாக்கும் பொழுதே, என்னையுமறியாமல் அவள்மீது ஒருவித பாசமானது தோன்றியது. அத்துடன் அவளிடம் குடிகொண்டிருந்த கலையார்வமானது எனது லக்ஷ்யத்திற்கு ஒரு வாய்ப்பு என்ற நினைப்பில் ஏகாங்கியான எனக்கு, சகோதரியாக ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி அளித்தாரென்றே எண்ணினேன். அவளை அழைத்து வந்த சில மாதங்களுக்குப் பின்னர், அவளது பிற் காலத்தைப்பற்றிய சிந்தனை வரும்பொழுது, ஏன் காத்திருந்து நாமே ஏற்றுக்கொண்டால் என்று நினைப்பேன். ஏற்றல் என்ற சிந்தனை தொடரும் பொழுது, மனம் அதை ஏற்க மறுத்துவிடும். அப்பொழுது அவள் என்றும் கன்னியாகவே கலைக்குத் தொண்டு செய்யப் பிறந்தவள் என்ற தீர்மானத்துக்கு வந்துவிட்டேன்."

"அவள் மனநிலைபற்றிச் சிந்திக்காமலேயே" என்று இடைமறித்தாள்.

"எந்தக் கலையையும் எவரும் கற்கலாம் என்றாலும், ஒவ்வொன்றும் ஒவ்வொருவரிடத்தில் தான் இயற்கையாக அதற்காகப் பிறந்தவர்களென நினைக்கும்படி அமையும். ஆதரவற்ற சூழ்நிலையில், வறுமையின் அந்தகாரத்தில் வளர்ந்த சகோதரிகளிடத்து இருவிதக் கலைகளும் சரண்புகுந்து விட்டன. விஜயாவிற்கு அதிருஷ்டவசத்தால் கலைஞன் மட்டுமல்லாது பண்புமிக்க கணவன் கிடைத்துவிட்டான். மேலும் அவள் கலைக்குக் குரல்தான் முக்கியம். நடனத்திற்கோ தேக அமைப்பே முக்கியம். அதற்குக் கன்னிகையாக இருப்பதுதான் நல்லது. கலையும் மங்காமல் சோபிக்கும். இதை நான் என்றே தீர்மானம் செய்துவிட்டேன். அவளும் இதை ஆக்ஷேபனை செய்யமாட்டாள். ஏன்? செய்யமுடியாது?

"இயற்கையை எந்தக் கலையும் வெல்லமுடியாது. உங்கள் மனம்போல் அவள் மனம் இருக்க வேண்டுமென்பது விதியா? பெண்களின் மனதை உங்களால் புரிந்துகொள்ளமுடியவில்லை."

"உன் விஷயத்தில்கூடவா?"

"என் விஷயத்திலும்தான்."

"என்ன? உண்மையாகவா சொல்லுகிருய்"

"ஆம்"

"எந்த விதத்தில்?"

"முதல் உங்கள் மனதில் பேத புத்தியை உண்டாக்கியவள் நான்தான் என்பதை ஒத்துக்கொள்கிறேன். இருந்தாலும் பிற்பாடு தாங்கள் ஒரு விதமாக உணர்ந்திருக்கலாம். கலை உங்கள் லக்ஷ்யம். கலைக்கு உயிர் கொடுப்பவள் ஹேமா. அதனால் அவள் விஷயத்தில் நான் குறுக்கிடாதபடி இருக்க நான் என்ன செய்தாலும், என்ன சொன்னாலும் பொறுத்துக்கொண்டு, என் விருப்பம் போல் நடந்துவந்தீர்கள்."

"அது குற்றமா?"

"பெண் ஆளவிரும்புவதைவிட ஆளப்படுவதைத் தான் அதிகம் விரும்புவாள். மனம் விட்டு என்னிடம் ஏதாவது கேட்டதுண்டா. என்னைத் தாங்கள் ஸ்வாதீனத்துடன் கண்டிக்கவேண்டும், என்ற எண்ணத்துடன் எவ்வளவோ முறை வேண்டுமென்று தவறு செய்திருக்கிறேன். ஒன்றையாவது நீங்கள் எடுத்துச்சொல்லி கண்டித்ததுண்டா? மூன்றும் மனிதரிடம் பிழை பொறுப்பதுபோல் நடந்துவந்தீர்கள். ஹேமாவை ஸ்வாதீனமாகக் கண்டிக்கும்பொழுதும் ஏவல் கொள்ளும்பொழுதும் என் மனம் வேதனை கொள்ளும். அதுவே ஹேமாவின்மீது எனக்குள்ள வெறுப்பு அதிகரிக்கக் காரணமாகியது. அன்று நடனவிழாவிற்குச் செல்லும்பொழுது நான் எங்கள் வீட்டிற்கு வராதே என்று சொன்னாலும் பரவாயில்லை, வரமாட்டேன் என்று சொன்னபொழுது எனது உள் மனம் 'வந்தால் வா, வராதபோனால் போ. வரவில்லையானால் இனி என் முகத்தில் விழிக்காதே என்று சொன்னால் உடனே கிளம்பிவிடவேண்டும்' என்று சொல்லிற்று.

"தாங்களோ, சாவதானமாக, கதவுமூடாமல் வீடு திறந்திருக்கும்" என்று சொல்லி வந்துவிட்டீர்கள். என்மீது உங்களுக்கும், உங்கள்மீது எனக்கும் அதிகப் பிரேமை என்றுதான் சொல்ல வேண்டும். உலகில் மனிதர்களுக்குச் சுக ஸௌக்யத்திற்கு என்னென்ன தேவையோ அவ்வளவு அம்சமும் நமக்குக் கிடைத்திருந்தும் பொருள், அழகு, குணம் இவைகளில் உலகமே அதிசயிக்கத் தக்கவிதம் அமைந்தும், நமது தாம்பத்ய வாழ்க்கையில் ஏதோ குறையிருப்பதாகத் தோன்றிக் கொண்டிருந்ததல்லவா?"

"எனக்கு அப்படித் தோன்றவில்லை" என்று இடைமறித்தான்.

"எங்கே என்னைப் பார்த்து உங்கள் நெஞ்சைத் தொட்டுச் சொல்லுங்கள்."

அவளேயே சற்றுநேரம் உற்றுப்பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, "ஆம் ஒரு விதத்தில் நீ சொல்வதை ஒத்துக்கொள்ள வேண்டியதுதான். அதுவும் எனது முட்டாள்தனமென்று" நீண்ட மூச்சுவிட்டான்.

"எதுவும் நன்மைக்கே என்ற வாக்குப்பிரகாரம், எனக்கு வியாதி வந்தபின்புதான் என் தவறை நான் உணர முடிந்தது."

"ஆரம்பத்தில் ஹேமாவைப்பற்றி நான் ஒன்றுமே சொல்லாதிருந்திருந்தால் உங்கள் மனதிலும் வேற்றுமை தோன்றியிருக்காது. என் மனதிலும் வேற்றுமை தோன்றியிருக்காது. உங்கள் அன்பின் மேன்மையை இப்பொழுதுதான் உணர முடிந்தது. ஹேமாவின் உயர்குணத்தைப் புரிந்துகொள்ளும் சக்தியும் ஏற்பட்டது. இனிமேல் நமது வாழ்க்கை இன்பகரமாக இருக்கும். ஆனால் விதி? நம்மால் முடியாத விஷயங்களுக்கு 'விதி' என்கிற ஆறுதல் இல்லாவிடில் மாந்தர்கள் மனம் நிம்மதி பெறுவது எப்படி? அது போகட்டும், மேலே விஷயத்தைக் கேளுங்கள்.

"என் தீர்மானம் இப்படி என்று ஒரு தலை தீர்ப்புக் கூறிவிடாதீர்கள். என்னதான் கலையுள்ளமென்றாலும், கலைக்கே வாழ்க்கை அர்ப்பணம் என்றாலும் இயற்கை யென்பதை எதிர்த்துப் போராடினாலன்றி, பெண் மனம் அமைதி பெற முடியாது. உங்கள் லக்ஷ்யத்திற்கு அவள் வாழ்க்கையைப் பலியாக்கிவிடாமல் அவளை ஏற்றுக் கொள்ளுங்கள்"

"நீ சொல்லும் காரணத்தை ஒத்துக்கொண்டாலும் அவள் என்னை விரும்புவாள் என்பது எப்படி நிச்சயம்? உன் லக்ஷ்யப்படி அவள் மனம் வேறு யாரையாவது நாடியிருந்தால் என்ன செய்ய முடியும்? அப்படியானாலும், பிரதிபாவின் நிமித்தம் தனது விருப்பத்தைத் தியாகம் செய்யப் பின் வாங்கமாட்டாள் ஹேமா. அப்படி நேர்ந்தால் நான் செய்வதென்ன?"

"கொடியானது படரும் பருவம் வந்தவுடன் பக்கத்திலிருக்கும் கொழு கொம்பைத்தான் சுற்றிக்கொள்ளுமே தவிர எட்டவிருக்கும் கொழு கொம்பை நாடிச் செல்லாது."

"பக்கத்துக் கொம்பை முன்னாலேயே ஒரு கொடி சுற்றியிருந்தால்!"

"தழுவ முடியாத நிலைமையில் தான் தவித்து, எட்டினதைப் பிடித்துக்கொள்ளும் அல்லாது முன் படர்ந்த கொடி காய்ந்துவிட்டிருந்தால் அதில் படருவது சுலப சாத்யமான விஷயம்."

"நீ சொல்லுவது உண்மையான விஷயமென்றாலும், அவளை மனைவி" என்று ஏற்க மனம் ஒப்பாதுபோலிருக்கிறதே?

"காலம் மனதை மாற்றும்; சூழ்நிலை உதவி செய்யும்"

"அது சாத்யமாகாது பிரேமா"

"எங்கே! என்னைப் பாருங்கள். உங்கள் கலா தேவியின்மீது ஆணையாகக் கேட்கிறேன். கலா தேவி ஆணையாகப் பதில் சொல்லுங்கள். அவள் அழகும் பருவமும், உங்கள் மனதைத் தொடவேயில்லையா" என்று அவன் இருதோள்மீதும் கையை வைத்துக் கேட்டாள்.

"ஆ! என்றான்" கலையின்மீது ஆணையிட்டதற்கு சற்றுநேரம் மௌனம் குடிபுகுந்தது. இல்லையென்று சொல்லிவிடலாமா? எப்படிச்சொல்வது? ஒரு சமயங்கூட சலனமடைந்ததில்லையா? மனம் ஆராயத்தொடங்கியது. இரவு ஏழு மணி சமயம் மறுநாள் முழு உருவம் பெறப்போகும் சந்தோஷத்தில் ஒளியை வாரி இறைத்துக்கொண்டிருந்தான் தாரையின் காதலன். அறையினுள் அது வரை எழுதிக்கொண்டிருந்தவன் சற்றே காற்று வாங்கலாமென்று மேல் மாடிக்குச் சென்றான். தலையை ஆற்றியவண்ணம் நின்றுகொண்டிருந்தாள் ஹேமா.

"இப்பொழுது எதற்காக ஸ்நானம் செய்தாய்?" என்ற குரலைக்கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினாள் ஹேமா.

"ரொம்ப நாளாய்விட்டது; நாளை பௌர்ணமி என்று காலேஜிலிருந்து வந்ததும் அம்மா எண்ணெய் தேய்த்து ஸ்னானம் செய்யச் சொன்னார். தலை சற்றுக் காயட்டும்" என்று இவ்விடம் வந்தேன்" என்றாள்.

ஆபரணமற்ற மேனி. கையில் கறுப்புக் கண்ணாடி வளைமட்டுமே இருந்தன. கறுப்பு நூல் சேலையும், வெள்ளை ஜாக்கெட்டுமே அணிந்திருந்த அவளது தோற்றம் மிக வசீகரமாகத் தோன்றினது. அழகிற்கு அழகுசெய்ய வேண்டுவது அனாவசியம். இயற்கைத் தோற்றம் எவ்வளவு அற்புதம். முதுகு முழுவதும் மறைத்திருக்கும் கூந்தல்! மனம் லயித்து நின்றுவிட்டான். அவள் சொன்னது ஒன்றுமே அவன் காதில் ஏறவில்லை. ஒரு நாளுமில்லாத வழக்கமாக உற்றுநோக்கும் அவன் நிலை கண்டு,

"என்ன மாமா இப்படிப் பார்க்கிறீர்கள்?" என்று கேட்ட பின்புதான் சுய உணர்விற்கு வர முடிந்தது.

"இப்பொழுது உன்னை ஒரு சைத்ரிகன் பார்த்தால் அப்படியே திரையாகத் தீட்டிவிடுவான். உலகில் முதலழகி என்ற பட்டம் உனக்குக்

கிடைத்து விடும். நான் சித்திரக்காரனுக இல்லா மற்போனேனே என்று வருத்தமாக இருக்கிறது அந்தச் சிந்தனையில் உன் அழகை ஆராய்ந்தேன்." என்று வாய் சொல்லிற்று.

இவள் மட்டும் மனைவி ஸ்தானத்திலிருந்தால் இந்நேரம் எவ்வளவு இன்பமாகக் கழியும். இப்படியே சேர்த்தணைத்து........" என்று நினைக்கும் பொழுது,

"தினம் போலவேதான் இன்றுமிருக்கிறேன். இன்று ஏன் இப்படிச் சொல்லுகிறீர்கள்" என்ற அவள் கேள்வி சிந்தனை ஓட்டத்தை நிறுத்தினது.

"இன்றுவரை இந்த வேளையில் இந்தச் சூழ்நிலையில் பார்த்ததில்லையல்லவா! அதுதான்" என்று நிறுத்தினுன்.

"ஹேமா! என்ற தாயின் குரல் கேட்டதும், அம்மா கூப்பிடுகிருர்கள் போகிறேன்" என்று சொல்லிவிட்டு, மளமளவெனப் படிகளிலிறங்கிச் சென்றுவிட்டாள்.

அவள் மறைந்ததும், சூன்யவெளி சுயபுத்திக்கு வரச்செய்தது. "சே, என்ன மதியீனம். சூழ்நிலைதான் மனம் கெடுவதற்குக் காரணமாகிறது. இதுவரை, நடனத்திற்காக ஜாஜ்வல்யமான அலங்காரத்துடனிருக்கும் அவளிடம் தனிமையில் எவ்வளவோ தடவை இருந்திருக்கிறோம். அப்பொழுதெல்லாம் அழகை மட்டும் கலையுடன் ரஸித்தோம். வேறு விதமான சிந்தனையே ஏற்பட்டதில்லை. மனம் மாறவேண்டுமென்று அவளும் கீழே இறங்கிவிட்டாள்; மனம் குரங்கு. நினைத்தவிடத்தில் தாவத்தான் செய்யும். அதை இழுத்துப் பிடிப்பதே மனிதத் தன்மை" என்ற நினைப்புடன்.

கலாதேவியின்மீது ஆணை? அச்சிறு சம்பவம் கூட மறைக்கமுடியாத விஷயம் என்ற சிந்தனையை,

அப்படி அர்த்தமில்லை அழகான வசீகரமான பொருளைப் பார்த்தால் ரசிப்பது மனித இயற்கை தானே. அதற்காக அதிலேயே மனதைச் சிதற விடுவது மனிதத் தன்மையாகுமா?

"சரி, கலாதேவியின்மீது ஆணையிட்டு மறுக்கத் தைரியமில்லையே?"

"ஆணை என்பது சுலபமான விஷயமா. அதன் மதிப்பு! அதை வியர்த்தமாக்க நான் விரும்பவில்லை. உன் தீர்ப்புக்கும் என் தீர்ப்புக்கும் மத்தியில் என் மனநிலை தடுமாறுகிறது. உன் இஷ்டப்படி செய்யவேண்டும் அவ்வளவுதானே?"

"அப்படி வாருங்கள் வழிக்கு. என் முடிவிற்குப்பின், என் குழந்தையின் நன்மைக்காக ஹேமாவை மனைவியாக ஏற்றுக்கொள்ளுகிறேன் என்று சத்யம் செய்யுங்கள்."

"சத்யம் செய்வதுபற்றி ஆக்ஷேபனையில்லை. ஆனல் அவளுக்கு இஷ்டமில்லையென்ருல் கட்டாயப்படுத்தும் கஷ்டனுகச் சொல்லுகிருயா?"

"அந்த நிலைமை ஒருநாளும் வராது. வேண்டுமானல், பிறந்த நாள் முடிந்ததும் அவள் மனநிலையை உணர்ந்து கொள்ளும்படி செய்து விடுகிறேன்."

"உன் மனம் கவலையில்லாமலிருக்க, மனதில் வருத்தம் ஏற்பட்டு, அதனல் உடல்நிலை கெடாமலிருக்க, உன் இஷ்டப்படி சத்யம் செய்கிறேனே தவிர, நீ பிழைத்து எழுந்து விடுவாய். சத்யம் கழிக்கப்பட்டுவிடும்" என்ருன்.

"உங்கள் மனோரதம் பூர்த்தியானல் எனக்கு மிக்க சந்தோஷமே. ஆனல்?" என்று நீண்ட மூச்சு விட்டாள்.

"ஆனல் என்ற பதமே வேண்டாம் பிரேமா."

"சரி, இனிமேல் சொல்லவில்லை. உங்கள் சத்யம் காப்பாற்றப் படுமென்று நான் நம்புகிறேன்."

"தாராளமாக நம்பு. இனிமேல் மனதை அலட்டிக் கொள்ளாமல் இருக்க வேண்டும்.

"என்மனம் நிம்மதி பெற்றுவிட்டது. என் குழந்தையின் கவலை விட்டது. அவளிடமும் வாக்குறுதி பெற்றுவிட்டேனுனல் என் ஆத்மா நிர்மலமாகச் சஞ்சரிக்கும். நிச்சயம் அவளிடம் வாக்குறுதி பெற்றுவிடுவேன்."

"மாமி சாப்பாடு கொண்டுவரட்டுமா?" வாசற்படியருகில் நின்று கேட்ட ஹேமாவின் கேள்வி அவர்களின் சம்பாஷணைக்கு முற்றுப்புள்ளி வைத்தது.

4

"அன்று காலை தாயார், மாமியார் இருவரது விருப்பத்தைப் பூர்த்தி செய்ய, ஸ்னனம் செய்து புதுப் புடவையுடுத்தி, ஹேமாவின் ஆதரவில் சற்றுநேரம் மணையில் உட்கார்ந்திருந்தது, அவள் தேக நலனைப் பாதித்துவிட்டது. விசேஷ வீட்டின் சந்தடியைத் தாங்கும் சக்தியில்லாததினுல், தன்னிடம் ஒருவரும் வந்து தொந்தரவு செய்ய வேண்டாமென்றும் ஹேமா மட்டும் வந்து போனல் போதுமென்றும் சொல்லிவிட்டு, ஹேமாவின் உதவியினல் மாடியறைக்கு வந்து படுத்துக்கொண்டாள். ஒரு மணி அவகாசத்திற்கொருதடவை தன்னை வந்து பார்த்தால் போதுமென்றும், சாயங்கால வரவேற்பு வைபவத்திற்கு வேண்டியதைச் செய்யப்போகும்படி ஹேமாவையும் அனுப்பிவிட்டாள். அவள் சென்ற பின்பு இன்று உடம்பு ஓர் நிலையிலில்லை. இரவிற்குள் ஹேமாவினிடம் வாக்குறுதிபெற்றுவிட வேண்டுமென்று எப்படிப் பேச்சைத் துவக்குவது என்ற சிந்தனையில் பொழுதைத் தள்ளிவந்தாள்.

அவ்வறையின் விளக்கு ஏற்றப் பெற்றதும் 'யார்?' என்று திரும்பினுள். இடுப்பில் குழந்தையுடனும், கையில் ஒரு போட்டோ புருப்புடனும் தன்னை நோக்கி வந்த ஹேமாவை, "கையில் என்ன? உன்முகம் ஒரு மாதிரி இருக்கிறதே ஏன்?"

"காலையில் பிரதிபாவை எடுத்த போட்டோ வின்புருப். அது நன்ருக விழவில்லை. வேறு எடுக்க வேண்டுமென்று சொன்னேன். மாமா இதுவே இருந்துவிட்டுப்போகட்டும் என்று சொல்லிவிட்டார்" என்று படத்தைக் கொடுத்தாள்.

அதை வாங்கிப் பார்த்துவிட்டு, "ஏன் இதற்கென்ன? குழந்தை நன்ருகச் சிரித்துக்கொண்டிருக்கிறதே, பாவாடையும் மாலையும், நீ போட்ட எம்ராய்டரி பூவும்கூட நன்ருக விழுந்திருக்கிறதே?

"அதனுல்தான் மாமா இதிலேயே நிறையக் காப்பிக்குச் சொல்லிவிட்டார்"

"உன் ஆக்ஷேபனை?"

"படத்தை நன்ருகக் கவனித்துப்பார்த்தீர்களா?

"நன்ருகப் பார்த்தேன். நீயும், உன் மாமாவும் கூட நன்ருக விழுந்திருக்கிறீர்கள்"

"நான் பக்கத்தில் நின்ருல்தான் அந்த ஸ்டூலின் மீது உட்காருவேன் என்று அழுதாள் பிரதிபா. நான் நின்றேன். மாமா மாலை ஒருபுறமாகச் சரிந்திருந்ததைச் சரிசெய்துவிட்டு நிமிர்ந்த சமயம் குழந்தை சிரிக்கிறது என்று சட்டெனப் படம் பிடித்துவிட்டான். அது இப்படி விபரீதமாக விழுந்திருக்கிறது"

"இது ஈசுவர சங்கல்பம் ஹேமா. பின்னுல் நிகழவிருக்கும் சம்பவத்திற்கு இது முன் குறிப்பு" என்ருள் அவ்வளவே.

"மாமி!" என்ருள் கண்களில் நீர் நிறைந்துவிட்டது:



"ஏன் வருத்தப்படுகிருய் ஹேமா. மனதிலுள்ள விஷயத்தைச் சொல்லு."

"தாங்கள் இம்மாதிரியான எண்ணங்களையெல்லாம் விட்டு என்னிடம் மிக அன்பாக இருக்கிறீர்களென்று நினைத்தேன். நீங்கள் அதையே சொல்லுகிறீர்கள். கனவில்கூட அந்தமாதிரி சிந்தனை எனக்குக் கிடையாது."

'ஹேமா! இப்பொழுது எனது முழு அன்பிற்கும் சொந்தம் நீ தான். வருத்தப்படாதே. இப்பொழுது என்ன வேலையிருந்தாலும் சரி. அவைகளை யாராவது கவனித்துக் கொள்ளட்டும். முக்கியமாக உன்னிடம் சில விஷயம் பேச வேண்டும். காலை மணையை விட்டு எழுந்தது முதல் என் நிலைமை ஒரு மாதிரியாக இருக்கிறது. மார்வலி லேசாக இருக்கிறது. நான் இருந்தாலும் இறந்தாலும் என் மனதிலுள்ளதை உன்னிடம் சொன்னுல் தான், மனம் சாந்தி பெறும். தூங்கும் குழந்தையை என் பக்கத்தில் விட்டுவிட்டு, கதவைத் தாளிட்டுவிட்டு, பாட்டுக்கச்சேரி நான் கேட்கும்படி வைத்திருக்கும் லௌட்ஸ்பீக்கரை மூடிவிட்டு என்னருகில் உட்கார்ந்துகொள்" என்ருள்.

"உங்களுக்கு என்ன செய்கிறது? டாக்டரை அழைத்து வருகிறேன்."

"டாக்டர் வழக்கப்படி வந்து பார்த்துவிட்டுப் போய்விட்டார். காலையில் மணையில் உட்கார்ந்த அதிர்ச்சி. பலஹீனமாக இருக்கிறது. நாளை சரியாகப் போய்விடும் என்று சொல்லிவிட்டார். சீக்கிரம் நான் சொன்னபடி செய். யாராவது வந்து விடுவார்கள். என் மனக் குறை தீராமல் போய்விடும்." என்று பதட்டமாகச் சொல்லவே, மறுபேச்சின்றிக் கதவைத் தாளிட்டுவிட்டு அவள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள்,

"போட்டோவில் பிரதிபாவின் தாயார் ஸ்தானத்தில் நீயும், தகப்பனார் ஸ்தானத்தில் அவருமாகப் பொருத்தமான ஜோடியாக விழுந்திருப்பதைப் பார்க்க என் மனம் மிக்க சந்தோஷமடைகிறது. எந்த விஷயமானது நடந்துவிடுமோவென்று பயந்து, உன்னைக் கடுமையாக எச்சரித்தேனோ, அதே விஷயம் நடைபெற்றால்தான் மனம் சாந்திபெறும் என்ற நிலைமைக்கு வந்துவிட்டேனென்றால், அதற்குக் காரணம் விதியா? காலமா? என்பதுபற்றிச் சிந்திக்கப் போவதில்லை. இப்பொழுது நான் கேட்கும் வரத்தை நீ கொடுக்க வேண்டும்."

"என்னால் செய்யக்கூடியது எதுவானாலும் செய்யப் பின் வாங்குவேனா? இச்சரீரம் வளர்ந்தது தங்களால். அதைச் செருப்பாகத் தைத்துப் போடக் கடமைப்பட்டவள். நீங்கள் என்னைக் கடுமையாக நடத்தினதாக நினைத்துக் கொண்டிருப்பது மனப்பிராந்தி. உங்கள் புத்திமதி எனக்கு எவ்வளவோ உதவியாக இருந்தது. அதனால் அதைப் பற்றி நீங்கள் நினைக்கவே கூடாது."

"தவமிருந்து பெற்ற என் குழந்தையினிமித்தம் நான் இருந்தாலும், இறந்தாலும், என் ஸ்தானத்தை நீ வஹிக்க வேண்டும். நான் பிழைக்க மாட்டேன். ஏன், நாளை சூர்யோதயத்தைக்கூடக் காண்பேனோ, மாட்டேனோ? அப்படிப் பிழைத்தெழுந்தாலும், அவருக்கு மனைவியாக வாழும் பாக்யம் பெற்றவளாக இருக்க முடியாது. செய்வாயா?"

"நீங்கள் நினைக்கிறபடி உங்களுக்கு ஒன்றும் நேரிடாது. தெய்வ சங்கல்பத்தை மாற்றமுடியாதபடி நடந்தால் பிரதிபாவை நான் வளர்ப்பேன். என் வாழ்நாள் முழுவதும் அவளுடைய பணியிலேயே கழிப்பேன். நான் வணங்கும் கலாதேவியின் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன்."

"நீ அப்படி நடந்து கொள்ளுவாய் என்ற நம்பிக்கையுண்டு. ஆனால் சமூகமும் சூழ்நிலையும், அவ்விதம் நடந்துகொள்ள முடியாதபடி உன்னை வாட்டி வதைக்கும். அதனால் நீ அவரின் மனைவியானால்தான் என் விருப்பம் நிறைவேறும்."

"முதல் முதலாக, அவர் ஸ்ரீராம நவமியின் பொழுது என்கூட வருகிறாயா? உனக்கு, நாட்டியம், பாட்டு எல்லாம் கற்றுவைக்கிறேன், என்று சொன்னதிலிருந்து அவரைத் தெய்வம் போலவே என்மனம் கருதுகிறது. அன்றும் இன்றும் அவர் மீது அளப்பரிய பக்திதான் தோன்றுகிறது. எப்படி கணவனுக் ஏற்க முடியும்?"

"இதுவரை இருந்த சூழ்நிலை அப்படி நினைக்கும்படி செய்தது. இனிமேல் ஏற்படப் போகும் சூழ்நிலையில் மனம் தானே மாறிவிடும்."

"இல்லை, மாறாது. தயவு செய்து அதைத் தவிர வேறு எந்த விஷயம் சொன்னாலும் நான் கேட்கிறேன். மன்னித்து விடுங்கள்."

"ஒருவேளை வேறு யார்மீதாகிலும் உன் மனம் சென்றிருந்தால் அதையும் சொல்லிவிடு. அவனை அழைத்து என் குழந்தைக்கும் உனக்கும் சேர்த்து ஒருவித ஏற்பாடு செய்யச் சொல்லுகிறேன்."

ஒருகணம் சிந்தனையிலாழ்ந்தாள், ஆமாம் என்று சொல்லிவிட்டால் மனம் உண்மையில் யாருக்கு அடிமை? அந்தராத்மாவை நன்றாகக் கேட்டுப்பார். ராஜாவைத் தவிர வேறு யார் அங்குக் குடிபுக முடியும்? அப்படியே பொய் சொன்னாலும், ஆளைக் கொண்டுவா என்று கேட்பாளே, என்ன செய்வது? என்ற சிந்தனையிலிருக்கும் ஹேமாவைப்பற்றிப் பிரேமா, அவள் வாயிலிருந்து எந்தவிதமான பதில் வருமோவென்ற ஆவலால் துடித்துக் கொண்டிருந்தவள், மௌனம் நீடிக்க விருப்பமில்லாதவள் போல், "எதுவானாலும் தயங்காமல் சொல்லு ஹேமா!" என்றாள்.

"கல்யாணம் என்பதைப்பற்றி நினைத்தால் தானே ஆள் ஏற்பட வழியுண்டு. நாட்டியமும் பிரதிபாவும்தான் என் மனதைக் கவர்ந்தவர்கள். கனவில்கூட ஒருவரைச் சிந்திக்க விரும்பாது என் மனம். மாமி, கவலைப் படாதீர்கள்" என்றாள்.

"அப்படியானால் நான் சொன்னபடி நடப்பதில் தடையென்ன?"

"சொல்லுவதற்கு விஷயம் ஒன்றுமே யில்லை. நாட்டியத்திற்காக என் வாழ்நாள் முழுவதும் அர்ப்பணம் செய்ய வேண்டுமென்று தீர்மானம் செய்துகொண்டிருக்கிறேன். அவ்வளவுதான்."

"ஹேமா! உன்னுடைய தீர்மானம், நான் ஜீவித்திருந்தால்கூட நிறைவேற முடியாது. எனக்குப் பின் கண்டிப்பாக நிறைவேறாது. சகாரா பாலைவனப் பிரயாணம் போலத்தான் உனது வாழ்க்கைப் பிரயாணம். அவர் உன்னைச் சகோதரிபோல் நடத்தலாம். ஆனால் அதை உலகம் விபரீத அர்த்தத்தில்தான் நினைக்கும். வீணாக உன் பெயருக்கும், அவர் பெயருக்கும் இழிவான பட்டமே கிடைக்கும்......" என்று முடிக்கு முன்,

"நான் பிரதிபாவினுடன் அவரைத் விட்டுத் தனியாகத் தகுந்த துணையுடன் வசித்தால் யாரென்ன சொல்லமுடியும்?"

"தகுந்த துணை யார்? அம்மாவோ, உன் தகப்பனாரோ எவ்வளவு காலம் ஜீவவந்தர்களாக இருக்க முடியும்? அவர்களைத் தவிர வேறு தகுந்த துணை யார்? தவிர, நீ மறுத்தால் மற்றவள் அந்த ஸ்தானத்தை நிரப்புவது நிச்சயம். அப்பொழுது என் பிரதிபா அனாதையாகிவிடுவாள்."

"அவர் அப்படிச் செய்யமாட்டார் மாமி."

"அவரைச் செய்யும்படி நிர்ப்பந்திக்கும் சூழ்நிலை."

"வேறு ஏதாகிலும் செய்துகொள்ளலாம் மாமி. தயவுசெய்து இந்த விஷயம் மாத்திரம் வேண்டாம்."

"ஹேமா! எனது கடைசி வேண்டுகோளை மறுக்கிறாயே! என்மீதுள்ள வருத்தம் இன்னும் தீரவில்லையா? நான் எவ்வளவோ தீமைகள் உனக்குச் செய்திருக்கிறேன். அதற்காக உன்னிடம் கெஞ்சி மன்னிப்புக் கோருகிறேன். என் குழந்தைக்காக உன்னிடம் மன்றாடுகிறேன். பெண் மனம் சஹிப்புத் தன்மைக்கே உரியது. அவரை உன் மனம் கணவராக ஏற்க மறுக்காது, நிச்சயம். நான் நிம்மதியாக உயிரைவிட உதவிபுரிய மாட்டாயா? ஹேமா! ஹேமா! என்னை மன்னிக்க மாட்டாயா?" என்று கண்ணீர் வடிய அவளின் இரு கரங்களையும்பற்றியவாறு அழுத வண்ணம் கேட்டாள்.

மெலிந்த உடலுடன் மூச்சுத் திணற அவள் கேட்கும் தோரணை ஹேமாவின் மனதை மிக்க வேதனை செய்தது. அவளுக்கும் அழுகை வந்துவிட்டது. "மாமி, வருத்தப்படாதீர்கள் உங்கள் வாக்குப்படி உங்கள் ஸ்தானத்தை ஏற்றுக்கொள்கிறேன்" என்றாள்.

"அம்மா! ஆஹா! இந்த வார்த்தை என் காதிற்கு எவ்வளவு குளிர்ச்சியாக இருக்கிறது" என்று இரு கைகளாலும் அவளைச்சேர்த்து அணைத்துக்கொண்டாள்.

சற்றுப்பொறுத்து அவள் அணைப்பிலிருந்து விடுவித்துக்கொண்டு, "மாமி! ஏதோ உங்கள் மன நிம்மதிக்காகச் சொல்லிவிட்டேன். இவையொன்றும் நடக்காமல் செய்துவிடுவார் பகவான். நீங்கள் நிச்சயம் பிழைத்துக்கொள்ளுவீர்கள்" என்றாள்.

பதில் ஓர் வறண்ட சிரிப்பிற்குப் பின், "இரவு சாப்பாடெல்லாம் முடிந்து அமளியெல்லாம் அடங்கினபின்னர் அவரும் நீயும் சேர்ந்து வாருங்கள். இருவரிடத்தும் சேர்த்து சில விஷயங்கள் சொல்லவேண்டும்."

"ஆகட்டும், குழந்தை உங்கள் பக்கத்திலேயே இருக்கட்டுமா, சற்றுப்பொறுத்து எழுந்துவிடுவாள். வந்து எடுத்துக்கொண்டு போகிறேன்"

"உன் முயற்சியினால்தான் தினம் ஒரு தடவை யாவது என் கண்ணுவை அணைத்து முத்தமிட முடிந்தது. மற்ற யாரும் குழந்தை என் அருகில் வரச் சம்மதிக்கமாட்டார்கள். மறுபடியும் சொல்லுகிறேன். என் குழந்தையைப் பார்த்துக் கொள்ளு. என்று உனக்கு நான் சொல்லுவது, 'கண்ணே, இமையைக் கா' என்று சொல்லுவது போலாகும். எனக்குக் கொடுத்த வாக்கை மறக்கமாட்டாயே" என்று அவள் கையைப் பிடித்தவாறு கேட்டாள்.

"மறக்கமாட்டேன் கவலைப்படாதீர்கள்"

"இரவு மறக்காமல் அவருடன் வருகிறாயா?"

"வருகிறேன்" என்று சொல்லிவிட்டுச் சென்றாளே தவிர, போகும்பொழுது "ஏதோ வியாதியின் கோளாறினால் இப்படிக் கூறுகிறாள். இன்று அலைந்த அதிர்ச்சி. இரவு அவருடன் நின்று இந்தமாதிரி வார்த்தைகளை எப்படிக் கேட்டுக் கொண்டிருக்கமுடியும். இன்று தட்டிக்கழிக்க வேண்டியதுதான், நிச்சயம் பிழைப்பாள். நாளுக்குநாள் தெளிவு காண்கிறதே" என்று நினைத்தவாறு சென்றாள்.

இரவு எல்லாம் முடிந்து யாவரும் படுக்கைக்குச் செல்லும் பொழுது மணி பதினொன்றடித்து விட்டது. "ஹேமா! இப்பொழுதுதான் பிரேமாவை நானும் அவள் அம்மாவும் பார்த்துவிட்டு வந்தோம். தூங்குகிறாள். இன்றைக்கு யாவருக்கும் அலுப்பு. உனக்கும் மிகுந்த வேலை. இருந்தாலும் நீ அவைகளைப் பாராட்டமாட்டாய். மாடியில் ராஜாவினிடம் தூங்குகிறது குழந்தை பிரதிபா. பாலை ராஜாவினிடம் கொடுத்துவிட்டு, குழந்தையை எடுத்துவந்து என் பக்கத்தில் விட்டுவிட்டு, நீ மட்டும் பிரேமாவின் அறையில் படுத்துக்கொள்ளு" என்றாள் ராஜாவின் தாயார்.

பாலைக் கொடுத்துவிட்டுக் குழந்தையை எடுத்துக்கொண்டு, பிரேமா அழைப்பைச் சொல்வதா வேண்டாமா என்று சிந்திக்கும் சமயம்,

"ஹேமா! இன்று எனக்கு ஒரு உதவி செய்வாயா?" என்றான் ராஜா.

இதென்ன? இன்று தம்பதிகள் இருவரும் நம்முடைய உதவி கோருகிறார்கள். "என்ன செய்ய வேண்டும் கட்டளையிடுங்கள்" என்றாள்.

"இன்று எனக்கு உடம்பெல்லாம் ரொம்ப வலிக்கிறது. அசதியோ கேட்க வேண்டாம். அதனால் இன்று இரவு மட்டும் பிரேமாவை, நீ மட்டும் கவனித்துக்கொள். உனக்கும் அலுப்பாகத்தானிருக்கும். என்ன செய்வது? என்னால் அசையக்கூட முடியாது போலிருக்கிறது" என்றான்.

"இரவு நான் பார்த்துக்கொள்ளுகிறேன். ஆனால் படுக்கப் போகுமுன் உங்களை அவசியம் பார்க்க வேண்டுமென்று சொன்னார் மாமி."

"கச்சேரி முடிந்ததும் நான், சிவஸ்வாமி, விஜயா மூவரும் பேசிக்கொண்டிருந்தோமே. பிறகா சொன்னுள்?"

"சாயங்காலமே சொன்னுர். படுக்கப் போகு முன் வரும்படி."

"சரி, வா போகலாம்."

"நீங்கள் என்னவென்று கேட்டுவிட்டு வந்து படுத்துக்கொள்ளுங்கள். நான் பிறகு வருகிறேன்."

அவன் சென்றதும், குழந்தையை விட்டுவிட்டு, ட்ராயிங் ரூமில் வந்து ஒரு சோபாவில் படுத்துக் கொண்டு தூங்குவது போல் பாவனை பண்ணிக் கொண்டிருந்தாள். ராஜா திரும்ப அவன் அறைக்கு இவ்வழியாகத்தான் போவான். அவன் சென்ற பின்பே பிரேமாவின் அறைக்குச் செல்லலாமென்ற நினைப்புடன்.

இவன் வருகையை எதிர்பார்த்துக்கொண்டிருந்த பிரேமா, "ஹேமா சொன்னுளா?" என்று கேட்டாள்,

"ஆமாம். ஏன் கூப்பிட்டாய்" என்று கேட்ட வண்ணம் அவள் பக்கத்தில் உட்கார்ந்தான்.

"ஹேமா உங்கள்கூட வரவில்லையா?"

"நான் சென்றபிறகு வருவதாகச் சொன்னுள்."

"அன்று உங்களிடம் சொன்னேனல்லவா, அவள் மனதில் வேறு ஒருவருக்கும் இடமில்லையென்று. அதை அவளே ஒத்துக்கொண்டு விட்டாள். இருவரும் சேர்ந்து எனக்கு வாக்களிக்க வேண்டும். அவளையும் அழைத்து வாருங்கள்" என்ருள் ஹீனஸ்வரத்தில்.

"இன்று உனக்குப் பேசக்கூட சிரமமாக இருக்கிறது. அதனுல் இன்னொரு சமயம் பார்த்துக் கொள்ளலாம். நான் உன் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறேன், தூங்கு."

"இன்று என் நிலைமை நன்ருக இல்லாததினுல் தான் அவசியம் உங்களிடம் சொல்ல வேண்டுமென்ற அவா. என் சொல்லை மறுக்காமல் சீக்கிரம் அவளை அழைத்து வாருங்கள்."

மறுக்கமாட்டாமல் எழுந்து சென்ருன். ஒவ்வோரிடமாகச் சப்தப்படாமல் தேடிவிட்டுக் கடைசியில் ட்ராயிங் ரூமிற்கு வந்து பார்த்தபொழுது தூங்குவதுபோலிருக்கும் ஹேமாவைப் பார்த்து, "ஐயோ பாவம், இன்று அதிக வேலை. களைப்புற்றுத் தூங்குகிருள். எப்படி எழுப்புவது?" என்று சிந்தனை செய்தவண்ணம் சற்று நின்ருன். பிறகு பிரேமாவின் நிலைமையை நினைக்கும்பொழுது தான் நிற்பது முட்டாள்தனம் என்று தோன்றவே, "ஹேமா" என்று கூப்பிட்டான், பதிலில்லை. பக்கத்தில் கிடந்த பத்திரிகை ஒன்றை எடுத்துச் சுருட்டிப் பிடித்துக்கொண்டு, லேசாக அவள் கன்னத்தில் தட்டினுன்.

"இனியும் எழுந்திருக்காவிட்டால் மரியாதையாகாது" என்ற நிலைமையில் திடுக்கிட்டு விழிப்பவள் போல் எழுந்து நின்ருள்.

"பிரேமா கூப்பிடுகிருள் வா?" என்ருன்.

"நான் போகிறேன் உங்களுக்கு அலுப்பாக இருக்கிறதென்று சொன்னீர்களே, படுக்கப்போகவில்லையா?"

"இல்லை. என்னுடன் வா" என்று நடந்தான்.

அந்தச் சமயம் அவனுடன் செல்வது பலிபீடத்திற்குச் செல்லும் ஆட்டின் நிலைமை போலிருந்தது அவளின் மனம்.

"ஹேமா, நான் சொன்னதை மறந்துவிட்டாயா? ஏன் பின் தங்குகிருய்?" என்று தயங்கித் தயங்கிச் சொல்லிமுடித்தாள்.

"இல்லை, மிக்க அலுப்பாக உட்காரவே முடியாதுபோலிருந்தது, சற்றுக் கண்ணயர்ந்துவிட்டேன், மன்னியுங்கள் என்ருள்."

படுக்கையில் அவள் பக்கத்தில் உட்கார்ந்தான் ராஜா. ஒதுங்கி நின்ற ஹேமாவின் கையைப் பற்றி ராஜாவின்மீது படும்படி நிற்கச் செய்தாள் பிரேமா.

"இதென்ன மாமி, கை ஐஸ் மாதிரி இருக்கிறதே?" என்ருள் ஹேமா"

'என்ன?" என்று பதறியவனுக அவள் கையைப் பிடித்தான் ராஜா.

"ஒன்றுமில்லை" என்று மூச்சுத் திணற வார்த்தை வெளிவந்தது. மேலும் ஏதோ சொல்ல வந்தவள் சொல்லமுடியாமல் தவித்தாள்.

"பிரேமா! என்ன செய்கிறது. இதோ டாக்டருக்குப் போன் செய்கிறேன்" என்று எழுந்தவனைக் கையமர்த்தி நிற்கும்படி ஜாடை காட்டிவிட்டு ராஜாவின் கையையும் ஹேமாவின் கையையும் சேர்த்துப் பிடித்துக்கொண்டு செய்வீர்களாவென்பது போல் தலையை அசைத்தாள். ராஜா ஏதோ சொல்ல ஆரம்பித்த சமயம், ஐயோ! அம்மா! என்ற ஹீன சப்தத்துடன் அவர்களின் கையின் மேலேயே குப்புற விழுந்த பிரேமாவைச் சட்டெனத் தூக்கிப் படுக்கையில் விட்டுவிட்டு "ஹேமா! டாக்டருக்குப் போன் பண்ணு" என்று சொல்லிவிட்டு அவள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு "உனக்கு என்ன செய்கிறது?" என்ருன்.

"மாரை வலிக்கிறது" என்று ஒவ்வொரு வார்த்தையாகத் திணறித் திணறிச் சொன்னபடி அவன் கையைத் தன் மார்பின்மீது வைத்து அழுத்திப் பிடித்துக் கொண்டாள். ராஜாவினுல் ஒன்

றுமே செய்ய முடியவில்லை. கண்களில் நீர் சுரந்து கொண்டேயிருந்தது. ஒரு கையினால் அவள் நெற்றியை வருடிய வண்ணம் "பேச முடியவில்லையா?" என்றான்.

"ஆமாம்" என்பது போல் மண்டையை ஆட்டினாள். அதற்குள் ஹேமா போன் செய்து விட்டு வரும் பொழுது யாவரையும் எழுப்பிவிட்டு வந்த படியினால், என்ன? என்ன? என்று யாவரும் அறையில் கூடிவிட்டார்கள். தன்னைச் சுற்றி நிற்கும் யாவரையும் ஒரு முறை சுற்றிப் பார்த்தாள். பிரேமாவின் தாயார் "ஐயோ! என்னமோ போல் விழிக்கிறாயே, என்னடி செய்கிறது? என் தலையில் கல்லைப் போடப் போகிறாயா?" என்று அலறினாள். "உனக்கு என்ன செய்கிறது?"என்று அமைதியாக வினவினாள் ராஜாவின் தாய்.

"அவளைக் கேள்வி கேட்டுப் பயனில்லை யம்மா. அவளால் பேச முடியவில்லை"யென்று துக்கம் நெஞ்சை யடைக்கக் கூறினான்.

"சாயங்காலமெல்லாம் நன்றாக இருந்தாளே" என்றார் பிரேமாவின் தந்தை.

"இந்த வியாதியின் கோளாறே அது தானே" என்றான் சிவஸ்வாமி.

"இடுப்பில் குழந்தையுடன் நிற்கும் ஹேமாவின் பக்கம் கையைக் காட்டினாள் பிரேமா.

"குழந்தையை அவள் பக்கத்தில் விடு" என்றாள் ராஜாவின் தாய்.

சுற்றியிருக்கும் மனிதக் கூட்டத்தையும் அசைவற்றுப் படுத்திருக்கும் தாயையும் பார்க்கும் பொழுது குழந்தை யுள்ளத்தில் என்ன தோன்றிற்றோ தாயின் பக்கத்திலிருக்க மனமின்றி ஹேமாவை நோக்கித் தாவி அழுதது. அழும் குழந்தையின் உச்சியைச் சிரமத்துடன் மோந்துவிட்டு, ஹேமாவைக் குழந்தையை எடுத்துக் கொள்ளும்படி ஜாடை காட்டினாள். பக்கத்தில் நின்ற அவன் தாய் குழந்தையை எடுக்க வந்தாள். வேண்டாம் என்பதாகத் தலையை அசக்கிவிட்டு ஹேமாவைப் பார்த்தாள். சட்டென அருகில் வந்து குழந்தையை எடுத்துக் கொண்டதும், அதன் அழுகை நின்றுவிட்டது. நகரத் திரும்பின ஹேமாவை, "கொஞ்சநேரம் அவள் பக்கத்திலேயே நின்றுகொண்டிரு" என்றாள் ராஜாவின் தாய். இவையெல்லாம் ஒரு நிமிஷத்தில் நடந்தேறின. திணறித் திணறி வரும் மூச்சிற்கிடையே, தகப்பனாரிலிருந்து ஒவ்வொருவராகப் பார்த்துவிட்டு, பக்கம் பக்கமாக நிற்கும் ராஜா, ஹேமாமீது பார்வை நின்றது. ஹேமாவின் மனம் சொல்லொணாவேதனையடைந்தது. "என்ன சொல்ல நினைத்தாளோ? அது முடியாமல் போய் விட்டதற்குத் தான்தான் காரணம். ராஜாவுடன் வந்திருந்தால் சொல்லியிருப்பாள். இன்று இரவு தாண்டிவிட்டால் நாளை எப்படியாகிலும் தனிமையில் அவள் அவாவைத் தெரிந்துகொண்டு விடலாம். இரவு கழிய வேண்டுமே" என்ற சிந்தனையில் அவளறியாமல் கண்ணீர் வடிந்துகொண்டேயிருந்தது. இந்தச் சமயம் டாக்டரும் வந்து சேர்ந்தார்.

வந்ததும் அவளைக் குனிந்து பார்த்ததுமே நிலைமை விளங்கிவிட்டது டாக்டருக்கு. திரும்பி ராஜாவைப் பார்த்தார். இருவரும் மேஜையருகில் வந்து பெட்டியிலிருந்து ஊசிபோடும் மருந்தை எடுக்கும்பொழுது "டாக்டர்! இனி ஒன்றுமே செய்யமுடியாதா?" என்றான் கெஞ்சும் பாவனையில்.



"ராஜா! உன்னைப் பார்த்தால்தான் மிகப் பரிதாபமாக இருக்கிறதென்றால் குழந்தையுடன் நிற்கும் ஹேமாவின் தோற்றம், எனது தொழில் முறையைக்கூட மறக்கச் செய்துவிடும்போலிருக்கிறது, நிலைமை இனி மணிக் கணக்கில்தானிருக்கும் போலிருக்கிறது. நான் தெய்வமல்லவே. என்னாலான முயற்சியெல்லாம் செய்கிறேன். பிறகு உன் குழந்தையின் அதிருஷ்டம். இந்த ஒரு ட்யூப் 115 ரூ. அதிகம் கிடைக்காது, அவசியத்திற்கென்று இரண்டு எடுத்து வைத்திருந்ததில் ஒன்று கொண்டுவந்தேன்" என்று தணிவான குரலில் பேசிய வண்ணம் மருந்தைக் குழாயில் ஏற்றினார். ஊசியுடன் தன்னருகில் வந்த டாக்ரை நோக்கி, இரு கைகளையும் கூப்பி, ஊசி போட வேண்டாமென்பதாக ஜாடை காட்டினாள்.

"இல்லையம்மா. இது ஓர் புது மருந்து. உடனே குணம் காண்பிக்கும்" என்று சொல்லிக்கொண்டே ஊசி மருந்தைக் கையில் ஏற்றினார். ஊசி குத்துவதுபற்றி அவளுக்குச் சுரணையே தெரியவில்லை. ராஜாவைப் பார்த்து உதட்டைப் பிதுக்கினாள். அடுத்த நிமிஷமே மேல் மூச்சு வேகமாக வரத் தொடங்கியது. கட்டிலுக்கு மறுபுறம் நிற்கும் ஹேமாவை நோக்கித் தலையை அசைத்தாள். ஒன்றும் புரியாமல் விழித்தாள் ஹேமா. "அப்படியே அவள் பக்கத்தில் உட்காரம்மா" என்ற டாக்டர் ராஜாவின் காதில் வாயை வைத்து, "இனி ஒரு மணி அவகாசம்கூடத் தாங்குவது சிரமமே, அவள் ஏதோ சொல்ல விரும்புகிறாள். பக்கத்தில் உட்கார்ந்து கேள்" என்றார் டாக்டர், பக்கத்தில் உட்கார்ந்து "பிரேமா" என்று நெற்றியில் விழுந்திருக்கும் கேசத்தை ஒதுக்கிவிட்டபடி கேட்டான்.



அதுவரை பேசமுடியாமலிருந்தவள் "என் கு...ழ...ந்...தை ஹேமா.........நீங்கள்" என்று திணறி வரும் மூச்சிடையே சொன்னாள், அது தான் டாக்டர் மருந்தின் பலன், என்ற நினைப்புடன் "கவலைப்படாதே உன் சொற்படி செய்கிறேன்" என்றான் ராஜா. துரத்திவரும் மேல் மூச்சினால் துன்பச்சாயை படர்ந்த முகத்தில் சாந்தி நிலவியது போல் தெளிவு காண்பித்தது. "ஊசி மருந்தினால் சற்றுக் குணம்போலும்' திணறி வந்த மூச்சு சற்று நிதானமாக வருகிறது" என்று நினைத்துக் கொண்டார்கள், டாக்டர், ராஜாஇருவரைத் தவிர மற்ற யாவரும். அரை மணி நேரம் நிசப்தமாக அவளையே பார்த்துக் கொண்டு நின்றயாவரும் நிலைமை மாறும் விதத்தைக் காண்கிறார்கள்,

தனது இரு பக்கத்திலும் உட்கார்ந்திருக்கும் ராஜா ஹேமா இவர்களின் கைகளை இடது கையினால் ஒருவரையும் வலது கையினால் ஒருவரையும் பிடித்துக்கொண்டு, இருவரையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தவளின் பார்வை, ராஜாவின் மீதே நின்று நிலைத்துவிட்டது. கைப்பிடியும் நழுவின. உற்றுப் பார்த்துக்கொண்டிருந்த டாக்டர், "ராஜா காரியம் மிஞ்சிவிட்டது. நீ கொடுத்துவைத்தது அவ்வளவுதான்" என்று சொல்லியபடி தள்ளிக்கிடந்த நாற்காலியில் உட்கார்ந்துகொண்டுவிட்டார்.

"பிரேமா! என் லக்ஷியத்தை சிதைத்துவிட்டாயே!" என்ற சொல்லுடன் மனைவியின் சடலத்தின் மார்பில் முகத்தைப் புதைத்துக்கொண்டு விம்மினான் ராஜா.

பிரேமா! பிரேமா! என்று யாவரும் அலறும் சப்தத்தைக் கேட்ட குழந்தை பயந்து தாயின் மிருத தேகத்தைக் கட்டிக்கொண்டு அழுத காட்சி யாவர் மனதையும் வாட்டியது. தற்செயலாக ஹேமாவின் பக்கம் திரும்பின டாக்டர் மரம் போல் உட்கார்ந்திருக்கும் நிலைமையைக் கண்டு திடுக்கிட்டவராக,

சிவஸ்வாமி! சட்டென ராஜாவை நிமிர்த்தி "ஹேமாவைக் கவனிக்கச் சொல்லு. மயக்கம் வரப் போகிறது. அவள் விழிப்பது நன்றாயில்லை,' என்றார். சிவஸ்வாமி, ராஜாவின் தலையை நிமிர்த்திவிட்டு "ராஜா! என்ன செய்வது? வந்ததைத் தைரியமாக வரவேற்பது தான் மனிதத் தன்மை' ஹேமாவைக் கவனி. ஒரு மாதிரியாக இருக்கிறாள்" என்று சொல்லிய வண்ணம் குழந்தையை எடுத்துக் கொண்டாள். "ஹேமா!" என்றான் ராஜா! பதிலில்லை. டாக்டர் அவள் அருகில் வரும் சமயம் நினைவற்றுப் பிரேமாவின் மிருத தேகத்தின் மீது சாய்ந்துவிட்டாள்.

(தொடரும்)

# குற்றமுள்ள நெஞ்சு



கிருஷ்ணன்பாலா

காலை மணி ஒன்பதரை ஆகிவிட்டது.

மகாதேவ அய்யர் ஆபீஸுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தார். சமையலறையில் அவர் மனைவி காமாட்சி அம்மாள் இரைந்துகொண்டிருந்தாள். "ஏய்! கிச்சு! ராஜம், சுமதி, சீமாச்சு, லலிதா!... எல்லாரும் சமத்தாக இரையாமல் சாப்பிட்டுக் கொண்டிருக்கணும். நான் அப்பாவுக்கு 'டிபன்' கட்டிக்கொடுத்துவிட்டு வருகிறேன்"... மகாதேவய்யர் சற்று நிதானித்தபடியே கோட்டை மாட்டிக்கொண்டிருந்தார். அவரிடமிருப்பது அந்த ஒரே கோட்டுத்தான். டைபிஸ்ட் அய்யாசாமி கேலீ செய்கிறான். என்ன சொன்னால் என்ன? வேறு தைத்துக்கொள்ள அவரிடம் என்ன கொட்டியா வைத்திருக்கிறது? மனைவிக்கும் குழந்தைகளுக்கும் புதுத் துணி எடுத்துக் கொடுத்தே மூன்று வருஷங்கள் ஆகின்றன...

காமாட்சி அம்மாள் வெளியே வந்தாள். முகத்தில் எண்ணெய் வழிய, குங்குமப் பொட்டு வியர்வையில் கரைந்து மூக்கு நுனியில் ஊசலாட, அவள் வந்ததைப் பார்த்த ஐயருக்குச் சிரிப்பு வந்தது. "என்ன சிரிக்கிறேள்! எனக்கு இனிமேல் என்ன அலங்காரம் வேண்டியிருக்கிறது... டிபனைப் பிடியுங்கோ; நேரமாகலையா?". ஐயர் 'சூள்' கொட்டினார். "ஆமாம்... பிரமாத டிபன்! தினமும் அதே தயிர் சாதம்தான். ஆபீஸில் எல்லாரும் கேலி செய்கிறார்கள். ஓடாக உழைத்துச் சம்பாதித்தாலும் வாய்க்கு இனிமையாக அங்கே 'காண்டீனில்' டிபன் சாப்பிட்டோம் என்றில்லே. டைபிஸ்ட் ஐயாசாமிக்கு என்னைவிடக் குறைவுதான் சம்பளம். 'ஹாய்'யாகத் தினம் டிபன் சாப்பிடுகிறான்..."

"இதெல்லாம் பார்த்து முடியுமா? குழந்தைகள் எல்லாம் இருக்கிறார்கள்..."

"ஆமாம், குழந்தைகள்! யார் கேட்டார்கள்? கொண்டுபோய்க் கிணற்றில் தள்ளு..." என்று ஆக்ஞாபித்தார் அய்யர்.

"நன்றாயிருக்கிறது பேசுகிற லட்சணம்...அது சரி; காப்பிக்கொட்டை வாங்கணும்...பணம் கொஞ்சம் கொடுங்கோ..."

"என்னை அடியோடு தொலைத்துவிடுங்கள்... பணமும் இல்லே, ஒட்டாஞ்சல்லியும் இல்லே!..." என்று ஐயர் சீறினார். பிறகு ஏதோ நினைவுக்கு வந்தவராக, "ஆச்சு! தீபாவளிக்குப் பெண்ணும் மாப்பிள்ளையும் வந்துவிட்டால்...என்னைக் கொன்று புதைத்துவிடலாம்; இழவு...சே..." என்று உறுமியபடியே டிபன் பொட்டலத்தை மட்டும் மறக்காமல் எடுத்துக்கொண்டு அவர் வெளியேறினார். காமாட்சி அம்மாள் ஒன்றும் பேசவில்லை. முப்பது வருஷ அனுபவம் இல்லையா அவளுக்கு!

ஐயா ஆபீஸுக்கு நடையைக் கட்டினார். அவர் மனம் ஒரேயடியாகக் கொந்தளித்துக் கொண்டிருந்தது. நீண்ட நாளைக்கு முந்தி, அவர் ஏழெட்டு வயதுப் பையனாக இருக்கும் போது வீட்டில் மிகவும்படுத்துவார். தாம் கேட்ட டிபன் பண்ணித்தரவில்லை என்றால், ரகளை தான். ஒரு நாள் கூடப் பள்ளிக்கூடத்துக்கு மோர் சாதம் கொண்டு போக மாட்டார். அவர் பாட்டி சொல்லுவாள். "மகாதேவா! இப்போ இப்படிப் படுத்தறே நீ... நாளைக்கே பெரியவனாய்ப் போய் ஏழெட்டுக் குழந்தைகளைப் பெத்துண்டு அவஸ்தைப்படப் போறே பார்!...... ஐயரின் கை தானாகவே, டிபன் பொட்டணத்தைத் தடவிக் கொடுத்தது. முன்பு, பள்ளிப் பையன்களின் கேலியைப் பொருட்படுத்தினார். ஆனால், இப்பொழுது!.........

ஆபீஸ் வந்துவிட்டது. நல்ல காலம். மணி பத்தடிக்கவில்லை. பத்து நிமிஷம் தாமதமாக வந்தாலும் அந்த 'ஸெக்ரட்ரி' கூப்பிட்டு விளாசி விடுகிறான். வயது முறுக்கு......நல்ல சம்பளம்... கல்யாணமான புதிது....... விரட்டக் கேட்பானேன்! ஐயர் உள்ளே நுழைந்ததும். "என்ன ஸார்! சீக்கிரமாகவே வந்துட்டேள்?" என்று கண் சிமிட்டினான் அய்யாசாமி. சற்று வயதான கோண்டு அய்யர், "ஏது, முகம் பிரசன்னமாயில்லையே! ஹோம் டிபார்ட்மெண்ட்லே, சூடு கிடைத்ததோ" என்று அக்கரையாக விசாரித்தார். மகாதேவய்யருக்குக் கோபம் பற்றிக் கொண்டு வந்தது. "சற்றுச் சும்மா விடமாட்டீர்களா என்னை?" என்று சீறிக்கொண்டே, 'ஹெட் கிளார்க்' என்ற ஆசனத்தில் போய் உட்கார்ந்தார். இந்த இடத்துக்கு வந்து இரண்டு வருஷங்கள் ஆகின்றன. சம்பளம் என்ன? அன்று ரூ. 40க்கு வந்து சேர்ந்தவர் இன்று ரூ. 200 வாங்குகிறார்......கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்தவாறே. மோட்டு வளையைப் பார்த்தார் அவர். மேல் தளத்து உத்திரம் அவருக்கு எத்தனையோ கதைகள் சொல்லத் தொடங்கினது.

* * *

முப்பது வருஷங்களுக்கு முன்னால், மகாதேவன் பி. ஏ. பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட சுப முகூர்த்தத்தில் ஸௌபாக்கியவதி காமாட்சியை மாலையிட்டார். அம்மி மிதித்து, அருந்ததி காட்டி, நலங்கு உருட்டிவிட்டு, நேரே இந்த "பாஸ்டர் அண்டு பாஸ்டர்" கம்பெனியைப் பார்க்க வந்து சேர்ந்தார், யார் செய்த புண்ணியமோ, 'கிளார்க்' வேலை கிடைத்தது. வேலை

கிடைக்காத அந்தக் காலத்தில், கிடைத்த வேலையே பெரிதாகப்பட்டது எல்லோருக்கும். எல்லாம் காமுவின் அதிர்ஷ்டம் என்றார்கள் பலர். மகாதேவன் பெருமையால் பூரித்தார். காமாட்சி சந்தோஷத்தில் திணறினாள். அப்போது காமாட்சி எப்படி இருந்தாள்? கொடி போல் அன்று இருந்த உடல், பலூன் மாதிரி ஆகியிருக்கிறது. இடுப்பு அகன்று......... உடல் தளர்ந்து......... ஐயருக்குத் தம் மனைவிமேல் அருவருப்புக் கலந்த அனுதாபம் ஏற்பட்டது.

''அம்மாளைக் சொல்வானேன்? ஐயா மாத்திரம் என்னவாம்?'' என்று ஏதோ ஒரு குரல் கேட்டது அவருக்கு. தம்மையே குனிந்து பார்த்துக் கொண்டார். தலைமயிர் நரை, உடல் தளர உழைத்திருக்கிறார். இந்தக் கம்பெனிக்கும் தம் வீட்டுக்கும் கிடைத்தது என்ன? இங்கே முப்பது வருஷத்தில் ரூ. 160 சம்பள உயர்வு......... அங்கே, ஆறு குழந்தைகள்?.........

தனது முதல் குழந்தை— சாவித்திரி — பிறந்த போது...... ஏன், பிறப்பதற்கு முன்பே எத்தனை சந்தோஷமாக இருந்தனர் இருவரும்? பிறக்கப் போவது கண்ணனா, கண்ணம்மாவா என்று எத்தனை சர்ச்சைகள்? பெயர் வைப்பது பற்றி எத்தனை ஊடல்கள்? ஐயர் ஒரு அசட்டுப் புன்னகை புரிந்து கொண்டார். எல்லாம் ஒரு காலத்தில்... அதற்கு இரண்டு வருஷங்களுக்குப்பின் கிச்சு, அப்புறம் ராஜம்......... சுமதி, சிமாச்சு, லலிதா .........சே!

சாவித்திரிக்குத் தான் எத்தனை பணம் கஷ்டப்பட்டுச் செலவழித்திருக்கிறார்? இரவு பகலாக அந்த கரு. ப. உ. செட்டியார் மகனுக்கு 'டியூஷன்' சொல்லிக் கொடுத்துச் சம்பாதித்த பணத்தையெல்லாம் சாவித்திரி கிரோஷா ஊசிகளாகவும், எம்பிராய்டரி நூலாகவும் மாற்றினாள். கல்யாணத்துக்குத்தான் எத்தனை செலவு? இப்போது என்னவென்றால். அவளும் அவளது 'அவரு'ம் தீபாவளிக்கு வரப்போகிறார்களாம்! பேஷ்! எத்தனை தீபாவளிதான் மாப்பிள்ளை மாமனார் வீட்டில் கொண்டாடுவது? பணம் போதவே இல்லை...எப்படிப் போதும்? கிச்சு எஸ். எஸ். எல். ஸி. படிக்கிறான். அவன் வேலைக்கு வந்தாலாவது...... ஐயர் நினைத்திருப்பாரா முப்பது வருஷத்திற்கு முந்தி ...... தான் இப்படிப் பசித்தவன் பழங்கணக்கைப் பார்ப்பது போல் உட்கார்ந்திருப்போம் என்று? இந்தக் கம்பெனிக்கே மானேஜர் ஆகிவிடலாம் என்று கனவு கண்டார். ஒன்றுமில்லாதவன் எல்லாம் முன்னுக்கு வருகிறார்கள்?...... தினம் பேப்பரில் ஒரு கேஸாவது வருகிறதே...... 'ஹோல்ட், அப்' (வழிப்பறி கொள்ளை) நடந்ததென்று......நேற்றுக் கூட வந்தது! ரூ. 25000 அபேஸ்! துணிகரத் திருட்டு! ...... இப்படி ஏதாவது செய்ய வேண்டியது தான். இந்த 200 ரூபாய் பிச்சைக்காசில் என்ன தான் செய்ய முடியும்?

மணி அடித்தது. ஐயரின் எண்ணம் கலைந்தது. டிபன் அறைக்குச் சென்றார்.

''வாங்கோ ஸார்! ஏது கொஞ்சம் கோபமா இருக்கருப்பிலே இருக்கு!'' என்றார் கங்காதரம் வடையைத் தின்றபடியே. ஐயர் ஒரு 'அழுகல்' புன்னகை செய்தார்.

''எல்லாம் இந்தப் பசங்கள் தொல்லைதான் ஸார்...பெண்வேறு வருகிறாளாம் புருஷனுடன்... கடன்தான் இருக்கிறதே தவிரப் பணம் இல்லை...''

''ஸார்! இதற்கெல்லாம்தான் 'பர்த் கண்ட்ரோல்' வேண்டும் என்பது. நம் நாட்டிலே உற்பத்தி குறைவு. மக்கள் பெருகிக்கொண்டேவந்தால் 'நேஷனல் டிவிடெண்ட்' குறைந்து வாழ்க்கைத் தரம் குறைந்து......மூன்று குழந்தைதான் தரம்!''—இது சகஸ்ரநாமம் பி. ஏ. (ஹானர்ஸ்).

''சிவ சிவா...''என்று காதைப் பொத்திக்கொண்டனர் சில வயது முதிர்ந்தவர்கள்.

''பகவான் நியதியை எதிர்த்துப் போகவாவது! ஐயையோ!...''

''எது எப்படி ஆனாலும், பிறந்த பிறகு யோசனை செய்து என்ன செய்வது? ஜோராக ஆயிரக்கணக்கில் எங்காவது சாமர்த்தியமாக அழுத்தவேண்டியதுதான். என்ன காஷியர் ஸார்?...''—இது அய்யாசாமி.

மகாதேவ அய்யர் நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டார். அவர் தீர்க்கமாக ஜன்னல் கம்பிகளையே பார்த்துக்கொண்டிருந்தார்...

இடைவேளைக்குப் பின்பு அவருக்கு வேலை ஓடவே இல்லை. தன்னைப்பற்றியும், தன் குழந்தைகளைப்பற்றியும், பணக் கஷ்டத்தைப்பற்றியுமே நினைத்துக்கொண்டிருந்தார். இடதுபுறம் திரும்பினார். அந்த வலை ஜன்னலுக்கு அப்பால்தான் காஷியர் மேஜை இருந்தது. ஆயிரக்கணக்கான நோட்டுக்களை எண்ணிக்கொண்டிருந்தார் காஷியர் கங்காதரம். ஒரு நோட்டைத் தொடமுடியுமா அவர்! இதை இப்படியே 'அபேஸ்' செய்தால் என்ன என்று எண்ணமிட்டார் மகாதேவய்யர். பாஸ்டர் கம்பெனி நாசமாய்ப்போகட்டும் என்று சாபம் கொடுத்தார் அவர். பிறகு தீரமாகச் சிந்



தனை செய்யலானார். இன்று தேதி 23; ஏழெட்டு நாட்களில் சம்பளம் வாங்கலாம். வாங்கி என்ன? ரூ 100 கடன் திருப்பித்தர வேண்டும்......சம்பள தினத்தன்று இந்த சகஸ்ரநாமம் தான் கம்பெனி மோட்டாரை எடுத்துக் கொண்டு 'பாங்கில்' போய், சம்பளப்பட்டுவாடாவுக்கும், மாதக் கையிருப்புக்கும் பணம் எடுத்து வருவான். எல்லாம் மொத்தம் ரூ. 12000 தேறும். வழியில் இந்தக் காரை நிறுத்திக் கொள்ளையடித்தால் என்ன? யாராவது ஆளை ஏற்பாடு செய்து, காரை மடக்கிக் கொள்ளையடிக்கச் சொல்லிப் பிறகு ஆளுக்குப் பாதியாக எடுத்துக் கொள்ளலாம். வந்தது லாபம்!...நேரம் ஆக ஆக, ஐயருக்கு இந்தப் பைத்தியக்கார யோசனை நன்ருகப் பலப்பட்டுவிட்டது.

அன்று மாலை அவர் வீட்டுக்குப் போனதும், குழந்தை லலிதா அவர் கால்களைக் கட்டிக் கொண்டாள். காலை உதறித் தள்ளினார் அவர். "அப்பா! இன்னிக்குப் பள்ளிக்கூடத்திலே..'என்று ஆரம்பித்தான் சிமாச்சு. அவனுக்கு ஒரு அறை கிடைத்தது.

அவர் மனைவி காப்பி டம்ளரை நீட்டினாள். ஒரு வாய் குடித்ததும் அவருக்கு மூளை கொதித்தது. "ஏண்டி! இது காப்பியா! காப்பியா என்கிறேன்" என்று சீறிக்கொண்டே அதை வீசி எறிந்துவிட்டுத் துண்டை உதறிப் போட்டுக் கொண்டு வெளியே நடந்தார். யோசனை செய்து கொண்டே நடந்தார் ஐயர், எப்படியாவது தம் திட்டத்தை நிறைவேற்ற வேண்டியதுதான். இந்தப் பணம் போவதால் கம்பெனிக்கு ஒன்றும் பிரமாத நஷ்டம் இல்லை. அவர்களாகக் கொடுக்காததை நாமாக எடுத்துக்கொள்கிறோம். அவ்வளவுதான்...... வந்த பணத்தில் நல்ல டிரஸ் தைத்துக் கொள்ளவேண்டும். சினிமா...... காண்டீன்...... ஹோட்டல்...... வீட்டில் பணத்தைக் காட்டவே கூடாது. ஐயருக்குச் சுயநலம் மேலிட்டது.

* * *

அன்று 25-ஆம் தேதி. மத்தியானம் 'டிபன்' நேரத்தில் சந்தித்தார்கள். அய்யாசாமி, ஸ்வாரஸ்யமாகக் கொள்ளை, கொலைக் கேஸ்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தான். குப்புசாமி முதலியார், "ஸார்! அந்த மயிலாப்பூர் 'டேகாய்டி' வழக்கிலே........" என்று சொல்லிக்கொண்டே வந்தார். 'இதென்ன சங்கடம்! எங்குப் பார்த்தாலும் இதே பேச்சுத்தானு?......" ஐயருக்கு இரத்தம் வேகமாகஓடியது, இதற்குள் ஒருவர் கேட்டார்,

"ஏன் ஸார்! இவ்வளவு பேசுகிறீர்களே? நம் கம்பெனிக்குப் பணம் எடுத்துக்கொண்டு வரும் போது யாராவது வழிமறித்துக் கொண்டால் என்ன செய்வீர்கள்?" என்ருர் ஸகஸ்ரநாமத்தைப் பார்த்தபடி.

"என்ன செய்வேனு? பேசாமல் பணத்தைக் கொடுத்துவிட்டு என்னைக் கட்டிப்போட்டு விட்டுப் போங்களப்பா என்பேன். உதை மிச்சம், சந்தேகமும் விழாது."

"இது சரியா மிஸ்டர்?"

"சரியாவது? இந்த ரூபாய் 'பாஸ்டர்' கம்பெனிக்கு எத்தனை முக்கியமோ அதைவிட என் மனைவிக்கு நான் முக்கியம் ஸார். இந்த வயதிலே உதைபட்டுச் சாவானேன்?"

இந்தச் சம்பாஷணை மகாதேவய்யரின் மனதில் பலதரப்பட்ட உணர்ச்சிகளை மூட்டியது. தம் முகம் தன்னையும் அறியாமல் மாறி விடப் போகிறதே என்று பயந்து சட்டென்று அறையை விட்டு வெளியேறினார்.

அவர் இதற்குள் வழிப்பறி செய்ய ஒரு ஆளைக் கூட யோசனை செய்து வைத்திருந்தார். "மாட்டிக் கொள்ளாமல் அவனைக் கொண்டு காரியத்தை முடித்துவிடவேண்டும். ஸகஸ்ரநாமம் தான் எதிர்க்கக்கூட மாட்டேன் என்கிருன். நல்லதாயிற்று. ஒருவருக்கும் அபாயம் இல்லை. நமக்கு லாபம்..." என்று எண்ணத்தை ஓட்டினார் அவர். தான் நினைத்துக் கொண்டிருந்த 'கூட்டாளி'யை எப்படிப் பார்த்துப் பேசுவது என்ற நினைப்பில் மூழ்கினார் அவர். இரண்டு மூன்று நாட்களுக்குள் போய்ப் பார்த்து முடித்துக் கொள்ள வேண்டும். அப்புறம்!...... அப்பாடா! கஷ்டம் எல்லாம் விடிந்து விடும். தமக்கு அத்தனை உறுதி எப்போது எப்படி ஏற்பட்டதென்று அவருக்கே தெரியவில்லை.

* * * *

மறு நாள் காலை 11-30 மணி இருக்கும். ஐயர் தம் வேலையில் ஈடுபட்டிருந்தார். அவர் அன்று கொஞ்சம் 'லேட்!.' எல்லாருமே சிரித்த முகத்துடன் ஏதேதோ பேசிக் கொள்வதை அவர் கவனித்தார். காஷியரையும் காணவில்லை. திடீரென்று 'கசமுச' சத்தம் எழுந்தது. ஐயர் போய்ப் பார்த்தால், நாலைந்து பேர் ஏதோ சொல்லிக் கொண்டிருக்க, ஒரு பெரிய கும்பல் அவர்களைச் சூழ்ந்து கொண்டிருந்தது.

"அக்கிரமம் ஸார்! பட்டப் பகலிலே..."

"உலகம் அத்தனை கெட்டுப் போயிருக்குஸார்."

"அந்த மனுஷனுக்குத் தான் எத்தனை தீரம்! என்ன நன்றி விசுவாசம்! கழுத்திலே அடி விழற மட்டில் அசைஞ்சு கொடுக்கல்லியே..."

"இப்படிப்பட்ட மனுஷாளாலே தான் கொஞ்சம் மழையாவது பெய்யறது."

"த்ஸோ...த்ஸோ...அடி ரொம்ப பலமா ஐயா!"

"எந்த இடத்திலே நடந்ததுங்க?..."

மகாதேவய்யருக்கு ஒன்றுமே புரியவில்லை. இந்தச் சமயத்தில் கம்பெனி மானேஜிங் டைரக்டர் மிஸ்டர் ஸ்டேதாம் காரில் வந்து விஷயத்தை விளக்கலானார்...... தீபாவளி வருவதை முன்னிட்டு ஐந்து நாட்கள் முன்னதாகவே சம்பளமும் போனஸும் கொடுக்க அன்று காலை தான் தீர்மானித்தார்களாம். அதற்குத் தான் அன்றே பணம் எடுத்துவர ஆள் அனுப்ப வேண்டி வந்தது. வழக்கமாகப் போகும் ஸஹஸ்ரநாமம் வராததால் காஷியர் கங்காதரமே போக வேண்டியதாயிற்று. இதை எப்படியோ தெரிந்து கொண்ட ஒருவன் தன் சகாக்களுடன் காரைத் தனிமையான திருப்பத்தில் வழிப்பறி செய்திருக்கிருன். உடல் தளர்ந்திருந்தாலும் காஷியர் போராடினார். பலன்?... ஆஸ்பத்திரியில் கிடக்கிருர். திருடர்கள் என்னவோ தப்பி விட்டனர். ...... இதையெல்லாம் சொல்லிவிட்டுக் கங்காதரத்தின் சேவையையும், வீரத்தையும் கம்பெனி

என்றென்றும் மறவாது என்று கூறி முடித்தார் மிஸ்டர் ஸ்டேதாம்.

மகாதேவய்யருக்குத் தலை சுற்றியது. பேசாமல் போய்த் தம் இடத்தில் உட்கார்ந்தார். தாம் செய்ய எண்ணியிருந்த காரியத்தின் பயங்கரம் அப்போதுதான் அவருக்குப் புரிந்தது...பாவம்! ஏதோ பணம் இல்லாத கொடுமையால் முன்பின் எண்ணியறியாத தீர்மானம் அவர் மனதைப் பேய் மாதிரி பிடித்து உலுக்கியது. துன்பத்தையே கண்ட அவர் எங்கும் வெறுப்பையே கண்டார். அதினின்று மீள, சுருக்கு வழியை நாடினார். இந்த நிகழ்ச்சி அவரது நல்லுணர்ச்சியைத் தூண்டி விட்டுத் தம்மையே வெறுத்துக்கொள்ளும்படி செய்தது. தாம் திட்டமிட்டதற்கும் இப்போது நடந்துள்ளதற்கும் உள்ள ஒற்றுமை அவர் மனதை உழப்பியது. காரியம் யார் செய்தாலும் பலன் ஒன்றுதான்; அவர் தம் தீர்மானம்பற்றி வெளியே மூச்சுவிட்டதில்லை: என்றாலும் கங்காதரம் அடிபட்டதற்குத் தாமே காரணம் என்ற உணர்ச்சி அவர் மனதில் வேரூன்றியது. குற்றமுள்ள நெஞ்சு படபடவென்று அடித்துக்கொண்டது...

எல்லோரும் 'காஷியரை' ஆஸ்பத்திரியில் போய்ப்பார்த்தனர். அவர் மனைவி அழுது கொண்டே தலைமாட்டில் உட்கார்ந்திருந்தாள். அவர் உயிருக்கு ஆபத்தில்லை என்று தெரிந்து கொள்ளும்வரை மகாதேவய்யரின் உயிர் அவர் உடலில் இல்லை! 'காஷியர்' மனைவியின் தீனமான பார்வை' 'பண்டிகையும் அதுவுமாக என் கணவரை இப்படி அடித்துப் போட்டுவிட்டாயே...' என்று ஐயரைக் கேட்பதுபோல் அவருக்குப்பட்டது. அழுதுவிட்டார் அவர். "கோழை மனது... பாவம்" என்று எல்லாரும் சொன்னார்கள். ஆனால், 'குற்றமுள்ள நெஞ்சு' என்று அவருக்குத் தானே தெரியும்?"

ஆபீஸுக்குத் திரும்பினதும், ஸகஸ்ரநாமம் ஒரு யோசனை சொன்னான். "கங்காதரத்தின்வைத்தியச் செலவுகளுக்காகக் கம்பெனி பணம் கொடுக்கும் என்றாலும் நாமும் தனியே ஒரு நிதி திரட்டித் தரவேண்டும்" என்றான். உண்டிப் பெட்டி எல்லார் முன்பும் வந்தது. ஐயருக்குக் கிடைத்த மொத்தம் ரூபாய் முந்நூறில், கடன் நூறு ரூபாய் கொடுத்ததுபோக மீதி ரூ 200 இருந்தது. உண்டியில் பணத்தைப் போடுமுன் ஐயர் கண்களில் வெம்பனி சொரிந்தது. தாம் செய்த தவறுக்கு—எண்ணின எண்ணத்துக்கு—இது போதிய பிராயசித்தம்தானா என்று ஏங்கினார் அவர். சில நாட்களாகப் புதையுண்டிருந்த அவரது 'நல்ல மனம்' இப்போதிருந்த குற்றமுள்ள மனத்தைக்கிழித்துக்கொண்டு மேல்வந்து நின்றது...

அன்று வீடு திரும்பும்போது அவர் நினைத்தார், பாவம்! காமாட்சி எத்தனை நல்லவள்? எத்தனை பொறுப்புடன் காரியம் செய்கிறாள்! ஒருநாளாவது சலித்துக்கொண்டதுண்டா? நம் அதிர்ஷ்டத்துக்குப் பாவம்... அவர்களைச் சொல்லி என்ன பயன்?... இப்படி எண்ணலானார் அவர்.

"என்ன சீக்கிரமே வந்துவிட்டேள்?" என்று விசாரித்த மனைவியிடம், ஐயர் "சம்பளமும் போனஸும் கொடுத்தார்கள்..." என்றார்.

அம்மாளின் கண்கள் விரிந்தன. "எங்கே கொடுங்கோ. பார்க்கலாம்...செலவு கூட அத்தனை இராது... சாவித்திரி வரல்லையாம், எழுதியிருக்காள்" என்றாள்.

ஐயர் எங்கோ பார்த்துக்கொண்டு, "பணம் தம்பிடி கூட இல்லை காமு" என்றார்.

"பிக் பாக்கெட்' அடித்து விட்டானா என்ன? அட பாவமே" என்று காமாட்சி சொல்ல ஆரம்பிப்பதற்குள் ஐயர், "காமு! இன்று ஒரு பெரிய பாவத்துக்குப் பிராயச்சித்தம் செய்தேன்" என்று ஆரம்பித்து நடந்ததை எல்லாம் சொல்லிக்கொண்டே வந்தார். கடைசியில் மனம்பொங்க அழுதுவிட்டார். "என்னை மன்னித்துவிடு காமு என்றார்."

சிறிது நேரத்திற்குப் பின் காமாட்சி தயங்கினபடியே, "நான் கூட ஒரு விஷயம் சொல்லலாமென்று இருக்கேன். நமக்கு ஏற்கனவே வீட்டில் ஐந்து குழந்தைகள் இருக்கா. லலிதா தான் கடைசி என்று நினைத்துக் கொண்டிருந்தால்... ..." என்று இழுத்தாள்.

"ஒன்றுக்கும் கவலைப்படாதே காமு! இன்னொரு குழந்தை பிறந்தால் அதற்காகக் சலித்துக் கொண்டால் நடக்குமா? உடம்பைப் பார்த்துக் கொள். எல்லாம் அவன் செயல்."

"என்ன, திடீர் என்று ஞானோதயமும் வேதாந்தமும்" என்று கேலி செய்தாள் காமாட்சி அம்மாள்.

"குற்றமுள்ள நெஞ்சு" என்று வாயோடுசொல்லிக் கொண்டார் ஐயர்.

ஐயரின் மன மாற்றத்தைக் கண்டு காமாட்சி அம்மாள் அதிசயப்பட்டுக் கொண்டிருந்த அதே சமயம், நிதிப்பெட்டியைத் திறந்து பணத்தை எண்ணிக்கொண்டிருந்த மானேஜிங் டைரக்டர் ஸ்டேதாம்கூட ஆச்சரியப்பட்டார். யார் இத்தனை பணம் போட்டிருக்கக்கூடும் என்று யோசனை செய்தார்.

எத்தனையோ ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் ஐந்து ரூபாய் நோட்டுக்களுக்கும், நாணயங்களுக்கும் இடையே, கனமாக மடிக்கப்பட்ட புத்தப் புதிய இரண்டு நூறு ரூபாய் நோட்டுக்களும் இருந்தன!



# இருள் அகன்ற கதை

நா. கி. நாகராசன்



ரயில்வண்டி புறப்பட்டுவிட்டது. பன்னிரண்டு வயதுச் சிறுவன் ஒருவன் போகும் ரயிலைப் பார்த்துப் பெரு மூச்செறிந்துவிட்டுத் தன்னைச் சுற்றிலும் பார்க்கிறான். தான் அரும்பாடுபட்டுச் சிறுகச் சிறுகச் சேர்த்த கண்ணாடி சீசாக்களும், குழல்களும் அவனைச் சுற்றிலும் சிதறிக்கிடந்தன. தனது ரசாயனச் சோதனைகளைச் செய்ய இனி இடம் இல்லை என்று நினைக்கும் போதே அவனுக்குத் துக்கம் தொண்டையை அடைத்துக்கொண்டது. ரயிலின் சாமான் வண்டிதான் அவனுடைய சோதனைச் சாலையாக இருந்தது. ரயிலடியில் பத்திரிகை விற்கும் நேரங்களைத் தவிர மற்றப்பொழுதையெல்லாம் அவன் சோதனையில் கழித்தான். அன்று தற்செயலாக ஒரு பாஸ்வரத்துண்டு தீப்பிடித்துக்கொண்டு ரயிலையே எரிக்கப்பார்த்தது. இதனால் கலவரமூற்ற அதிகாரிகள் அச்சிறுவனையும் அவனுடைய சோதனைக் கருவிகளையும் வெளியே விட்டெறிந்து விட்டார்கள். உணவையும், உடையையும் தியாகம் செய்து பணம் சேர்த்து வாங்கிய பொருள்களெல்லாம் போனபின் வாழ்ந்துதான் என்ன பயன்?

ஆனால் சோதனை வெறிகொண்ட அச்சிறுவன் வாழத்தான் செய்தான். வாழ்ந்ததுமட்டுமல்ல. தற்கால நாகரிகத்தின் போக்கையே மாற்றியமைத்துவிட்ட பல பொருள்களைக் கண்டுபிடித்து உலகில் அவன் பெயரை அறியாதவர்களே இல்லாதவாறு செய்துவிட்டான். தாமஸ் ஆல்வா எடிசனது பெயர் தெரியாதவர்கள் இல்லை. அவர் உலகிற்குச் செய்த பெரும் பணியின் சிகரமாக விளங்குவது அவர் அமைத்த மின்சார விளக்கு. அக இருளைப் போக்க முயன்ற பேரறிஞர் பலர் எக்காலத்திலும் இருந்துள்ளனர்: ஆனால் புற இருளைப் போக்கி இரவைப் பகலாக்கும் முயற்சிக்கு அடிகோலிய பெருமை ஒன்றே எடிசனை அமரராக்கும்.

கார்த்திகைத் திருவிழாவன்று எடிசனை நினைவு கூர்வது மிகவும் பொருத்தமானது. தீப ஒளியை நாம் எப்போதும் தெய்வத்தின் அம்சமாகக் கருதி வந்திருக்கிறோம். மற்ற நாடுகளிலும் பழங்காலத்திலிருந்தே தீபத்தைப் புனிதமாக மதித்து வந்திருக்கிறார்கள். இரவு நேரத்தில் தன்னைச் சூழ்ந்து பல ஆபத்துக்களுக்கும், பயங்கரக் கற்பனைகளுக்கும் இடம் தந்த இருளைப் போக்க உதவிய தீபம் மானிட நாகரிகத்தின் ஆதியிலேயே தோன்றி, அவனுடைய வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களுள் ஒன்றாக இருந்தது. மக்கள் ஒரு நாகரிகப் பாதையில் எவ்வளவு வரை முன்னேறி

இருந்தனர் என்பதற்குச் செயற்கையில் ஒளியைப் பெறும் முயற்சியில் அவர்கள் அடைந்த மேம்பாடு அளவுகோலாக விளங்குகிறது.

வெப்பத்தைப் பெறவும், கொடிய விலங்குகளினின்று தன்னைக் காத்துக்கொள்ளவும் ஆதி மனிதன் குகையில் மூட்டிய தீயே முதல் விளக்கு. தீயிலிருந்து கொள்ளிக்கட்டையை எடுத்து அவன் பந்தமாகப் பயன்படுத்தினான். தீப்பந்தத்தைப் பயனாக்கும் முறை உலகில் பல பகுதிகளில் இன்றும் வழங்குகிறது. குங்கிலியத்தைப் போன்ற எரியும் பிசினைக்கொண்ட மரக்கட்டைகளையும், துணியையும், தோலையும், கொழுப்பிலோ, எண்ணெயிலோ தோய்த்த பந்தங்களை அக்காலத்தில் வீடுகளிலும். தெருக்களிலும் பயனாக்கினார்கள். தற்கால நாகரிகத்தின் தொற்றுப் பரவாத சில பிரதேசங்களில் விந்தையான சில விளக்குகளை இன்றும் காணலாம். மேற்கிந்தியத் தீவுகளில் ஒரு சுரைக் குடுக்கையில் தொளைகள் போட்டு, அதற்குள் நூற்றுக் கணக்கான மின்மினிப் பூச்சிகளை அடைத்து அதை விளக்காகப் பயனாக்குகிறார்கள். ஜாவாவில் மெழுகை உருக்கி ஒரு தட்டில் ஊற்றி அதற்குள் பல மின்மினிகளை ஒட்டவைத்து வீடுகளில் விளக்காகப் பயன்படுத்துகிறார்கள். அழுகும் மரத்தின் மேல் வந்து படியும் சில பாக்டீரியா வகைகள் ஒளிதரும் திறனுள்ளவை. இவற்றையும் சில இடங்களில் விளக்காகப் பயன்படுத்துகிறார்கள். துருவப் பிரதேசங்களின் நீண்ட இரவைப் போக்கக் கொழுப்பு நிறைந்த விலங்குகளின் உடலே விளக்காக அமைகிறது. சடலத்தின் ஊடே ஒரு துணியைச் செலுத்தி அதைத் திரியாகப் பயன்படுத்துகிறார்கள்.




ஒளிர் விளக்கு
மி. மு—மின்முனைகள்
தொ. மு—தொடுமுனைகள்

கிறிஸ்து சகாப்தத்திற்குப் பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்னரே மண் அகல் விளக்குகள் தோன்றிவிட்டன. கார்த்திகையன்று நாம் வீட்டில் ஏற்றிவைக்கும் அகலின் வடிவம் பல ஆயிர ஆண்டுகளாகவே மாறாமல் உள்ளது. தாவர எண்ணெயை விளக்கெரிக்கப் பயனாக்கும் வழக்கம் இந்தியாவையொத்த கீழ்நாடுகளிலே இருந்தது. புவியில் கிடைக்கும் மண்ணெண்ணெயைக் கொண்டு விளக்கெரிக்கலாம் என்பது கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்கத்தில் ஐரோப்பாவில் அறியப்பட்டிருந்தது. ஆனால் பல நூற்றாண்டுகள் வரை இம்முறை வழக்கத்திற்கு வரவில்லை.

குத்துவிளக்கும், சரவிளக்கும், கோயில்களிற் பயனாகும் பலவேறு அமைப்புள்ள அழகிய விளக்குகளும் நம்நாட்டிற்கே சிறப்பானவை. சிறந்த வேலைப்பாடமைந்த உலோக விளக்குகளும் நூதனமான வகைகளில் எண்ணெயைத் திரிக்கு அனுப்பும் முறைகளும் நம் நாட்டில் தோன்றி மேனாடுகளுக்கும் பரவின. ஆனால் பல நூற்றாண்டுகள் வரை விளக்கின் அமைப்பிலோ, அதிற் பயனாக்கிய எண்ணெயிலோ உண்மையான அபிவிருத்தி யெதுவும் நிகழவில்லை. 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஆர்காண்டு (Argand) என்ற விஞ்ஞானி வட்ட வடிவமான பர்னரை




ஒளிர் விளக்கின் பகுதி பெரிதாக்கிக் காட்டப்பட்டது
பு. ஊ—புறவூதாக் கதிர்கள்
ப—ஒளிரும் படிகங்கள்
க—கண்ணாடி
ஒ—ஒளிக்கதிர்கள்

யும், குழல் போன்ற திரியையும், விளக்கிற்குத் தேவையான காற்றைக் கட்டுப்படுத்தும் அமைப்புங்கொண்ட விளக்கை அமைத்தார். விளக்கின் மேல் கண்ணாடி உருளையொன்றைக் கவிழ்த்து விட்டால் அது நிலையாக எரியும் என்றும் இவர் தற்செயலாகக் கண்டு பிடித்தார். இவர் அமைத்த விளக்கு செயற்கை ஒளியைப் பெறும் முயற்சியின் வரலாற்றில் மிக முக்கியமானது, ஏனெனில் இதன் பின்னரே பிரகாசமாகவும், நிலையாகவும் எரியும் எண்ணெய் விளக்குகளை அமைக்க முடிந்தது. இன்று நம் வீடுகளில் பயனாகும் மண்ணெண்ணெய் விளக்குக்களின் அமைப்பு ஆர்காண்டு விளக்கையே ஒத்தது,

எண்ணெய் விளக்குகளைப் பற்றிக் கூறுமிடத்துப் பழங்காலத்திலிருந்து நம் நாட்டில் விளக்கெரிக்கப் பயனாகிய விளக்கெண்ணெயைப் பற்றிக் குறிப்பிட வேண்டும். புகையின்றி எரிந்து, உடல் நலத்திற்குக் கேடு விளைக்கும் வாயுக்களை வெளி விடாது எரியும் பொருள்களுள் விளக்கெண்ணெய் தலை சிறந்தது. மின்சார விளக்குகள் வழக்கத்திற்கு வருமுன் இந்திய ரயில் வண்டி

களில் ஆமணக்கெண்ணெய் விளக்குகள் பயனுகி வந்தன. இந்த எண்ணெயிலிருந்து எரிவாயு ஒன்றைத் தயாரித்து அலகாபாத் ரயில்வே ஸ்டேஷனில் விளக்கெரிக்கப் பயனுக்கி வந்தார்கள்.

ஓரிடத்திலிருந்து இன்னொன்றிற்கு எடுத்துச் செல்லத்தக்க விளக்குக்களில் மெழுகு வர்த்தி மிகப் பழமையானது. முதல் நூற்ருண்டிலேயே கிரேக்கர்களும், ரோமானியர்களும் சணல் கயிற்றை மெழுகிலோ, தாரிலோ தோய்த்தெடுத்து வர்த்தியாக எரித்தார்கள். உருண்ட மெழுகுக் கட்டைக்குள் திரியை அமைத்து எரிக்கும் வழக்கம் 4ஆம் நூற்ருண்டில் வழக்கத்திற்கு வந்தது. பெட்ரோலியத்திலிருந்து கிடைக்கும் பொருள்களை எரித்து ஒளியையும் வெப்பத்தையும் பெறும் வழக்கம் வரும்வரை மெழுகுவர்த்திகளே அதிகமாகப் பயனுயின. மின்சாரம் மனித வாழ்க்கையோடு ஒன்றிவிட்ட இந்நாளிலும் நாம் விசேஷ நாட்களில் பழங்கால எண்ணெய் விளக்குகளை ஏற்றிவைப்பதுபோல் மேனுடுகளில் கிருஸ்துமஸ் போன்ற திருநாட்களில் மெழுகு வர்த்திகள் ஏற்றிவைக்கிருர்கள். இவற்றைச் செருக அழகிய வடிவுள்ள விளக்குக்களை அமைக்கிருர்கள். திமிங்கிலக் கொழுப்பு நெடுநாட்கள்வரை மெழுகுவர்த்தி செய்யப் பயனுகியது. தற்கால மெழுகுவர்த்தியில் ஸ்டியரின் (Stearin) என்ற கொழுப்புப் பொருளும், பாரபின் என்ற பெட்ரோலியப் பொருளும் உள்ளன. இது கெட்ட நாற்றமும், புகையும் இன்றிச் சீராக எரிந்து நல்ல ஒளி தருகிறது.

வில்லியம் மர்டாக் (William Murdook) என்ற ஸ்காத்லாந்துக்காரர் செயற்கை ஒளியைப் பெறும் முறைகளில் வேருெரு புரட்சிக்குக் காரணமானுர். நிலக்கரியிலிருந்து எரிவாயுவைப் பெற்று அதைக் கொண்டு விளக்கெரிக்க வழிகண்டார். இவரது முயற்சிகளுக்கு முதலில் ஆதரவு இருக்கவில்லை. ஆனுல் நிலக்கரிவாயுவின் சௌகரியங்கள் விரைவில் புலப்பட்டன. இதன் பின்னர் இம்முறை எங்கும் பரவியது, இந்த வாயுவை அடுப்பெரிக்கவும் பயனுக்குகிருர்கள். மலிவான மின்சாரம் கிடைக்கும் இந்நாளிலும் நிலக்கரி வாயு மின்சாரத்துடன் போட்டியிடுகிறது. பம்பாய் நகரில் தெருக்களில் நிலக்கரிவாயு விளக்குகள் இன்னும் ஒளிவீசக் காண்கிருேம்.

நிலக்கரி வாயு விளக்கின் பயன்பெருக வெல்ஷ்பா (Welsbach) என்னும் ஜெர்மானியர் கண்டுபிடித்த எரி உறையும் (Mantle) காரணமாக இருந்தது. தோரியம், சீரியம் போன்ற சில பொருள்களின் ஆக்ஸைடுகளின் மேல் நிலக்கரி வாயுவின் சுடர் படுமாறு அமைத்தால் இப்பொருள்கள் சூடேறிப் பிரகாசமாக ஒளிரும். இப்பண்பைப் பயனுக்க வெல்ஷ்பா ஒருவழிகண்டார். இப்பொருள்களை நீரில் கரைத்து, நேர்த்தியான பருத்தி இழையினுலான குழல் போன்ற உறையைச் செய்து அதை இக்கரைவில் தோய்த்தெடுத்து வாயு விளக்கில் பொருத்திவிடலாம். விளக்கைப் பற்றவைத்தால் பஞ்சு எரிந்துபோய் ஆக்ஸைடுகள் மட்டும் ஒரு கூண்டுபோல் அமையும். இதுவே எரிஉறை என்பது. இவ்வுறை நிலக்கரி வாயுவினுல் சூடேறி மிகப்பிரகாசமான ஒளிதரும். இந்த நூற்ருண்டின் தொடக்கத்தில் வழக்கத்திற்கு வந்த எரிஉறை விளக்குகள் அதுவரை அமைக்கப்பட்ட மற்றெல்லா விளக்குகளையும் விடப் பிரகாசமாக எரிந்தன. நிலக்கரி வாயுவிற்குப் பதில் மண்ணெண்ணெயைப் பயனுக்கும் விளக்குகள் கலியாண ஊர்வலங்களின் இன்றியமையாத அம்சமாக நம் நாட்டில் இடம் பெற்றுவிட்டன.



எடிசனது விளக்கு

மின்சாரத்திலிருந்து ஒளியைப் பெற முடிந்த பின்னரே இரவைப் பகலாக்கும் முயற்சியில் மானிடன் வெற்றிபெற்றுன் எனலாம். இதற்கான முயற்சி சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்னரே தொடங்கியது. கந்தகத்தாலான கோளம் ஒன்றை வேகமாகச் சுழற்றி அதைக் கையினுல் அழுத்தினுல் உராய்வினுல் மின்சாரம் தோன்றிக் கந்தகம் ஒளிர்வதை ஜெர்மானிய நகரம் ஒன்றின் நகரசபைத் தலைவராக இருந்து விஞ்ஞானத்தைப் பொழுதுபோக்காகக் கொண்டவான்கெரிகே (Von Guericks) என்பவர் காட்டினுர். இதுவே முதலாவது மின்சார 'விளக்கு' எனலாம். கணப்பொழுது ஒளிர்ந்து மங்கிய கந்தகக் கோளத்தை நடைமுறையில் விளக்காகப் பயனுக்கமுடியவில்லை. ஆயினும் இவரது சோதனையைத் தொடர்ந்து வேறு பலரும் மின்சாரத்தினுல் ஒளியைப் பெற முயன்றனர். ஆனுல் இவர்கள் சரியான முறையில் ஆராய்ச்சி நடத்தாததால் இவர்களது முயற்சிகள் பலனளிக்கவில்லை.

19ஆம் நூற்ருண்டின் தொடக்கத்தில் சர் ஹம்பிரி டேவி (Sir Humphrey Davy) என்ற விஞ்ஞானி மின்சார ஒளியைப் பெறும் தற்கால முறைக்கு வழி காட்டினுர். பிளாடினம் என்னும் உலோகத்தினுலான கம்பியின் வழியே மின்சாரத்தைச்செலுத்தினுல் அது பழுக்கக் காய்ந்து ஒளி தரும் என இவர் காட்டினுர். இதன் பின்னர் வேருெரு வகையில் ஒளியைப்பெறும் முறை வழக்கத்திற்கு வந்தது. மின்சாரத்தைத் தரும் அமைப்புடன் இரு கரித்துண்டுகளையோ, உலோகக் கம்பிகளையோ இணைத்து அவற்றை ஒன்ருேடொன்று தொடுமாறு செய்து பின்னர்ப் பிரித்து வைத்துவிட்டால் துண்டங்களின் இடையில் மின்சாரம்

பாய்ந்து மிகப் பிரகாசமான ஒளியைத் தருகிறது. இது மின்வில் Electric Fire) எனப்படும். ஜாப்லாச்கார் (Jablochkar) என்னும் ரஷிய விஞ்ஞானி அமைத்த மின்வில் பல ஐரோப்பிய நாடுகளில் வழக்கத்திற்கு வந்தது. இக்காலத்திலும் மின்வில் விளக்குக்கள் எஞ்சினின் துருவ விளக்குக்கள் (Search lights) போன்றவைகளில் பயன்படுகின்றன.

ஆனால் எளிய அமைப்புள்ளதும், நெடுநாள் உழைக்கத் தக்கதுமான மின்சார விளக்கினை அமைக்கப் பல அறிஞர்கள் முயன்றனர். சலிப்பற்ற உழைப்பும், அளவற்ற பொறுமையும், தமது சோதனையின் வெற்றியில் திடமான நம்பிக்கையும் எடிசனுக்கு இம்முயற்சியில் வெற்றி தேடித் தந்தன. இவர் அமைத்த மின்சார விளக்கு 1879ஆம் ஆண்டில் மென்லோ பார்க் (Menlo Park) என்ற இடத்தில் எரிந்தது. இவர் காற்றகற்றப்பட்ட கண்ணாடிச் சிமிழுக்குள் கரியாலான இழையொன்றை அமைத்து, அதன் வழியே மின்சாரத்தைப் பாய்ச்சி அதைச் சூடேற்றி, அது ஒளிருமாறு செய்தார். பத்தொன்பதாம் நூற்றாண்டு முடிவதற்குள் எடிசனது முறையைப் பின்பற்றி அமைக்கப்பட்ட மின்சார விளக்குக்கள் வழக்கத்திற்கு வந்தன.

எடிசனது கரி இழை விளக்கில் பல குறைகள் இருந்தன. இது அதிகமான மின்சாரத்தைச் செலவழித்துக் குறைவான ஒளியையே தந்தது. அது விரைவில் கெட்டுப்போயிற்று. அதன் இழை சிறு அதிர்ச்சியினாலும் அறுந்துபோயிற்று, அதைத் தயாரிப்பதும் கடினமாக இருந்தது, ஆகையால் எளிதில் உருகாத உலோகக் கம்பிகளை விளக்கில் பயனாக்க முயற்சி நடந்தது. டங்ஸ்டன் என்னும் உலோகம் இதற்கு ஏற்றதாக இருந்தது. ஆனால் அதை மெல்லிய இழையாகத் தயாரிப்பது பெரும்பாடாக இருந்தது, ஜெர்மானிய ரசாயன அறிஞர் இம்முயற்சியில் வெற்றி பெற்றனர், அது முதல் மற்றப் பொருள்களைத் திரியாகப் பயனாக்கும் வழக்கமே மறைந்தது. டங்ஸ்டன் இழை விளக்குக்களில் ஆர்கான் (Argon) என்னும் வாயுவை நிரப்புவதால் அது இன்னும் திறமையாக இயங்கும் என்று கண்டுபிடித்தார்கள். இழையின் அமைப்பிலும் பல திருத்தங்கள் செய்யப்பட்டன. தற்கால மின்சார விளக்கு எடிசனது விளக்கைப் போல் இருபது மடங்கு "ஒளியைத் தரவல்லது என்பதிலிருந்தே இதன் திறமை விளங்கும். மிளகத்தனையுள்ள சிறு மின்சார விளக்கு மூக்கையும், தொண்டையையும் மருத்துவர் ஆராயப் பயனாகிறது. விமான நிலையத் திசைகாட்டிகளில் பயனாகும் பிரம்மாண்டமான விளக்கோ இருபதாயிரம் மெழுகுவர்த்திகளை ஒருங்கே ஏற்றிவைத்தது போல் ஒளி வீசுகிறது. ஷிகாகோ நகரிலுள்ள விமான நிலையத்தில் உள்ள திசைகாட்டி விளக்கொன்று 200 கோடி மெழுகுவர்த்திகளின் ஒளியை வீசி இரவு வானை அலங்கரிக்கிறது. ஓராண்டிற்குச் சுமார் 200 கோடி மின்சார விளக்குகள் உற்பத்தியாகின்றன. இவற்றைத் தயாரிக்க 30,000 டன் கண்ணாடி தேவை.

வேறுவகை மின்சார விளக்குகளும் இக்காலத்தில் வழக்கத்திற்கு வந்துள்ளன. ஒரு கண்ணாடிக் குழாயில் ஒரு வாயுவை அடைத்து அதன் வழியே மின்சாரத்தைப் பாய்ச்சினால் அது ஒளிருகிறது. இவ்வாறு தோன்றும் ஒளியின் நிறம் குழலிலிருக்கும் வாயுவைப் பொறுத்தது. நியான் என்ற வாயு நல்ல ரோஜா நிறமாக ஒளிருகிறது. பல வேறு வடிவுள்ள விளம்பர விளக்குகளில் இது பயனாகிறது. சோடியம் ஆவி நிறைந்த விளக்குகள் மஞ்சள் நிறத்துடன் ஒளிவீசுகின்றன. இவை தெரு விளக்குகளாகப் பயன்படுகின்றன. பாதரச ஆவி விளக்கு நீல நிறத்துடன் ஒளிருகிறது. இது தெருக்களிலும், ரயில்வே ஸ்டேஷன்களிலும் பயன்படுகிறது. வேறு பல ஆவிகளின் கலவையையும், பலவகைக் கண்ணாடிகளையும் கொண்டு பல அழகிய நிறங்களைப் பெறமுடிகிறது.

அண்மையில் வழக்கத்திற்கு வந்திருக்கும் ஒளிர் விளக்குகள் (Fluorescent Lamps) இன்னொரு புரட்சியை விளைத்துள்ளன. இதில் நீண்ட குழலின் இரு முனைகளில் இரு மின் முனைகள் இருக்கும்: குழலில் பாதரச ஆவியும், சிறிதளவு ஆர்கான் வாயுவும் இருக்கும். கண்ணாடியின் உட்புறத்தில் சில ரசாயனப் பொருள்கள் பூசப்படுகின்றன. மின் முனைகளின் வழியே மின்சாரத்தைப் பாய்ச்சினால் பாதரசத்தில் மின்னோட்டம் பாய்ந்து கண்ணுக்குப் புலனாகாத புறவூதாக் கதிர்கள் (Ultra Violet rays) தோன்றுகின்றன. இக்கதிர்கள் கண்ணாடியின் பூச்சின்மேல் விழும்பொழுது அப்பொருள்கள் ஒளிர்ந்து ஒளி தருகின்றன. பூச்சிலுள்ள பொருள்களை மாற்றித் தேவையான நிறங்கொண்ட ஒளியை இவ்விளக்கில் பெறலாம். கதிரொளியை ஒத்த ஒளியைத் தரும் பகலொளி விளக்குகள் இப்போது அதிகமாக வழக்கத்தில் உள்ளன. ஒளிர் விளக்கின் ஒளியில் நிழல்கள் மங்கலாக இருப்பதும், ஒளி ஒரே சீராக இருப்பதும் கண்ணுக்கு நலந்தருகிறது. இது சாதாரண மின்சார விளக்கைப் போல் நான்கு மடங்கு ஒளி தருகிறது. வருங்காலத்தில் இவற்றின் பயன் இன்னும் அதிகமாகலாம். மின்மினிப் பூச்சி வெப்பமே இல்லாது ஒளியை மட்டும் வெளிவிடும் வித்தையைக் கற்றுள்ளது. அரும்பாடுபட்டு மானிடன் இதன் ரகசியத்தை அறிந்துவிட்டான். இப் பூச்சியைப் பின்பற்றித் தானும் "குளிர்ந்த ஒளி"யைப் பெற முயல்வதே இனி அவனது குறிக்கோளாக இருக்கும்.

Edited & Published by N. R. Ramanujam & Printed by S. Rangaswami
at the Cauveri Colour Press, Besant Road, Kumbakonam.

# டாடா அக்ரிகோ கருவிகள்

உறுதியானவை, பலமானவை, நீடித்துழைக்கக்கூடியவை. அவை ஹை கார்பன் எஃகிலிருந்து தயாரிக்கப்பட்டவை. வேலை செய்வதற்கு ஏற்றவாறு அவை தயாரிக்கப்பட்டு தீட்டப்பட்டவை. எல்லாவித சோதனைகளிலும், அக்ரிகோ கருவிகளே சிறந்தவைகளாகக் கருதப்படுகின்றன.





மேற்கு இந்தியக் கொத்து



டாங்க் மண்வெட்டி



மைசூர் மண்வெட்டி



ஸ்வான் நெக் மண்வெட்டி

எல்லாவித நிலங்களுக்கும்

# அக்ரிகோ

கருவிகளே தகுதியானவை




**தி டாடா அயரன் அண்ட் ஸ்டீல் கம்பனி லிமிடெட்**

ஸேல்ஸ் ஆபீஸ்:

23B, நேதாஜி சுபாஷ் ரோட், கல்கத்தா-1

கிளை ஆபீசுகள்:

பம்பாய், மதராஸ், நாக்பூர், அஹமதாபாத், ஸெகந்திராபாத், விஜயநகரம் கண்டோன்மெண்ட், ஜலந்தர் கண்டோன்மெண்ட், கான்பூர்.

AG.3358

இணையில்லா
வாசனை
தயாரிப்புகள்

GOKUL
HAIR OIL

டி.எஸ்.ஆர்
அரைக்கீரை விதை தைலம்
சந்தனாதி
தைலம்
கோகுல் ஹேர்
ஆயில்

T.S.R. & CO.
Sandanathi
Thailam
T.S.R. & CO. KUMBAKONAM

T.S.R. & CO.
Araikeeraivida
Thailam
T.S.R. & CO. KUMBAKONAM

FAS.

டி. எஸ். ஆர். & கோ., கும்பகோணம்.

The Cauveri Colour Press, Kumbakonam.